# "ஸ்..ஸ்..பாரும்மா, ரொம்ப அரிக்குது..எரியிதும்மா."

உபயோகியுங்கள்
**நைஸில்.**
உடனடி நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு பவுடர்.



2 திருகு
டப்பாக்களில்
கிடைக்கிறது
'நீலம்' மற்றும்
'சந்தனம்'.




**வாங்குவீர்
நைஸில்
விரட்டுவீர்
வியர்க்குருவை.**

மருந்துப் பொருட்கள் அடங்கிய—நைஸில்:

1. அதிக வியர்வையைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

CASGLN-4-182 TAM

மங்கையர் மலர்

அக்டோபர் 1981










சந்தா விவரம்
தனிப்பிரதி ரு. 1-50
ஆண்டுச் சந்தா ரு. 18/-
ஆறு மாத சந்தா ரு. 9/-

Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Editor: K. Kasturi Rangan



□ ''சுமதியை நானே கல்யாணம் செஞ்சுக்கறேன்'' என்ற வரியைப் படித்ததும் அதிர்ச்சியைத் தந்தது. இது போன்ற வரி என் வாழ்விலும் நடந்து முடிந்த என் நினைவுகளை ஞாபகப்படுத்தியது. மறக்க முடியாத சோலையில் புறப்படும் தென்றலாம் வந்து தழுவிய கதையை மீண்டும் மீண்டும் படித்து மகிழ்வு கொண்டேன். நான் மட்டும் அல்ல!
எஸ். எஸ். குளம் பிருந்தா உமாபதி

□ செப்டம்பர் இதழ் கண்டேன். பெண்ணொளி. மனோரமாவின் 'கத்துக்குடுக்க வாரீகளா?' கட்டுரை மனோகரமாய் ஜொலித்தது.
பிரதிபா ராஜகோபாலனின் 'சரிநிகர் சமானம்' நாவலை முழுதாய்ப் படித்த பின்னரே தூங்க முடிந்தது. அற்புதம்.
சங்கரன்கோவில் —கலாபாரதி

□ சிவசங்கரி சகோதரி தனக்குப் பிரச்னையே தன் கதையால் ஏற்படவில்லை என்பதைக்கூட ஒரு சிறு கதையைப் போல சுவையாகச் சொல்லியுள்ளார்.
பெங்களூர்-21 பாரதி

□ 'கத்துக்குடுக்க வாரீகளா?' மனோரமாவின் பேட்டியில் இதுவரையில் வெளிவராத பல விஷயங்களைக் கொணர்ந்திருக்கிறார் பேட்டி கண்ட மஞ்சுளா ரமேஷ். படிக்கச் சுவையாக இருந்தது.
கும்பகோணம் டி.எஸ். சீதாராமன்

□ என்னுடைய துணுக்கு ஒன்றாவது மங்கையர் மலரில் இடம் பெறாதா என நான் ஏங்கிக் கொண்டிருக்கும்போது குமாரி வி. ராஜேஸ்வரியின் அதிர்ஷ்டத்தைப் பாருங்களேன்! அவருடைய ஒரே துணுக்கு 17ம் பக்கத்திலும் 37ம் பக்கத்திலும் ஆக இரு முறை பிரசுரமாகியுள்ளதே!
திருச்சி-20 —சீதா பஞ்சு

□ ஒவ்வொரு மாதமும் எங்கள் குடும்பத்தினர் மங்கையர் மலரை ஆவலோடு எதிர்பார்க்கிறார்கள். ஏன் தெரியுமா? புத்தகத்தைப் படித்துவிட்டுப் புதிது புதிதாக நான் பலகாரங்களைச் செய்வேனாம். இவ்வளவு அருமையான சமையல் குறிப்புக்களும், ஏராளமான யோசனைகளும் போட்டு அருமையான குடும்பப் பத்திரிகை ஆக்கியிருக்கிறீர்கள்.
மருதமலை நீலாயதாட்சி

□ ஸ்ரீவேணுகோபாலனின் 'இந்த' மாதிரியான எழுத்துக்கள் இப்பொழுது மங்கையர் மலரில்தான் கிடைக்கிறது. படிக்கும்போதே கண்களில் நீர் தளும்புகிறது. அதற்காக உங்களுக்குக் கரம் கூப்பி நன்றி சொல்கிறேன்.
செங்கல்பட்டு ஹரிஹரன்

□ இதுவரை சட்டப் பகுதியாக வந்தது இப்பொழுது பொதுப் பகுதியாகிவிட்டதே! நாங்கள் எங்களுக்குச் சந்தேகம் எழும் போது கேள்விகளை அனுப்பலாமா? எந்த முகவரிக்கு அனுப்ப வேண்டும்?
திண்டிவனம் மங்களம்

(அதற்கான அறிவிப்பை அந்தப் பகுதியிலேயே வைத்திருக்கிறோம். மங்கையர் மலர் பகுதிக்கே கேள்விகளை அனுப்பலாம்.
—ஆசிரியர்)



# வரதட்சணை வராத...

டில்லியில் திரு சங்கர் ஐ.ஏ.எஸ். அவர்களைத் தெரியாதவர்கள் மிகவும் குறைவு.

அரசாங்கத்தில் பெரிய உத்தியோகத்தில் இருந்தாலும் ஆபீஸ் தவிர மற்ற பொது இடங்களுக்கு வரும்பொழுது சாதாரண பைஜாமா, ஜிப்பாவை மாட்டிக் கொண்டு தான் ஒரு 'சிம்பிள்' ஆசாமி என்ற இமேஜை உண்டாக்குவதில் வல்லவர். சும்மா சொல்லக்கூடாது. பியூன் வீட்டில் கல்யாணம் என்று அழைத்தால் கூடத் தவறாமல் ஆஜராகி விடுவார். அங்கு அவருக்குக் கிடைக்கும் ராஜோபசாரத்தையும், முக்கியத்துவத்தையும் அனுபவிப்பதில் உள்ள சுகமே தனியன்றோ?

எப்பொழுதும் கார் சவாரியும், ஏ.ஸி. அறைவாசமுமாக இருந்தாலும், சோஷலிஸம், ஏழை மக்களின் கண்ணீர், சமுதாய ஏற்றத் தாழ்வுகள், கிராம மக்களின் நலன் — இவற்றைப் பற்றி யெல்லாம் மிகவும் ஆதங்கத்துடனும் ஒருவிதமான தீவிரத்துடனும் இன்டலக்சுவலாகப் பேசுவார்.

திருமதி சங்கர் இவருக்கு ஒரு விதத்திலும் சளைத்தவள் அல்ல. ஐ.ஏ. எஸ். அதிகாரிகளின் மனைவிகள் சங்கத்தின் காரியதரிசியாக இருக்கும் இவர், சமூக சேவை செய்வதற்கென்றே தான் இப்பிறவி எடுத்திருப்பதாக எண்ணிக் கொண்டு, தன் குழந்தைகளைக் குளிப்பாட்ட ஆயா வைத்திருந்தாலும் சேரிகளுக்குப் போய் அங்குள்ள குழந்தைகளைக் கர்ம சிரத்தையாகக் குளிப்பாட்டுவார். (இவரைக் கண்டதும் ''குளிப்பாட்டும் மாமி வந்துட்டா, ஓடுங்கடா'' என்று சேரிக் குழந்தைகள் எல்லாம் அலறிப் புடைத்துக் கொண்டு ஓட்டம் பிடிக்கும் விஷயம் பாவம், இவருக்குத் தெரியாது) மேடைகளில் வரதட்சிணைக் கொடுமை, பெண்கள் சம உரிமை, இவற்றைப் பற்றி யெல்லாம் வீராவேசமாக முழங்குவது இவருக்குப் பிடித்தமான பொழுது போக்கு.

இந்த சங்கர் தம்பதியருக்கு கல்யாணம் பண்ணும் வயதில் ஒரு பிள்ளை இருக்கிறான். பெரிய அதிகாரியின் ஒரே பிள்ளை, அதுவும் எப்படிப்பட்டவர்களின் பிள்ளை? வரதட்சிணை வாங்கினோம், சீர் சௌத்தி கேட்டோம் என்பது இவர்கள் பரம்பரையிலேயே கிடையாது. வரதட்சிணை வாங்குபவர்களைக் குறைந்த பட்சம் பத்து வருடங்களாவது உள்ளே தள்ள வேண்டும் என்பது போன்ற உயர்ந்த கொள்கைகள் கொண்ட 'இலட்சிய'த் தம்பதியரின் ஒரே பிள்ளை. சும்மா விட்டு வைப்பார்களா பெண்களைப் பெற்றவர்கள்?

மிட்டாய்க் கடைகளில் ஈ மொய்ப்பது போல் சங்கரின் வீடு நோக்கிப் பெண்களைப் பெற்றவர்கள் திரள் திரளாகப் படையெடுக்க ஆரம்பித்தார்கள். ஆபீசில் சங்கர் போன்ற பெரிய அதிகாரிகளின் அறைக்குள் பிரவேசிக்க நடுங்கும் எல். டி. ஸி., யூ.டி.ஸி.க்கள், அஸிஸ்டெண்டுகள் எல்லோரும் சங்கர் தம்பதியரின் 'ஸிம்பிளிஸிடி' இமேஜில் மயங்கித் தங்கள் பெண்களுக்கும் காலணா செலவில்லாமல் இப்படிப்பட்ட இடம் கிடைக்காதா என்ற நப்பாசையில் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு சங்கர் அவர்களை அணுகினார்கள்.

ஞாயிற்றுக் கிழமைகளில் (மாலை நாலரையிலிருந்து ஆறு மணி ராகுகாலம் தவிர) சங்கர் வீட்டில் ஜே ஜே என்று சமாளிக்க முடியாத அளவு பெண்களைப் பெற்ற அப்பாவிகளின் கூட்டம். சங்கர் தம்பதிக்கு இது ஒரு பெரிய தொல்லையாகப் போய் விட்டது. வரதட்சிணை வாங்க மாட்டோம் என்று அவர்கள் சொன்னது என்னவோ உண்மைதான். அதற்காக அரசாங்கத்தில் பெரிய வேலையில், காரும் வீடுமாக இருக்கும் அவர்கள், கண்ட பெண்ணையும் தங்கள் பிள்ளைக்குப் பண்ணிக் கொள்ள முடியுமா: சாதாரண இடத்துப் பெண்ணுக்கு சொசைட்டியில் நாலு பேர்களிடம் இவர்களைப் போல் அழகாகப் பழக, அதாவது நடிக்கத் தெரியுமா? அதற்காக வரன் கேட்டு வருபவர்களின் உத்தியோகம் என்ன என்று பச்சையாகக் கேட்டுவிடவும் முடியாது. அப்படிக் கேட்டால் இவர்களுடைய ஸிம்பிளிஸிடி இமேஜ், இலட்சிய இமேஜ் எல்லாம் என்ன ஆவது! அதற்குப் பிறகு பொது இடங்

# ...திருமணம்!




ரமாமணி சுந்தர்

களில் சோஷலிஸம், அது இது என்று பேசி னால் நாலு பேர் கல்லை விட்டு எறிய ஆரம் பிக்க மாட்டார்களா?

சம்பந்தம் பேச வருபவர்களின் அந் தஸ்தை நிர்ணயிக்க, திருமதி சங்கர் பல உத்திகளைக் கையாள வேண்டியிருந்தது. உதாரணமாக, வருபவர் ஹெல்மெட்டும் கையுமாக வந்தால் அவ்வளவுதான், உடனே திருமதி சங்கருக்குத் தெரிந்து விடும், அவர் தன்னுடைய அந்தஸ்துக்குக் கால் தூசுகூடப் பெற மாட்டார் என்று. ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி அவரை அனுப்பி விடுவாள்.

சம்பந்தம் பேச வருபவர் வெறும் கையு டன், அதாவது ஹெல்மெட் இல்லாமல் வந்தால் அவரிடம் நாசூக்காக ''உங்கள் போன் நம்பரைக் கொடுத்து விட்டுப் போங்கள்'' என்பார். இதைக் கேட்டவுடன் வந்தவர் வீட்டில் போன் இல்லாதவராக இருந்தால் கூனிக் குறுகிக் கொண்டு, மேற் கொண்டு பேசுவதற்குக் கூடத் திராணி யின்றி முகத்தில் ஒரு குடம் அசடு வழிய அங்கிருந்து ஓட்டம் பிடிப்பார்.

அதற்காக ஃபோன் நம்பரைக் கொடுத்து விட்டால் உடனே திருமதி சங்கர் மயங்கி விடுவார் என்று நினைத்தீர்களா? ஏதாவது பெரிய ஆபீசருக்கு பி.ஏ.வாக இருந்தால் கூடத்தான் வீட்டில் தொலைபேசி இருக்கும்.

குறைந்த பட்சம் கார் வைத்துக்கொள் வதற்காவது வசதி இருக்க வேண்டாமா? வரன் கேட்டு வருபவர் காரிலிருந்து இறங்கி வந்தால் வரவேற்பு கொஞ்சம் தடபுட லாகத்தான் இருக்கும். காரில் வந்தாரா, நடந்து வந்தாரா என்பது தெரியாமல் குழப்ப மாக இருந்தால், தில்லியில் உள்ள போக்கு வரத்து வசதிகள், தில்லி பஸ் சர்வீஸின் திடீர் வேலை நிறுத்தங்கள் என்று எப்படி யெல்லாமோ சுற்றி வளைத்துப் பேசி ஒரு வழியாக விஷயத்தைக் கண்டு பிடிப்பதற் குள் போறும் போறும் என்று ஆகிவிடும் திருமதி சங்கருக்கு.

வெகு சீக்கிரத்திலே, இந்த ஞாயிற்றுக் கிழமை நாடகத்தால் அலுத்தும், சலித் தும் போன சங்கர் தம்பதி இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பது என்று தீர்மானித் தார்கள். இம்முறை திரு சங்கர் அவர்கள் முக்கிய பாகம் ஏற்றுக் கொண்டார். அடுத்த ஞாயிறு அன்று வந்த பெண்களைப் பெற்ற புண்ணியவான்களிடம்,

''நான் தனி மனிதன் சுதந்திரத்தை மதிக்கிறவன். அவனவன் எதிர்காலத்தை, வாழ்க்கையை நிர்ணயிக்கும் உரிமை அவ னையே சேர்ந்தது. அதனால் பிள்ளையின் கல் யாண விஷயத்தில் நாங்கள் தலையிடுவதாக இல்லை. அவனுக்கு வேண்டிய பெண்ணை அவனே தேர்ந்தெடுத்துக் கொள்வான்'' என்று சங்கர் ஒரு குட்டிப் பிரசங்கம் ஒன்று நிகழ்த்தவும், அந்தப் பேச்சு ஊரெல் லாம் பரவி அவர்கள் வீட்டுக்கு வரும் கூட்டம் மெதுவாக நின்றது.

கடிகாரம் அலாரம் அடித்தாலும் தூக்கத்தி லிருந்து எழுந்து கொள்ளாதவர்களை எழுப்ப ஒரு வழி, ஒரு தகரத்தை வைத்து அதன் மேல் கடிகாரத்தை வைத்தால் அலாரம் சத்தம் அதிக மாக இருக்கும். கும்பகர்ண தூக்கம் போடுபவர் களையும் அலறியடித்து எழுப்பும்.

- ஏ.வி. தேவன்



சங்கர் தம்பதியர் வெளியில் இப்படிச் சொல்லிவிட்டாலும், உள்ளூர அவர்களுக்கு ஒரே பயம்! பிள்ளை எங்கே சகதியில் போய் காலை வைத்துவிடப் போகிறானோ என்று.

இந்த இடத்தில் அவர்கள் பிள்ளை ராக வனைப் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல வேண்டும். பெற்றோருக்கு இத்தனை ''இலட்சியங்கள்'' இருந்தால் பிள்ளைக்கு அதில் கொஞ்சமாவது இருக்க வேண்டாமா? கம்யூனிஸம், மார்க்ஸிஸம் எல்லாம் பேசிக் கொண்டு திரியும் ராகவனுக்கு மறந்து போய்க்கூட தந்தையின் காரில் ஏற மாட் டேன் என்று சொல்லிக் கொள்வதில் ஒரே பெருமை. கல்யாணம் பண்ணிக் கொண் டால், தன் வீட்டில் பத்துப் பாத்திரம் தேய்க்கும் குப்பாயியின் மகளையோ, இல்லை அடுத்த வீட்டில் வேலை செய்யும் ராமாயி யின் தங்கச்சியையோதான் பண்ணிக்



கொதிக்கும் நீரை சிறிதளவு ஒரு டம்ளரில் ஊற்றி, அதில் சமையல் சோடா கொஞ்சம் போட்டால் பொங்கிவரும். அப்போது எண்ணெய் இறுங்கிய கல் பதித்த தோட்டைப் போட்டால் சிறிது நேரத்தில் எண்ணெய் நீங்கி தோடு பளிச்சென்று இருக்கும்.

- புஷ்பாதங்கராசு

கொள்வேன் என்று இளமை வேகத்தில் பிதற்றிக் கொண்டு கிடப்பான்.

"இந்தப் பைத்தியம் அசட்டுப் பிசட்டென்று ஏதாவது காரியம் செய்து வைக்கப் போகிறது" என்று சங்கர் தம்பதியர் பட்ட கவலை கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால் புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? தந்தையின் காரில் ஏற மறுத்த தனயன் அதே தந்தையின் பெயரைத் தக்க தருணத்தில் பயன்படுத்தி காருடன் கூடிய வேலை ஒன்றை வாங்கிக் கொண்டான். வேலை கிடைத்த கையுடன், ஒரு பெண்ணையும் தேர்ந்தெடுத்தான். ஏதோ குப்பாயி, ராமாயி குடும்பம் என்று நினைத்தீர்களா? கருப்பும் வெள்ளையுமாக ஏகப்பட்ட பணத்தை வைத்துக் கொண்டு திண்டாடும் தொழிலதிபர் உமாபதியின் ஒரே மகள். எப்பொழுதுமே இந்தத் தொழிலதிபர்களுக்கும் அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கும் காந்தம் போன்ற ஈர்ப்பு சக்தி இருக்கிறது பார்த்தீர்களா?

சங்கர் தம்பதியருக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. பிள்ளை பிடித்தாலும் பிடித்தான் பெரிய' கொம்பாகத்தான் பிடித்திருக்கிறான் என்று. ஆனால், பெண்ணின் தகப்பனாரிடம் சங்கர் ரொம்பக் கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

"வரதட்சிணை, சீர் என்றெல்லாம் பேச்சே எடுக்கக் கூடாது. எனக்குக் கெட்ட கோபம் வரும்; கல்யாணத்தில் ஒருவிதமான ஆடம்பரமும் கூடாது."

இந்தக் கல்யாணத்தைச் சாக்கிட்டு தன்னுடைய கருப்புப் 'பணத்தைக் கொஞ்சமாவது குறைக்கலாம் என்றிருந்த உமாபதிக்கு இதைக் கேட்டவுடன் ரொம்ப ஏமாற்றமாய்ப் போய்விட்டது. மேலும், "அடாடா! என்ன தடபுடலாகக் கல்யாணம் பண்ணினார் உமாபதி! கல்யாணம் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்" என்று நாலு பேர் புகழும்படியாகத். தன் வீட்டுக் கல்யாணம் இருக்காதே என்று நினைக்கையில் உமாபதிக்கு வருத்தமாகத்தான் இருந்தது. ஆனால் என்ன செய்ய முடியும்? என்ன இருந்தாலும் பெண்ணைப் பெற்றவர் ஆயிற்றே. வாயைத் திறக்க முடியுமா?

கல்யாண ஏற்பாடெல்லாம் ஆரம்பமாயிற்று. மாப்பிள்ளை ராகவனை கல்யாண சூட் தைப்பதற்காக அளவெடுக்கக் கூப்பிட்டார் உமாபதி. ஏதோ அவர் தன்னை அவமானப்படுத்தி விட்டது போல் குதி குதியென்று குதித்தான் ராகவன்.

"எனக்கு எதற்கு சூட்டெல்லாம்? கல்யாணத்துக்கு நான் ஸிம்பிளாக பைஜாமா தான் போட்டுக் கொள்ளப் போகிறேன்" என்று ஒரேயடியாகக் கூச்சல் போட்டான்.

திருமதி உமாபதி பெண்ணுக்கு வாங்கி வைத்துள்ள நகைகளையெல்லாம் கொண்டு வந்து ரொம்ப ஆசையுடன் (பெருமையுடன்) திருமதி சங்கரிடம் காட்டினாள். உடனே அவள்மீது ஒரேயடியாகப் பாய்ந்துவிட்டார் திருமதி சங்கர்.

"எங்களுக்கு இந்த ஆடம்பரமெல்லாம் பிடிக்காது என்று சொன்னோமே?" என்று அவர் வாய் சொல்லிக் கொண்டிருந்தாலும் கண்கள் எல்லா நகைகளுமாகச் சேர்ந்து, சுமார் 50, 60 பவுன் தங்கம் இருக்கும் போலிருக்கிறதே என்று எடை போட்டன.

சங்கர் அவர்கள் கட்டளைப்படியே கொஞ்சம் பேர்களையே கல்யாணத்துக்கு அழைத்தார்கள். தொழிலதிபர் உமாபதிக்குத் தன் நண்பர்களையெல்லாம் அழைக்காததை விட, சங்கரின் நண்பர்களை அதாவது மற்ற பெரிய அரசாங்க அதிகாரிகளையெல்லாம் அழைக்காததில் ரொம்ப வருத்தம். ஆனால் சங்கர் அவர்களோ தன்னுடைய ஸிம்பிளிஸிடி இமேஜ் கெட்டுவிடப் போகிறதே என்ற கவலையினால் இந்த விஷயத்தில் ரொம்பக் கண்டிப்பாக இருந்தார்.

'வரதட்சிணை வாங்காத கல்யாண வைபோகமே" என்று பாடி ஆரத்தி எடுக்காத குறை

யாகக் கல்யாணத்துக்கு வந்திருந்த கொஞ்ச நஞ்சப் பேர்களிடமும் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் (அப்படி வாய்க்காவிடில் சந்தர்ப்பத்தை உண்டாக்கிக் கொண்டு) வரதட்சிணை வாங்காத கல்யாணம் இது என்பதைச் சொல்லிக் கொள்ள சங்கர் தம்பதி மறக்கவில்லை.

மேலும், ''நாம் என்ன வரதட்சிணையா வாங்கினேம், சொந்தக்காரர்களுக்கெல்லாம் புடவை வாங்கிக் கொடுக்க'' என்று வரதட்சிணை வாங்காத கல்யாணம் என்பதைக் காரணமாகச் சொல்லி, நாத்தனர்களுக்கும், ஓர்ப்படிகளுக்கும் புடவை வாங்கிக் கொடுக்காமல் தப்பித்துக் கொண்டார் திருமதி சங்கர். இல்லாவிட்டால் எந்தப் பெண்மணிக்கு, ஓர்ப்படிக்கோ, நாத்தனர்க்கோ புடவை வாங்கிக் கொடுக்க ஆசை பாழாய்ப் போகிறது!

திருமணம் முடிந்து புறப்படுகையில் திருமதி சங்கர் தன் கணவரின் காதில் கிசுகிசுத்தாள். ''உமாபதி பெண்ணின் கல்யாணச் செலவுக்கு என்று ஏகப்பட்ட பணம் சேர்த்து வைத்திருப்பாரே, பேசாமல் அந்தப் பணத்தில் தில்லியில் ஒரு வீடு வாங்கிக் கொடுத்துவிடச் சொல்லுங்கள்.''

திரு சங்கர் விடைபெறுகையில் பெண்ணின் தந்தையிடம் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தார். ''எங்களுக்கு ஒன்றும் வேண்டாம். நீங்கள் உங்கள் பெண்ணின் திருமணத்துக்கென்று ஒதுக்கி வைத்திருப்பீர்களே அந்தத் தொகைக்கு....'' என்று அவர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே இடைமறித்து உமாபதி அவர்கள்,

''நீங்கள் சொல்லணுமா என்ன? எனக்குத் தெரியாதா உங்கள் மனைவி எவ்வளவு பெரிய சமூக சேவகி என்று. அதனுல் அவர் மகிழ்ச்சிக்காக நான் அந்தப் பணத்தில் அனுதை இல்லம் துவங்குவதற்காக டிரஸ்ட் ஒன்று அமைத்து விட்டேன்'' என்று வெகு உற்சாகத்துடன் தன் இட்டத்தை அறிவிக்கத் தொடங்கினுர்!

---

## எப்போதும் பெண் (இதுவரை...)

▫ அப்பாவுக்கு வயது நாற்பத்தி ஐந்து. அம்மாவுக்கு முப்பத்தி ஏழு. சரீரத் தேவையின்றி விலகிக்கொண்ட அவர்கள் ஒரு நாள் கரண்ட் நின்று போனதால், மொட்டை மாடிக்குப் போய்ப் படுத்துக் கொண்டார்கள். பாட்டியும் மூன்று பிள்ளைகளும் கீழே தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

நடு இரவில் விழித்துக் கொண்ட அப்பாவால் 'அவள்' ஜனித்தாள். பிரசவக் கோளாறினுல் அம்மா செத்துப் போனுள்.

பாட்டி, ''சண்டாளி! பொறக்கறதுக்கு முன்னுடியே தாய்க்காரியை முழுங்கினியா மூதேவி'' என்றுள்.

அப்பா, ''எங்களுக்கு இந்தக் குழந்தை வேண்டாம்'' என்று அம்மாவைப் பார்த்து அழுதார்.

நிலைமையைப் பார்த்த மேட்ரன் நமச்சிவாயத்துக்குப் போன் செய்தார்.

நமச்சிவாயம்—

குழந்தை இல்லாதவர். கந்தர் அலங்காரம் படிப்பவர். மனைவி பிள்ளை பெற்றுக்கொள்ள முடியாத நிலைக்கு ஏரானமாகிவிட்டாள். மேட்ரன் சொன்ன தகவலைப் பிடித்துக் கொண்டார்கள்.

''நீங்க எப்பக் கேட்டாலும் நான் திருப்பிக் கொடுக்கத் தயார். தங்கத்திலுல் தொட்டில் போட்டுர்றேன், குடுங்க'' என்றுர் அப்பாவிடம் வந்து.

அப்பாவுக்கு முதலில் யோசனைதான். பாட்டியும் பிள்ளைகளும் மறுத்தார்கள். ஆனுல், 'அவள்' விராட் விராட்டென்று அழுதாள்; வயதான பாட்டிக்கு முடியவில்லை. சிறு மூணு பிள்ளைகளால் என்ன செய்ய முடியும்?

அப்பா நமசிவாயத்துக்கு போன் செய்தார், அவரும் 'அவளை' எடுத்துச் செல்ல வந்து விட்டார்.

(கதை 25ம் பக்கம்)



# பரிசு பெற்ற சமையல் குறிப்புக்கள்

## முதல் பரிசு

### "கஜூர் மக்கி ஹல்வா"

**தேவையான பொருட்கள் :**

பச்சை மக்காச் சோளக் கதிரிலிருந்து உதிர்த்தெடுத்த சோளம் 1 டம்ளர்
பேரீச்சம்பழம் 15
சீனி ஒன்றே முக்கால் டம்ளர்
டால்டா ஒன்றரை டம்ளர்
வறுத்துத் தோல் நீக்கிய நிலக்கடலைப்பருப்பு 1 டேபிள்ஸ்பூன்
சாரப் பருப்பு 1 டீஸ்பூன்
ஜிலேபி கலர் அரைக்கால் டீஸ்பூன்
சுத்தப்படுத்திய கசகசா அரை டீஸ்பூன்
வெனிலா எஸ்ஸென்ஸ் 2, 3 துளிகள் (எஸ்ஸென்ஸ் வாசனை பிடிக்காதவர்கள் 2 ஏலக்காயைப் பொடித்துச் சேர்க்கலாம்)

**செய்முறை:**

பச்சையாக, பால் பிடித்திருக்கும் சோளக் கதிரிலிருந்து சோள மணிகளை உதிர்த்தெடுத்து ஆறு மணி நேரம் தண்ணீர் விட்டு ஊற வைக்கவும். பிறகு அதனை மிக்ஸியிலோ ஆட்டுக் கல்லிலோ நன்றாக அரைத்து, இரண்டு டம்ளர் அளவு கெட்டியான பாலை, மெல்லிய துணியில் வடிகட்டி எடுத்துக் கொள்ளவும்.

பேரீச்சம் பழத்தைச் சுத்தப்படுத்தி, கொட்டை நீக்கி சிறு துண்டுகளாக்கி சிறிது நீரில் வேகவைத்து நன்கு மசித்துக் கொள்ளவும்.

சோளப் பாலையும் பேரீச்சம்பழ விழுதையும் சீனியையும் சேர்த்து அடிக் கனமான பாத்திரத்தில் போட்டு அடுப்பில் வைத்துக் கிளறவும். சிறிது நேரம் கூட விடாமல் கிளற வேண்டும். இன்றேல் கட்டித்தட்டி விடும். பாதி வெந்து, வரும் சமயம் ஜிலேபி கலரை ஒரு ஸ்பூன் தண்ணீரில் கரைத்து ஊற்றவும். அத்துடன் ஒரு டம்ளர் டால்டாவை சூடு பண்ணி ஊற்றிக் கிளறிக் கொண்டே இருக்கவும். அடியில் ஒட்டுவது மாதிரி வரும்போது மீதமுள்ள டால்டாவையும் ஊற்றி, நிலக்கடலைப் பருப்பையும், எஸ்ஸென்ஸையும் சேர்த்து, ஹல்வா பதம் வரும்வரை நன்கு கிளறி, அடுப்பில் ஒட்டாமல் நன்கு திரண்டு வந்த பிறகு நெய் தடவி தட்டில் கொட்டி அரை டீஸ்பூன் கசகசாவையும் சாரப் பருப்பையும் மேலாகத் தூவி சமப்படுத்தி ஆறிய பிறகு வில்லை போட்டுப் பரிமாறவும்.

நீங்களே சொல்லிக் கொண்டால் தவிர சோளத்தில் செய்தது என்று யாரும் நம்ப மாட்டார்கள். சத்து நிறைந்த இந்த இனிப்பு வகை குறைந்த செலவில் தயாரிக்கக் கூடியது.

பி.கு.: பண வசதி உள்ளவர்கள் நிலக்கடலைப் பருப்பு, சாரப் பருப்பு இவைகளுக்குப் பதிலாக முந்திரி, பிஸ்தா, பாதாம் பருப்பு இவைகளில் ஒன்றைச் சேர்த்துக் கொள்ளலாம்.

**திருமதி பாத்திமா**

## இரண்டாம் பரிசு

### சோள இட்லி

**தேவையான பொருட்கள்:**

சோள ரவை ஒரு கப்
ஜவ்வரிசி ஒரு கப்
தயிர் ஒரு கப்
சீரகம் ஒரு டீஸ்பூன்
மிளகு ஒரு டீஸ்பூன்
உப்பு தேவையானது
கருவேப்பிலை
நெய் அல்லது டால்டா ஒரு டேபிள் ஸ்பூன்
எண்ணெய் இரண்டு டேபிள் ஸ்பூன்

**சோள ரவை செய்யும் முறை:**

சோளத்தைச் சுத்தம் செய்து கொள்ளவும். கொதிக்கும் தண்ணீரை அதில் ஊற்றி பத்து பதினைந்து நிமிடங்கள் கழித்து வடிய விட்டுப் பின் வெய்யிலில் உலர்த்திவிடவும். நன்றாகக் காய்ந்த பின் மிஷினில் கொடுத்துச் சன்ன ரவையாக அரைத்துக்கொள்ளவும்.

**செய்முறை:**

சோள ரவையில் கால் கப் தண்ணீர் ஊற்றி ஊறவைக்கவும். ஜவ்வரிசியைத் தண்

ணீர் விட்டுக் கழுவி பின் பூரா தண்ணீரையும் வடித்து விட்டு மூடி வைக்கவும். சுமார் மூன்று மணி நேரம் ஊறிய பின் இரண்டையும் ஒன்றாகக் கலந்து சுக்குப் பொடி, மிளகு, சீரகம், உப்பு, கருவேப்பிலை, நெய், எண்ணெய், தயிர் ஆகியவற்றுடன் ஒன்றாகக் கலந்து இட்லிப் பாத்திரத்தில் ஊற்றி ஆவியில் வைத்து எடுக்கவும். காலை டிபனுக்கு வேண்டுமானால் இரவு படுக்கப் போகு முன் சோள ரவையையும் அவ்வரிசியையும் தனித் தனியே ஊறவைத்து காலையில் கலந்து இட்லி ஊற்றலாம். தேவையானால் தண்ணீர் கலந்து கொள்ளலாம்.

தொட்டுக்கொள்ள:

புளி சிறிதளவு, தக்காளிப் பழம் 5, 6 இரண்டையும் ஒன்றாக அரைத்துக்கொள்ளவும். அடுப்பில் பாத்திரத்தை வைத்து எண்ணெய் ஊற்றி கடுகு, உளுத்தம்பருப்பு, சீரகம் இவைகளைத் தாளித்து அத்துடன் நறுக்கிய வெங்காயம், பச்சை மிளகாய், கருவேப்பிலையைப் போட்டு, நன்கு வதங்கிய பின் அரைத்து வைத்துள்ள விழுதைப் போட்டு, உப்பு, மஞ்சள் பொடி போட்டு கொதித்த பின் இறக்கி வைத்து, கொத்த மல்லி விதையை வறுத்துப் பொடி செய்து ஒரு டீஸ்பூன் பொடி போட்டுக் கலந்து, தொட்டுக்கொள்ளச் சுவையாக இருக்கும்.

**திருமதி பத்மா ராமநாதன்**

# மூன்றும் பரிசு

## சோள தவலை வடை

### தேவையான பொருட்கள் :

அரை கப் சோளம்
ஒரு கப் அரிசி
துவரம் பருப்பும் உளுத்தம் பருப்பும் சேர்த்து அரை கப்
தேவையான அளவு உப்பு
மிளகாய் வற்றல், பச்சை மிளகாய் 4
ஒரு துண்டு பெருங்காயம்
அரை மூடி தேங்காய்
கறிவேப்பிலை இரண்டு கொத்து
100 கிராம் தேங்காய் எண்ணெய்

### செய்முறை:

சோளத்தைத் தனியாகவும், அரிசி பருப்பு இரண்டு மணி நேரம் ஊறிய பிறகு கல்லுரலில் சோளம், உப்பு, பெருங்காயம், மிளகாயைப் போட்டு அரைக்கவும். சோளம் நன்றாக மசிந்த பிறகு அரிசி பருப்பு வகைகளைப் போட்டு கரகரப்பாக அரைத்து எடுத்துக்கொள்ளவும். இது தளர (இட்லி மாவு போல்) இருக்க வேண்டும்

உருளியை அடுப்பில் வைத்து ஐந்தாறு ஸ்பூன் எண்ணெய் ஊற்றி காய்ந்ததும், கடுகு போட்டு வெடித்ததும் அரைத்து வைத்துள்ளதைக் கொட்டிக் கிளறவும். கெட்டியாக உப்புமா போல் சேர்ந்து வந்தவுடன் தேங்காயைத் துருவிக் கொட்டி, கறிவேப்பிலை போட்டுக் கிளறி இறக்கி வைக்கவும்.

இதில் நாரத்தங்காய் அளவு எடுத்து வடைகளாகத் தட்டி வைத்துக் கொள்ளவும். அடி கனமான அருக்கஞ் சட்டியோ, கலாய் வாணலியையோ அடுப்பில் வைத்து வடைகளை வரிசையாகப் பரத்தி வைத்து மீதி உள்ள தேங்காய் எண்ணெயை விட்டு மேலே ஒரு தட்டில் நீர் வைத்து மூடி அடுப்பைச் சின்னதாக எரிய விடவும். இருபது நிமிடம் கழித்துத் திறந்து பார்த்தால் அடியில் சிவப்பாக மொறு மொறுவென்றும் மேலே பூப்போலவும் வெந்திருக்கும். (குச்சியால் குத்திப் பார்த்து வெந்திருக்காவிடில் மேல் தட்டில் மீண்டும் கொஞ்சம் ஜலம் விட்டு சற்று நேரம் அடுப்பில் வைக்கவும்.)

# ஆறுதல் பரிசு

## சோளம் - குல்பா கேசரி

### தேவையான பொருள்கள்

மக்கா சோள ரவை கால் கிலோ
வெல்லம் கால் கிலோ
கொப்பரைத் துருவல் ஒரு சிறிய கப்
நெய் ஒரு சிறிய கப்
கேசரி (குங்குமப் பூ) ஒரு சிட்டிகை
பச்சைக் கற்பூரம் ஒரு சிட்டிகை
ஏலக்காய் 4 (பொடி செய்துகொள்ளவும்)
திராட்சை 15
முந்திரிப் பருப்பு 10

### செய்முறை:

வாணலியில் சிறிது நெய் விட்டு முந்திரி திராட்சையை வறுத்துக் கொள்ளவும். அதை எடுத்து வைத்துக் கொண்டு மற்றும் ஒரு ஸ்பூன் நெய் விட்டு ரவை கமகம என்று வாசனை வரும்வரை வறுத்துக்கொள்ளவும். வெல்லத்தில் அரை கப் தண்ணீர் விட்டு ஸ்டவ் மேல் வைத்து கரைந்த பின் வடிகட்டிக்கொண்டு விடவும். பிறகு ஒரு பாத்திரத்தில் ரவையைப் போல் இரண்டு மடங்கு தண்ணீர் விட்டுக் கொதிக்க வைத்து அதில் ரவையைக் கொட்டிக் கிளறவும். வெந்தவுடன் இறக்கி வைத்துக் கொள்ளவும். இப்பொழுது வடிகட்டிய வெல்லம் பாத்திரத்தை ஸ்டவ் மேல் வைத்து கம்பிப் பாகு வரும்வரை காய்ச்சவும். பாகு வந்தவுடன் கிளறி வைத்திருக்கும் ரவையையும் நெய்யையும் ஊற்றி (ஸ்டவ்வின் மிதமான தீயில்) கிளறவும். குங்குமப் பூவை இரண்டு ஸ்பூன்

பாலில் ஊறவைத்திருந்து கையில் நன்றாகக் கரைத்து அதில் ஊற்றவும். பச்சைக் கற்பூரம், ஏலக்காய் பொடி, கொப்பரைத் துருவல், திராட்சை முந்திரி எல்லாவற்றையும் சேர்த்துக் கிளறி இறக்கி வைக்கவும்.

## ஆறுதல் பரிசு

### சோள மசாலா

இது பூரி, சப்பாத்தி வகைகளுக்கு மிகவும் ஏற்றது.

**தேவையான பொருட்கள் :**

அதிகம் முற்றாத பால் சோளம் 3 கதிர்கள்
தக்காளிப்பழம் கால் கிலோ
பெரிய வெங்காயம் 2
பூண்டு 2—4 பருப்புகள்
மசாலா பொருட்கள் ஒரு சிறிய பாக்கெட்
மிளகாய்ப் பொடி 2 ஸ்பூன்
மஞ்சள் பொடி ஒரு சிட்டிகை
உப்பு தேவையானது
பச்சைக் கொத்துமல்லி ஒரு கட்டு
எண்ணெய் (ஏதாவதொன்று) 2 மே. கரண்டி

**செய்முறை :**

பால் சோளத்தைத் தனி மணிகளாக உதிர்த்து சுத்தம் செய்து, சிறிது உப்பு, மஞ்சள் பொடி சேர்த்து குக்கரிலோ, தனியாகவோ வேகவைத்து, நீரை வடித்து எடுத்து வைக்கவும். (ஒரு மேஜைக் கரண்டி அளவு பச்சைச் சோள மணிகளாகத் தனியாக எடுத்து வைக்கவும்.)

தனியாக எடுத்து வைத்துள்ள பச்சைச் சோளம், வெங்காயம், பூண்டு, மசாலாப் பொருட்களை அதிகம் நீர் சேர்க்காமல் நன்றாக விழுதாக அரைத்து வைக்கவும்.

தக்காளிப் பழங்களைக் கொதி நீரில் சிறிது நேரம் போட்டு வைத்துத் தோல் உரித்து, ஜூஸ் எடுத்து வைக்கவும். (மிக்ஸி உள்ளவர்கள் பச்சையாகவே அரைத்து எடுத்துக் கொள்ளலாம்.)

வாணலியில் எண்ணெய் வைத்து காய்ந்தவுடன் அரைத்து வைத்துள்ள மசாலாவை போட்டுப் பொன்னிறமாகும்வரை வதக்க, பின் தக்காளிப் பழச் சாற்றை அத்துடன் சேர்த்து மிகவும் கெட்டியாக இருந்தால் ஒரு டம்ளர் நீர் சேர்த்து (சோளம் வேக வைத்த நீரையே சேர்க்கலாம்.) பத்து நிமிடம் வரை கொதிக்க வைக்கவும். சற்றே கெட்டியானவுடன் உப்பிட்டு வேக வைத்துள்ள சோள முத்துக்களைச் சேர்த்து தேவையான மிளகாய்ப் பொடி, உப்பினை கூட்டி மேலும் பத்து நிமிடம் சமைக்கவும். சுத்தம் செய்யப்பட்ட பச்சைக் கொத்துமல்லி இதழ்களை பொடியாக நறுக்கித் தூவிவிடவும்.

முடிந்தவர்கள் இதன்மீது சற்றே இளக்கிய வெண்ணெயை ஊற்றலாம். சீஸ் துண்டுகளைப் பொன்னிறமாக வறுத்துச் சேர்க்கலாம். **-சியாமளா ஸ்வாமிநாதன்**

## ஆறுதல் பரிசு

### சோள முறுக்கு

**தேவையான பொருட்கள் :**

வெள்ளைச் சோளம் 500 கிராம்
வெள்ளை உளுத்தம்பருப்பு 100 கிராம்
எள் 25 கிராம்
சமையல் எண்ணெய் 500 கிராம்
சமையல் சோடா உப்பு ஒரு சிட்டிகை
பெருங்காயம் ருசிக்குத்தக்கபடி
உப்பு தேவையான அளவு

**செய்முறை :**

சோளத்தைத் துவைத்து அதன் மேல் தோலை அகற்றிக் கொள்ள வேண்டும். வெள்ளை உளுத்தம்பருப்பை சிறிது வறுக்க வேண்டும். பின்னர் சோளத்தையும் உளுத்தம்பருப்பையும் ஒன்றாகச் சேர்த்து இயந்திரத்தில் கொடுத்து அரைக்க வேண்டும். அரைத்த மாவைச் சல்லடையால் சலித்துக் கொள்ள வேண்டும். சலித்த மாவுடன் எள், சோடா உப்பு, மற்றும் உப்பு பெருங்காயம் ஆகியவற்றைச் சேர்த்துத் தண்ணீர் விட்டு பிசைந்து கொள்ள வேண்டும். வாணலியை அடுப்பில் வைத்து எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் முறுக்கு அச்சில் பிசைந்த மாவை வைத்து முறுக்குப் பிழியவும். சிவக்கப் பொரிந்ததும் திருப்பிப் போட்டு எடுக்கவும். இதுதான் சோள முறுக்கு. இது பச்சரிசி முறுக்கு மாதிரி ருசியாகவும், பல நாள் கெடாமலும் இருக்கும்.

**—டி. லில்லி**



# குழந்தையின் ஜம்பர் – நிர்மலா தேசிகன்

### தேவையான பொருட்கள் :

மதுரை கோட்ஸ் ஆங்கர்* பருத்தி நூல் பொருத்தமான கலரில் 2 பந்துகள்
12ம் நம்பர் பின்னல் ஊசிகள்
குரோஷா ஊசி எண் 12.
1.5 செ.மீ. அகலத்தில் 91.5 செ.மீ. ரிப்பன்

### அளவுகள்

மார்பு அளவு 45.5 (50.5) செ.மீ.
நடு முதுகு நீளம் 21 (23,25) செ.மீ.
கை (Sleeve) 14 (16,5,19) செ.மீ.

[அளவு: ( ) இந்தக் குறிக்குள் இருக்கும் எண்கள் பெரிய அளவைக் குறிக்கும். ஒரே எண் மட்டும் கொடுக்கப்பட்டிருந்தால் அது எல்லா அளவுக்கும் பொருந்தும்.)

தையல் அளவு (Tension)

(2.5) செ. மீ. சதுரத்தில் 7½ தையல்களும் 10 வரிசையும் இருக்க வேண்டும்.

தையல் அளவு பரிசோதித்தல்: தையலை ஆரம்பிக்கும் முன் தையல் அளவைப் பரிசோதிப்பதற்காக (7.5) செ.மீ. அளவுள்ள சதுரத்தைக் காலுறைத் தையலால் (23 தை. 30 வரிசைகள்) பின்னிக் கொள்ளவும். இதற்கு 12ம் நம்பர் ஊசியை உபயோகிக்கவும். பின்னல் தளர்வாக இருந்தால் அதாவது 2.5 செ.மீ. சதுரத்தில் குறைந்த அளவு தையல்கள் இருந்தால் மெல்லிய ஊசியை உபயோகிக்கவும். பின்னல் கெட்டியாக இருந்தால் அதாவது 2.5 செ.மீ. சதுரத்தில் அதிக தையல்கள் இருந்தால் பெரிய ஊசியை உபயோகிக்கவும்.

### சுருக்கம்

பி-பின்னல் (Knit), தை-தையல்-கள் (Stitches)
காலு தை-காலுறைத் தையல் (Stocking Stitches)
ம.பி.-மறு பின்னல் (Purl)
ந.தை.-நழுவுத்தையல் (Stipstitch)
தொ-தொடர்ந்து (Continue),
ஒ.வி.ஒ.-ஒன்று விட்டு ஒன்று (Alternate)
ஆ-ஆரம்பம் (beginning)
தொது - தொடர்வது (following)
அ - அமைப்பு (pattern)



சே - சேர்ந்து (together)
இ.செ. திரும்பச் செய்யவும் (repeat)
மீ. - மீதி (Remain)
கு - குறைத்தல் (decreasing)
கு - அ - அதிகரித்தல் (increasing)
ந.தை.மே.செ. - நழுவு தையலை மேலே செலுத்தவும் (Panstipped Stitch over)
நூ.மு. - நூல் முன்னல் (Yarn forward)
கா.தை - கார்டர் தையல் (garter stitch) (எல்லா வரிசைகளும் பி).

**குறிப்பு:** இந்த அமைப்பை நடு முதுகு பக்கத்திலிருந்து ஆரம்பித்து இரண்டு பக்கத்திலும் செய்யலாம்.

முக்கிய பாகம் 63(68-78) தையல்கள் அமைத்து 8 வரிகள் பின்னவும். உடையின் மேல் பாகம் (yoke) பார்டர் இவைகளை க. தையல் பின்னிஅமைப்பைத்தொடங்கவும்.

முதல் வரிசை: (வெளிப்பக்கம்) பின்னல்.

இரண்டாவது வரிசை: பி6. ம.பி. 39 ,43-47). பி 18 (12, 20)

மூன்றுவது வரிசை: முதல் இரண்டு வரிசைகள் போல்

5வது வரிசையிலிருந்து 7வது வரிசை வரை பி

எட்டாவது வரிசை: இரண்டாவது வரிசை போல்

ஒன்பதாவது வரிசை: பி 20 (21.22) ▣ நூ.மு. ந.தை!. பி. 2 சே,ந.தை.மே.செ. நூ.மு. பி. 1. விருந்து கடைசி 7 தை வரை இ.செ, பி.7.

பத்தாவது வரிசை பி. இந்த வரிசைகளும் அமைப்பைக் குறிக்கும். அமைப்பை ஒரு முறை இ.செ.▣▣ 3வது வரிசையின் ஆரம்பத்தில் 1 தை. கு. அதைத் தொடர்ந்து ஒவ்வொரு 8வது வரிசையில் 60 (65,70) தை–கள். மீதி இருக்கும்வரை தொ. அமைப்பில் பின்னவும். அமைப்பில் 1 வரிசை பி. 2 (4.6) வரிசைகளை காலு. தை.லால் பின்னி உடையின் மேல் பாகம். மற்றும் பார்டரையும் கா. தைலில் பின்னவும்.

கை திறப்பை அமைக்க:

அடுத்த வரிசை 21(22, 23) தைகள் நீக்கவும். கடைசிவரை பி. 39 (43, 47) தைகள் 6 பார்டர் தைகள் கா.தையில் விட்டு 13(19, 25) வரிசைகள்.

அடுத்த வரிசை: 21(22,23) தைகள் கடைசிவரை பி. 60(65,70) தை.கள்.

அடுத்த வரிசை பி.6, ம.பி.விருந்து கடைசி 15(16,17) தை.கள், கடைசிவரை பி. உடையின் மேல் பாகம் (yoke) மற்றும் பார்டரை கா. தை பின்னி, 0(2,4) வரிசை கா லு தை பின்னி, அமைப்பில் 5வது வரிசையிலிருந்து தொடங்கி, தொ. அமைப்பில் 3வது வரிசையின் ஆரம்பத்தில் 1 தை அ மற்றும் அதைத் தொடர்ந்து ஒவ்வொரு 8வது வரிசையிலும் 1 தை அ 63(68,73) தை கள் இருக்கும்வரை பின்னவும். ▣▣ அமைப்பில் 7 வரிசைகள் செய்யவும்.

## குட்டி புரந்தரதாசர் கம்பா!

மயிலாப்பூரில் பிறந்ததால் கற்பகவல்லி என்று பெயரிடப்பட்டு ''கம்பா'' என்று செல்லமாக அழைக்கப்படும் இவளுக்கு வயது 12. வித்யோதயாவில் படிக்கிறுள். தாயார் கமலா டெலிபோன் ஹவுஸிலும், தகப்பனர் ஹரிஹரன் பிலிப்ஸ் நிறுவனத்திலும் பணி புரிகின்றனர்.

சகோதரிகள் ஹேமமாலினி, புவனேஸ்வரி, இருவரும் மேடையில் நடனமாடும்போதே தன்னுடைய 2வது வயதிலேயே அவர்களுடன் நடனமாடத் துவங்கி விட்டாள் இந்தச் சிறுமி. முதலில் திரு லட்சுமிநாராயணன் என்பவரிடமும் 6 வயது முதல் கிருஷ்ண குமாரியிடமும் நடனம் பயின்ருள்.

கிருஷ்ண குமாரி மூலம் ஞானனந்த நாட்டிய மண்டலியைச் சேர்ந்த குரு ஹரிதாஸ் கிரி அவர்கள் அறிமுகம் ஏற்பட்டு அவர் மண்டலி மூலம் மேடையேற்றப்பட்ட ஞானேஸ்வர், சந்ரமூர்த்தி நாயனர், புரந்தரதாஸர் நாட்டிய நாடகங்களில் மூன்றிலும் முக்கிய பாத்திரமேற்று நடனமாடிஞள். டீ.வி. டிராமாவிலும் ''நருமோமு'' என்ற பாடலுக்குத் தியாகராஜர் வேடமேற்று நடித்திருக்கிறுள்.

திரு ஹரிதாஸ் ஸ்வாமிகள், புரந்தர தாசர் நாட்டிய நாடகத்தை சினிமாப் படமாகத் தயாரித்தபோது கம்பாவையே புரந்தர தாசராக நடிக்க வைத்து அந்தப் படம் அரசின் பரிசீலனை பெற்றுத் தற்போது வெற்றிகரமாக ஓடிவருகிறது. ஸ்ரீலங்கா அதிபர் ஜெயவர்த்தனே அழைப்பின் பேரில் ஸிலோன் சென்றும் நடனமாடியிருக்கிருள் இச்சிறுமி.

—பத்மாமணி



கழுத்துப் பகுதி

அடுத்த வரிசை 12(13,14) தை கள் நீக்கவும். கடைசிவரை பின்னவும். 51(55,14 59) தைகள்.

ஒவ்வொரு முனையிலும் 6 தை.கள் கா. தை செய்து, 33 வரிசைகள் அமைக்கவும்.

அடுத்த வரிசை: 12(13,14) தை.கள் பின்னி கடைசிவரை பின்னவும். 63(68,73) தை.கள்.

உடையின் மேல் பாகம் (yoke) மற்றும் பார்டரை கா. தை செய்து 5 வரிசை அமைக்கவும்.

□□லிருந்து □□ இ. செ.

21 வரிசை பின்னவும். பி 4 வரிசை.

கை அமைப்பு

அடுத்த வரிசை (பட்டன் ஹோல்) பி. 2. பி. 2 சே. நூ. மு. பி 7(8,9)● கடைசிவரை இ. செ. பி 5(4,3) இ. செ. 4 வரிசை பி. தை நீக்கவும். 16(17,18) தை.கள் பின்னி 1 வரிசை பி. 1 வரிசை ம. பி. தொ. காலு தை. அடுத்த வரிசையின் ஆரம்பத்தில் மற்றும் ஒவ்வொரு தொ. து. ஒ. வி. ஒ. வரிசையில் 8(10. 12) தை.கள் பின்னி 48(51,66) தை.கள் இருக்கும்வரை பின்னவும்.

அடுத்த வரிசை: கடைசி 9(10,11) தை.கள்வரை ம.பி., கடைசிவரை பி.

அமைப்பு ஆ

முதல் வரிசையிலிருந்து 3வது வரிசைவரை பி.

4வது வரிசை: கடைசி 9(10,11) தை.கள் வரை ம. பி. கடைசிவரை பி.

5வது வரிசை: பி 11(12,13)● லிருந்து நூ.மு., ந. தை. 1. 2 பி. சே., ந.தை. மே. செ. நூ. மு. பி. 1. லிருந்து கடைசி தை வரை இ.செ, பி. 1.

6வது மற்றும் 7வது வரிசை பி.

8வது வரிசை 4வது வரிசை போல்.

9வது வரிசை: பி.

10வது வரிசை: 4வது வரிசை போல்.

இந்த 10 வரிசையும் 4 முறை இ. செ.தொ காலு தை பின்னி. அடுத்த வரிசையின் ஆ மற்றும் ஒவ்வொரு ஒ.வி.ஒ. வரிசையின் ஆ. 8(10,12) தை.கள் நீக்கவும். 16(17,18) தை.கள் மீதி இருக்கும்வரை பின்னவும். 1 வரிசை பின்னவும், தை. நீக்கவும்.

முடிக்கும் விதம்: தோள் பட்டைகளை தைக்கவும். கைகளை தைத்து (—$\frac{3}{4}$, 1, $1\frac{1}{4}$) அல்லது 2.5, 3.2) செ.மீ. மேல் பாகம் திறந்திருக்கும் படியாக கை திறப்பிற்குள் வைப்பதற்காக விட்டு; கைகளை வைத்து தைக்க வேண்டும். இரண்டு வெளிப்பக்கமும் ஒன்றை ஒன்று பார்க்கும்படியாக வைத்து, எல்லா ஓரங்களிலும் 1 வரிசை இ.கு. பின்னி ஒவ்வொரு தோள் பட்டையிலும் ஒரு சங்கிலி வளையம் செய்யவும். ரிப்பனை இரண்டாகக் கத்தரித்து ஒவ்வொரு துண்டு ரிப்பனையும் ஒவ்வொரு வளையத்தில் கட்டவும். அமைப்பைத் திருப்பி இஸ்திரி செய்யவும்.

---

## திக்குவாய்ப் பிரச்னை

தனியாகப் பேசும்போதும், பாடும்போதும் நன்ருகப் பேசக்கூடிய குழந்தைகள் பிறரிடம் பேசும்போது திக்கித் திணறுவதைப் பார்த்திருக்கிறோம். திக்குவாய் என்பது பேச்சில் ஏற்படும் சிறிய ஊனம்தான்.

தன்னம்பிக்கை இல்லாமையே திக்குவாயின் அடிப்படையான காரணம். இந்த



திக்குவாயை உருவாக்குவதே பெற்றோரும்சமூகமும்தான். அதிகப்படியான பயத்தாலும் பொறுமை உணர்ச்சியாலும் திக்குவாய் ஏற்பட வாய்ப்பு உண்டு. பெரும்பாலும் பெற்றோரிடம் ஒற்றுமை இல்லாத குடும்பங்களிலிருந்தும், குழந்தைகளை மிகக் கண்டிப்புடன் வளர்க்கும் குடும்பங்களிலிருந்தும் தான் திக்குவாயர்கள் உருவாகிறார்கள். அளவுக்கு மீறிய அடக்குமுறை குழந்தைகளை திக்குவாயர்களாக்குகிறது. குழந்தைப் பருவத்தில் குறிப்பாக 3 முதல் 8 வயதுவரையுள்ள காலத்தில் குழந்தைகளின் உள்ளத்தில் ஏற்படும் தாழ்வு மனப்பான்மையினாலும் பய உணர்ச்சியாலும் திக்குவாய் ஏற்படுகிறது என்று கண்டுபிடித்துள்ளார்கள்.

திக்குவாயர்கள் பெரும்பாலும் வீட்டுக்கு மூத்த பிள்ளையாக இருக்கிறார்கள். பெண்களை ஆண்களிலேயே திக்குவாயர்கள் அதிகம்.

திக்குவாய் வராமல் காக்கச் சிறுவயதிலிருந்தே குழந்தைகளுக்குத் தன்னம்பிக்கை ஊட்டி, அளவுக்கு மீறிய கட்டுப்பாட்டைத் தளர்த்தி அன்புடன் நடத்த வேண்டும். வந்த பின் திருத்த முயற்சிப்பதை விட வருமுன் காப்பது புத்திசாலித்தனம் அல்லவா?

—மிஸஸ் கிரிஜானந்த்

# அஞ்சறைப்பெட்டி





## திடீர் இடியாப்பம்

சமீபத்தில் சென்னை, திருவல்லிக்கேணியில் வசிக்கும் உறவினர் ஒருவர் வீட்டுக்கு முன்னறிவிப்பின்றித் திடீரென்று ஒரு நாள் மாலை நேரத்தில் சென்றோம். நாங்கள் போய் அரை மணி நேரம்கூட ஆகியிருக்காது. அதற்குள் அருமையான இடியாப்பம், தேங்காய்த் துருவல், நெய், சீனி, ஏலக்காய் கலவையில் டிபனாகப் பரிமாறப்பட்டது. எப்படி இவ்வளவு சீக்கிரத்தில்....

எங்களுக்கே ஒரே அதிசயம். ஆனால் அந்தப் பெண் விளக்கியதைக் கேட்டும் நம்ப முடியாமல் இருந்தது. கொஞ்சம் சாம்பிள் வாங்கிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தோம்.

''நல்ல புழுங்கலரிசியைத் தண்ணீர் விட்டுக் கழுவி, தண்ணீரை ஒட்ட வடித்துவிட்டு, தரையில் ஒரு துணியை விரித்து அதன்மேல் அந்த அரிசியைக் கொட்டி, பதினைந்து நிமிடங்களுக்கு நிழலிலேயே உலர்த்தி ஈரப்பதமாக இருக்கும்போதே மாவு மெஷினில் கொடுத்தால் இப்படி சேமியா மாதிரி துணுக்குகளாக அரைத்துக் கொடுக்கிறார்கள். அதை மூன்று நான்கு மணி நேரம் நிழலில் காற்றாட வைத்திருந்து பிறகு டப்பாவில் அடைத்து வைக்கலாம்.

தேவைப்படும்போது சிறிது உப்பு நீரைத் தெளித்து ஈரமாக்கி வைத்திருந்து ஆவியில் வேகவைத்து எடுத்து, இஷ்டமான உப பதார்த்தங்களோடு பரிமாறலாம். திடீர் விருந்தினர்களைச் சமாளிக்க இது ஒரு வரப்பிரசாதம். காலை மாலை டிபன்களுக்கு மிகவும் வசதியாக இருக்கிறது.'' என்றாள் அந்தப் பெண்.

—பாத்திமுத்து

• • •

குழந்தைகள் கீழே விழுந்து பல் பட்டு, வாயிலிருந்தோ, உதட்டிலிருந்தோ ரத்தம் கசிந்தால் காப்பிப் பொடியைக்காயம் பட்டு ரத்தம் வரும் இடத்தில் அப்பி வைத்தால் சரியாகி விடும்.



## கேழ்வரகு (ராகி) பலகாரங்கள்

சரீரத்துக்குச் சக்தி தருவதில் கேழ்வரகுக்கு நிகரான ஆகாரம் கிடையாது. கேழ்வரகில் தாம்பிர சத்து அதிகமாக இருப்பதால் இரத்தத்தைச் சுத்தம் செய்வதில் முதன்மை பெற்றதாய் விளங்குகிறது. இது ஏழைகள் உண்ணக்கூடியதாகும் என்று கேவலமாக நினைத்து விடாதீர்கள்.

கர்நாடகத்தில் மைசூர் மகாராஜா அவர்கள் கேழ்வரகால் ஆன அல்வாவை நாள்தோறும் உண்டு வந்தார் என்பது உண்மையாகும். கேழ்வரகு ஆகாரம் உண்பவர்கள் நிச்சயம் பலசாலிகளாக விளங்குவார்கள். பெண்களின் மார்பு வளர்ச்சிக்கும் தாய்ப்பால் பெருகவும் கேழ்வரகு பயன்படுகிறது.

கேழ்வரகைச் சுத்தப்படுத்தி அதை ஈரத் துணியில் கட்டி தண்ணீரில் போட்டு ஊற வைக்க வேண்டும். மறுநாள் காலை எடுத்துப் பார்த்தால் அது முளைகண்டு இருக்கும். இதை மாவாக அரைத்துக் கஞ்சி செய்து அத்துடன் பால் சர்க்கரை சேர்த்து இக்கஞ்சியைத் தினம் பருகினால் பெண்களுக்கு மார்பு வளர்ச்சியும், தாயாகும்போது பால் சுரப்பும் அதிகமாகும். இதே முளைகட்டிய விதத்தில் கேழ்வரகை மாவாக அரைத்து வைத்துக் கொண்டு சில பலகாரங்கள் செய்து உண்ணலாம்.

• • •

### கேழ்வரகுப் புட்டு

மேற்சொன்ன விதத்தில் முளைக்கட்டிய கேழ்வரகு மாவை மணம் வர வறுத்துக் கொள்ளுங்கள். பின் இம்மாவில் தண்ணீர் விட்டுப் பிசைந்து கொண்டு (உதிரியாக) ஆவியில் வேகவைத்து எடுத்துக் கொள்ளுங்கள். அத்துடன் சர்க்கரை அல்லது தூள் செய்த வெல்லம் ஒரு மூடி துருவிய தேங்காய்ப்பூ பொடி செய்த ஏலம், வறுத்த முந்திரிப் பருப்பு இவைகளைப் போட்டுக் கலந்து கொள்ளுங்கள். இரண்டு டீஸ்பூன் நெய்யைக் காய்ச்சி ஊற்றிக் கலந்து கொள்ளுங்கள். ஏ-1 புட்டு ரெடி!

# கடவுளுக்கு நன்றி

பம்பாயில் உள்ள விஜய் மர்ச்சண்ட் என்பவர் அங்குள்ள குருடர்கள் சங்கத்துக்குத் தலைவராக இருக்கிறார். இவருக்கு ஹிந்துஸ்தான் மில்ஸ் என்ற மில் இருக்கிறது. அங்கு இவர் பார்வையில்லாதவர் பலருக்கு வேலை கொடுத்திருக்கிறார். திங்கள், வியாழக் கிழமைகளில் இவரை இங்கு குருடர்களும் அங்கஹீனர்களும் சந்திக்கலாம். இவரது மில்லில் வேலை செய்யும் சில ஜோடிகளுக்கு இவரே கல்யாணம் செய்து வைத்திருக்கிறார். "பார்வையுள்ளவர்களிடம் பார்வையில்லாதவர்களுக்குக் கல்யாணம் ஆவது கஷ்டமாக இருக்கிறது. அவர்கள் அழகான பெண் வேணும், அழகான வாலிபன் வேண்டும் என்று சொல்வதில்லை. அன்பான, மிருதுவான ஒரு கரத்தைத்தான் விரும்புகிறார்கள்" என்று சொல்கிறார் இவர்.

இவரது மில்லில் வேலை செய்யும் நானூறு பேர் தாங்கள் இறந்தவுடன் தங்கள் கண்களைத் தானம் செய்ய சம்மதித்திருக்கிறார்கள். ஏற்கனவே முப்பது பேர் கொடுத்தாகி விட்டது. காது கேட்காதவர்கள் அங்கஹீனர்கள் ஆகியவர்களுக்கும் இவர் தமது மில்லில் வேலை கொடுத்திருக்கிறார்.

பாதி குருடாகவும் ஒரு கால் விளங்காதவராகவும் இருக்கும் ஒரு வாலிபர் இவரது மில்லில் வேலை செய்கிறார். அவர் வரும் பஸ்ஸைத் தினமும் அவருக்காக பஸ் டிரைவர் மில்வாசலிலேயே நிறுத்துகிறார். சாயந்திரமும் பஸ்ஸை மில் வாசலில் நிறுத்தி அவரை ஏற்றிக்கொள்கிறார்.

விஜய் மர்ச்செண்ட் கூறுவதாவது, "நான் என் இதையெல்லாம் செய்கிறேன்? ஒரு தர்மம் என்பதற்காக அல்ல. கடவுள் எனக்கு நல்ல கண்களையும் அங்கங்களையும் கொடுத்திருக்கிறார். அதற்கு நன்றியாகத்தான் நான் செய்கிறேன். இரவில் நிம்மதியாகத் தூங்குகிறேன். நிம்மதியாக இருக்கிறேன்."

(இல்லஸ்டிரேட்டட் வீக்லியிலிருந்து)

- அனிதா ராமச்சந்திரன்

# யோசனை

அன்று விருந்தாளிகள் வந்திருந்தார்கள். ரவா உப்புமாவை அவசரமாகக் கிளறி வைத்தேன். அது மீந்து போச்சு. மாலையில் பஜ்ஜி செய்வதற்காக வாணலி வைத்த பிறகுதான் ஒரு யோசனை தோன்றிற்று. மீந்துபோன உப்புமாவை உருண்டையாக உருட்டி போண்டாவாகச் செய்துவிட்டேன். வந்திருந்தவர்களுக்கு ஒரே மகிழ்ச்சி. இரண்டு வகையில் பரிமாறினதும் எனக்கு அநேக பாராட்டுக்கள் கிடைத்தன.

- திருமதி சுவர்



கேழ்வரகு அல்வா

கேழ்வரகைச் சுத்தப்படுத்தி ஈரத் துணியில் கட்டி தண்ணீரில் போட்டு வையுங்கள். மறுநாள் முளைகண்டிருக்கும். முளைகண்ட இந்தக் கேழ்வரகைக் கல்லுரலில் போட்டு தண்ணீர் விட்டு தோசை மாவு பதத்தில் நைசாக அரைத்துக் கொள்ளுங்கள். பிறகு மெல்லிய துணியிலோ அல்லது மாவு சல்லடையிலோ அரைத்த இந்த மாவை எடுத்துக்கொண்டு கீழே ஒரு பாத்திரத்தில் வைத்து வடிகட்டிக் கொள்ளுங்கள். பாத்திரத்தில் மாவு பாலாக இறங்கிவிடும். மேலே கேழ்வரகின் சக்கைகள் தங்கிவிடும்.

பின்பு சர்க்கரையைப் பாகாகக் காய்ச்சி கம்பிப் பதம் வரும்போது இந்தக் கேழ்வரகு மாவைப் பாகில் ஊற்றி அடி பிடிக்காமல் கிளறுங்கள். அடுப்பு நிதானமாக எரிய வேண்டும். நெய்யை ஊற்றி, ஏலத் தூள் சிட்டிகை, கேசரி பவுடர், பச்சைக் கற்பூரம் சிட்டிகை, இவைகளைப் போட்டு கிளறி, முந்திரிப் பருப்பை ஒடித்து நெய்யில் வறுத்துப்போட்டு, நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டுங்கள். ஆறியதும் துண்டம் போட்டு சாப்பிடுங்கள்.

(அளவுகள் அவரவர் குடும்பத்தின் தேவைக்கு ஏற்ப)

—வசந்தா கோவிந்தன்



# கண்ணம்மா-என் காதலி!

"இந்தச்சினிமாத்தொழிலுக்குள் நுழைபவர்கள் பாதுகாப்புடன் நுழைந்தார்கள் என்றால் அவர்கள் வாழ்வு மேலோங்கி இருக்கும். இல்லையெனில் எப்படிச் சீரழியும் என்பதைத்தான் பல கதைகளாகக் கேட்டிருக்கிறோமே! நல்ல காலம், எனக்கு ஒரு நல்ல பேக்ரவுண்ட் இருந்தது. ஆயிற்று, இத்தனை வருஷங்களாக இந்த பீல்டைப் பார்த்துக் கொண்டு என் வாழ்க்கையையும் ஓட்டிவிட்டேன்..."

என்று கூறுகிறார் நாற்பத்தியோரு ஆண்டுகளாகப் பல்வேறு பாத்திரங்களில் நடித்து வரும் சுந்தரி பாய்.

இவருடைய தாய்மொழி மராட்டி. மதுரையில் வாழ்ந்து வந்தார்களாம். ஆறுவது படித்துக் கொண்டிருக்கும்போதே சினிமாத் தொழில் இவரை இழுத்துக்கொண்டது.

நல்ல காலம், வீட்டில் அதிகம் எதிர்ப்பில்லை. பெரிய அக்கா லட்சுமி பாய்தான் முழுக்க முழுக்க ஆதரவாக இருந்தார். இத்தனைக்கும் அப்பொழுதெல்லாம் சினிமா பீல்டில் பெண்கள் நுழைவது என்றால், சமூகத்தின் கடுமையான எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டும். அந்தத் தொல்லை அவருக்கு இல்லை. அம்மாவும், சகோதரியும் முழுமையான ஆதரவு கொடுத்தார்கள்.

"சமூகத்தில் எதிர்ப்பு என்பது மட்டுமில்லை! சினிமா பீல்டும் வெளியுலகத்தில் இருப்பவர்கள் நினைப்பது மாதிரி அவ்வளவு எளிதில்லை. மிகக் கடுமையான உழைப்பு தேவை. டைரக்டர்களைக் கண்டாலே நடுக்கம். பாடத் தெரிந்திருக்க வேண்டும். ஒரு ஷூட்டிங் நடக்க வேண்டுமானால் ஒரு மாதம் பூராவும் 'ரிகர்ஸல்' நடக்கும்.

இப்பொழுது பீல்டு வேகமாகிவிட்டது. செட்டில் நுழைந்த பிறகுதான் டயலாக் ஷீட்டே நம் கைக்கு வரும். அங்கேயே படித்து, காமிரா முன் நடித்து விட்டு, வெளியே வந்தால் எல்லாம் மறந்துவிடும். வேகம், வேகம், வேகம்...

அப்பொழுது நாங்கள் எல்லாம் அப்படி இல்லை. ஒரு மாதம் ரிகர்சல் நடப்பதால் எங்களுடைய கேரக்டர் என்ன, நாங்கள் பேசவேண்டிய வசனம் என்ன என்று எல்லாம் அப்படியே மனப்பாடம் ஆகிவிடும்

நீண்ட நாள் படப்பிடிப்பு நடக்கும் என்ப

— மஞ்சுளா ரமேஷ்

தால் படப்பிடிப்புக் குழுவினர் அனைவரும் ஒரு குடும்பம் போலப் பழகுவோம். ஏதோ ஒரு ஆபீசில் வேலை செய்பவர்கள் நாங்கள் என்பது போல இருப்போம்.

அப்படித்தான் இருந்தது என்னுடைய முதல் படப்பிடிப்பு. ஓரியண்டல் பிலிம் பத்மனாப ஐயர் பம்பாயில் படப்பிடிப்பு நடத்தினார். 'கருணை சரசா' என்ற அந்தப் படத்தில் ஒரு சின்னப் பாத்திரம். அப்பொழுது எனக்குப் பதினாறு வயது.

அன்றைக்குச் சின்னப் பாத்திரத்தில் நடித்த ராசியோ என்னவோ, இன்றுவரை பெரிய ரோல்கள் எதுவும் எனக்குக் கிடைக்கவில்லை. இந்த சினிமா பீல்டில் இதுவொரு சங்கடம். நாம் எப்படி அறிமுகம் ஆகிறோமோ, அந்தப் பிராண்டைக் குத்திவிடுவார்கள்.

வில்லி என்றால் வில்லியாகக் காலம் பூரா நடிப்பதுதான் அவளுடைய தலையெழுத்து. செகண்ட் ஹீரோயின் என்றால் செகண்ட் ஹீரோயின்தான்.

ஹீரோ, ஹீரோயினாக நடிக்க வேண்டும் என்ற தலையெழுத்து இருந்தால்தான் நடிக்க முடியும். இல்லையென்றால் இந்த பீல்டில் எத்தனை பேர் எவ்வளவு திறமைகள் இருந்தும் பிரகாசிக்க முடியாமல் போனவர்கள் இருக்கிறார்கள்? அழகு, நடிப்புத் திறமை எல்லாம்



இருந்தும் எக்ஸ்ட்ராவாக — ஏன் அதுகூட இல்லாமல் சீரழிந்து போனவர்களைப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேன்.

அதனால்தான் சொல்கிறேன், ஹீரோயினாக நடிப்பது என்றால், அதற்குத் தலையெழுத்து இருக்க வேண்டும்.

சரி, என்னுடைய விஷயத்துக்கு வருவோம். பம்பாய்க்கு ஒரு படத்துக்கு நடிக்



"உடலில் உஷ்ணம் அதிகமாகி, தொண்டை புண் அல்லது வலி வந்து அவதிப்படுகிறவர்களுக்கு ஒரு பர்மியக் குறிப்பு:

ஒரு பெரிய டம்ளரில் கால் டம்ளர் பசும் பால் எடுத்துக்கொள்ளவும். கடையில் பாட்டிலில் விற்கும் சோடா ஒன்று வாங்கி, பால் உள்ள டம்ளரில் அரை பாட்டில் சோடாவை விடவும். பால் பொங்கி நுரையுடன் மேலெழும். நுரை அடங்குவதற்குள் தொண்டைப் புண் உள்ளவர்கள் 'மடக் மடக்'கென்று குடித்துவிட வேண்டும். இப்படித் தொடர்ந்து மூன்று நாட்கள் குடித்து வந்தால் கைமேல் பலன்!

முக்கியமாக மசக்கை காலத்தில் முதல் நான்கு மாதங்களுக்கு உடல் உஷ்ணத்தால் அவதிப்படுகிறவர்கள் வாரம் ஒரு முறை இப்படிக் குடித்து வந்தால் நல்லது.

அனுபவத்தில் கண்டறிந்தவர்:
திருமதி பாத்திமுத்து சித்திக்

---

கத்தான் போனேன். ஆனால் அங்கேயே மூன்று படங்களில் நடித்து விட்டேன். காஃபி ஆஸ்பிரின் என்ற புகழ் பெற்ற விளம்பரப் படத்தில் இரு மொழிகளில் நடித்து விட்டேன்.



அப்புறம் நிறையப் படங்கள்!

தானசூர கர்ணன், சூரிய புத்ரி, மிஸ் மாலினி, மதன காமராஜன் என்று பல படங்களில் பல்வேறு பாத்திரங்களில் நடித்தேன்.

திரு வாஸன் அவர்கள் ஜெமினி ஸ்டுடியோவை நிறுவி 'நிரந்தர நடிக, நடிகைகள்' எனப் பலரை ஒப்பந்தம் செய்து கொண்டார். நானும் ரூ. 150 மாத சம்பளத்தில் ஜெமினியில் பெர்மனென்ட் ஆர்ட்டிஸ்ட் ஆனேன். 17 வருஷங்கள் அங்கு இருந்த போதுதான் பல படங்களில் நடித்துப் புகழ் பெற்றேன்.

அந்த நாளில் டாப் ஹீரோவாக இருந்த எம். கே. ராதாவுடன் 'கண்ணம்மா என் காதலியில்' கதாநாயகியாக நடிக்கும் அளவுக்கு என் நிலை உயர்ந்தது.

என்னால் மறக்கவே முடியாத பொன்னான ஆண்டுகள் அவை. இப்பொழுது நினைக்கும் பொழுதும் நெஞ்செல்லாம் இனிக்கிறது.

திரு வாசன் மீண்டும் பிறக்க வேண்டும். நாங்கள் எல்லாம் அவர் கீழ் பணியாற்ற வேண்டும். அப்படித்தான் அந்த நாட்கள் மீண்டும் திரும்பி வருமே ஒழிய மற்றபடி யாராலும் அவருடைய இடத்தைப் பிடிக்க முடியாது..."





என்கிறார் திருமதி சுந்தரி பாய்.

பேசிக்கொண்டே வந்த அந்தப் பெண்மணி அவருடைய முக்கியமான வாழ்வின் கட்டத்துக்கு வந்து விட்டார்.

இந்தச் சமயத்தில் அவரைப் பற்றியும் நான் பார்த்த அவருடைய சுற்றுப்புறச் சூழ்நிலை பற்றியும்சொல்லியே ஆகவேண்டும்.

அங்கு நான் கூடத்தில் உட்கார்ந்திருந்த போது ஒரு நடிகையின் வீட்டில் உட்கார்ந்திருப்பது போல ஒரு நிமிடம்கூட எண்ணம் எழவில்லை.

ஒரு பக்கம் திரு கொத்தமங்கலம் சுப்புவின் படம். மற்றொரு பக்கம் திரு வாசனின் புகைப்படம். மற்றபடி சங்கராச்சாரியார் படம் ஒன்று. அந்தக் கிராமத்து அமைப்புள்ள கூடத்தில் வேறொன்றும் இல்லை.

ஹாலை ஒட்டியுள்ள பல அறைகளில் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அவரவர் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். இரண்டு பெண்கள் வேலைக்குப் போய்விட்டு அப்பொழுதுதான் நுழைந்தார்கள்.

பெரிய ஹாலோ, அழகான சோபாக்களோ, அலங்காரமான விளக்குகளோ அங்கு இல்லை. பண்பட்ட மனிதர்கள்தான் அங்கு இருக்கிறார்கள். 'பந்தா' இல்லை.

இவர்களையும் இன்றைக்கு பீல்டில் இருப்பவர்களையும் பார்க்கும்போதுதான் எவ்வளவு வேறுபாடு! தன்னைச் சுற்றித் துதி பாட ஒரு கூட்டம், பாலைவனத்தில் படப்பிடிப்பு என்றால் கூட ஆப்பிள் ஜூஸும் கோழி பிரியாணியும் கேட்கும் மனோ கர்வம், தங்களால்தான் இந்த உலகமே சுழல்கிறது என்

## யோசனை

பச்சை மிளகாய் நீண்ட நாட்களுக்கு, பழுத்து, சிவந்துவிடாமல் இருக்க, மிளகாய் காம்பைக் கிள்ளி எடுத்துவிட்டு ஒரு பாலிதீன் கவரில் போட்டு வைக்கவும். ஆனால் இரு தினங்களுக்கு ஒரு முறை கவருக்குள் துளிர்த்திருக்கும் ஈரத்தைத் துடைத்துவிட்டோ அல்லது உள் பக்கத்தை வெளிப்பக்கமாக மாற்றியோ வைக்கவேண்டும்.







பது போல் தலையைத் தூக்கிக் கொண்டு நடக்கும் இறுமாப்பு... இவையெல்லாம் இன்றைய சினிமா உலகம்!

இப்படிப்பட்டவர்கள் பங்கெடுத்துக் கொண்டு வெளிவரும் படங்களும் எப்படி இருக்கும்? அதைத்தான் சுந்தரிபாயும் கூறுகிறார்:

''காதல் என்றால் என்னவென்று இவர்களுக்கெல்லாம் தெரியுமா? சின்னஞ் சிறுவர்களை யெல்லாம் வீட்டை விட்டு ஓடச்சொல்லி சொல்லித் தருகின்றன இன்றைய சினிமாக்கள்.

காதல் என்பது புனிதமானது. அதை அனுபவித்துத்தான் உணர முடியும். கேட்பாரில்லாத கிராமத்து வயல்காட்டில் விழுந்து புரளுவதல்ல காதல். இப்படி ஓடினால் அந்தக் கிராமத்தில் ஒருவர் கூடவா கேட்க மாட்டார்கள்!

கொஞ்சமாவது யோசித்து எடுத்தால் பரவில்லை. அந்தக்காலத்தில்கூடத்தான் காதலைப் பற்றிச் சொன்னார்கள். கே. சுப்பிரமணியம் 'பக்த சேதா' படத்தில் ஒரு செருப்புத் தைக்கும் தொழிலாளி மகளுக்கும், பிராமண இளைஞனுக்கும் ஏற்படும் காதலைச் சொன்னார்கள். ஆனால் அந்தக் கதாநாயகனும் கதாநாயகியும் பீச்சுக்கோ பார்க்குக்கோ போகவில்லை.

பெரியவர்களைக் கெடுத்தது போய், இரண்டுங்கெட்டான்களையும் இப்போது சினிமா கெடுக்கிறது. இப்படிப்பட்ட படங்கள் வருவதை விட வராமல் இருக்கலாம்.'' என்று மனம் குமுறிப் பேசுகிறார் இவர்.

காதலைப் பற்றிப் பேச இவருக்குத்தான் முழுத் தகுதி உண்டு. ஏனென்றால் இவரும் காதல் மணம் புரிந்தவர்தானே!

மிஸ் மாலினி போன்ற படங்களில் நடித்த போதுதான் திரு கொத்தமங்கலம் சுப்புவைத் தெரிந்து கொண்டேன். மதனகாமராஜன் படம் வெளிப்புறப் படப்பிடிப்புக்குப் போயிருந்தோம். ஒரு ஆற்றங் கரையில் அன்றைக்கு ஷூட்டிங்.

ஆற்றில் நான் மூழ்கிவிடுவது போலக் காட்சி. சினிமாவில் ஒரு முறைதான் அந்தக் காட்சி வரும். ஆனால் அதைப் படம் எடுப்பதற்குள் ஏழெட்டு முறையல்லவா மூழ்க வேண்டும்! எனக்கோ நீந்தத் தெரியாது.

ஒருமுறை நான் நன்றாக மூழ்கிவிட்டேன். தண்ணீரைக் குடித்து விட்டேன். எல்லோரும் திகைத்துப் போய் நின்ற நேரத்தில் தான் திரு சுப்புதான் ஆற்றில் பாய்ந்து என் கையைப் பிடித்து வெளியேற்றினார். எந்த நேரத்தில் என் கையைப் பிடித்தாரோ, வாழ்க்கை முழுவதும் அவர் பின்னாடியே வந்துவிட்டேன்.

இன்றைக்கும் நான் அவர் குடும்பத்தோடுதான் இருக்கிறேன். அவருடைய குழந்தைகள் சித்தி, சித்தி என்று என்மேல் உயிராக இருக்கிறார்கள். என் பெண்ணும் பிள்ளையும் நல்ல நிலையில் இருக்கிறார்கள்.

இப்பொழுது என்ன செய்கிறார் இவர்?

''நாடகங்களில் நிறைய நடிக்கிறேன். ஏனென்றால் இப்பொழுது தயாரிக்கும் சினிமாக்களில் என்னைப் போன்றவர்களுக்கு அதிக வேலையில்லை. ஹீரோவும் ஹீரோயினும் அநு

## கீரையில் புழு



அறுத்து வைத்த கீரையை அடுப்பில் இடுவதற்கு முன் அதில் ஏதாவது புழு பூச்சி இருக்கின்றனவா என்று திட்ட வட்டமாக அறிய ஒரு சிறந்த வழி: ராகி மாவு ஒருஸ்பூன் எடுத்துக் கீரை மேல் பரவலாகத் தூவி கைகளால் கிளறி உதறினால் கீரைக்குள் ஒரு புழுகூடத் தங்காமல் கீழே உதிர்ந்து விடும். —பொன் வேந்தன்

தைகளாக இருப்பார்கள். அம்மா அப்பாவுக்கு அங்கு என்ன வேலை? அதுவும் இல்லாமல் 'கேரக்டர்கள்' என்று யாரும் இருப்பதில்லை. ஒரு அம்மாவோ, அத்தையோ வேண்டுமென்றால் யாரையாவது இரண்டு நிமிஷம் நிற்கவைத்து விடுவார்கள். என்னுடைய நாடகங்கள் தான் நிறைய நடக்கின்றன...''

என்று பெருமூச்சுடன் கூறும் இவர், தான் செய்த சில 'கேரக்டர் ரோல்'களையும் மறக்கவில்லை. ''அவர்' இறந்த வருஷம்தான் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' நடிக்க ஒப்பந்தமானேன். அதில் தலையை மழித்துக்கொண்டு விதவைத் தாயாக வரவேண்டும். நானும் ரொம்ப வருத்தத்தில் இருந்ததால் ஒப்புக் கொண்டேன். என்றால் மறக்க முடியாத பாத்திரம் அது.

அப்புறம் அது போலவே வந்தபோது மறுத்து விட்டேன். ஏனென்றால், விதவைத் தாய் வேஷமா, சுந்தரி பாயைக் கூப்பிடு என்று பிராண்டு குத்தி விடுவார்கள்.'' என்று சிரிக்கிறார்.

பண்பட்ட நடிகைகள் வரிசையில் இடம் பெற்றுவிட்ட திருமதி சுந்தரி பாயிடமிருந்து அமைதியான வாழ்க்கை வாழ்வது பற்றி இன்றைய நடிகைகள் தெரிந்துகொள்ள வேண்டும்.

அமைதியை இழந்து, அதற்காகப் பல வழிகளை நாடுபவர்களைத்தான் இன்றைக்குப் பார்க்கிறோமே! ஏன், நல்ல முன்னோடிகள், வழிகாட்டிகள் இவர்களுக்கு இருந்துமா இதுபோன்ற நிலைமை?




சட்டப்பகுதி தொடர்பான கேள்விகள் மட்டுமே இந்தப் பகுதியில் வெளி வந்து கொண்டிருந்தது. இனி, வாசகர்களுக்கு பொதுவாகப் எந்தத் துறையில் சந்தேகம் ஏற்பட்டாலும், அவ்வத்துறை நிபுணர்களை வைத்து விடையளிக்க உத்தேசித்துள்ளோம். சென்ற இதழில் அறிவிப்பில்லாமல் இவ்வாறு தொடங்கியும் ஏராளமான கேள்விகள் வந்துவிட்டன.

பொதுவாக, கூடியவரை குறிப்பிட்ட கேள்வி பதில் அவருக்கு மட்டுமே பயனளிக்காமல் எல்லோருக்குமே பயன்படக் கூடியதா என்று பார்க்கிறோம். உங்கள் ஐயங்களை எங்களுக்கு எழுதுங்கள். நாங்கள் விடையளிக்கிறோம்.

## குழந்தை சாப்பிடவே மாட்டேன் என்கிறானே!

**வனஜா** **திருப்பத்துறை**

என் மகனுக்கு இரண்டரை வயதாகிறது. பிறந்ததில் இருந்தே அவனுக்கு நல்ல ஆகாரம் கிடையாது. ஒவ்வொரு குழந்தை பாட்டில் பாட்டிலாகப் பால் குடிக்குமே! இவனால் கால் பாட்டில், அரை பாட்டில்தான். கொஞ்சம் பெரியவனான பிறகு சாப்பாட்டு நேரம் பெரிய ரகளை நேரம்தான். இரண்டு கவளத்துக்கு மேல் சாப்பிட மாட்டான்.

எங்களால் முடிந்த அளவு டாக்டரிடம் காட்டியாகி விட்டது. எல்லா டெஸ்டும் செய்து விட்டார்கள். ஒரு பலனும் இல்லை. தானாகச் சாப்பிடுவான் என்கிறார்கள். ஒல்வியாக, அடம்பிடித்து அழும் அந்தக் குழந்தையைப் பார்க்கும்போதும் கஷ்டமாக இருக்கிறது. நீங்களாவது ஒரு வழி சொல்லுங்களேன்.

**மருத்துவரின் பதில்:**

என்னிடம் வரும் நிறையக் கேஸ்கள் இது போன்றதுதான். குழந்தை சாப்பிடாமல் இருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். புழுசேர்ந்திருக்கலாம். Prrmary Complex எனப்

## தொகுப்பு: டி.ஆர்.ரமேஷ்.எம்.ஏ.பி.எல்



வேலைக்கு இப்படித்தான் 'கியூ'வில் நிற்கிறார்கள்.

படும் 'நெஞ்சில் கபம் கட்டுதல்' ஆக இருக்கலாம்.

எல்லா டெஸ்ட்டும் செய்து விட்டதாகச் சொன்னீர்கள். சில சமயங்களில் இது போன்ற சோதனைகளில் தவறு ஏற்படவும் வாய்ப்பு உண்டு. உதாரணமாக மலம் பரிசோதனை செய்யும்போது ஒரு சிறு பகுதியை மட்டுமே பரிசோதிக்கிறார்கள். அதிலே புழு இல்லாமல் போகலாம்.

முக்கியமாகக் குழந்தைகளுக்குப் புழுசேருமானால் அது மிக அபாயகரமானது. 'வயிற்றில் பூச்சிதானே, பேதிக்குக் கொடுத்தால் சரியாகிவிடும்' என்று அலட்சியமாகச் சொல்லுவார்கள். ஒரு குழந்தையின் மூளை வளர்ச்சியைப் பாதிக்கும் அளவுக்கு அது கெடுதல் செய்யக் கூடியது. எல்லா வியாதிகளையும் உண்டு பண்ணும்.

எனவே ஒரு முறைக்கு இரு முறை எல்லாச் சோதனைகளையும் செய்யுங்கள். தகுந்த மருத்துவரை அணுகுங்கள்.

குழந்தைக்குச் சத்துணவு தரவேண்டியது மிகவும் அவசியம். தகுந்த ஆகாரம் தர வேண்டியதும் மிகவும் முக்கியம். எது வானாலும், பார்க்கலாமே என்று குழந்தை விஷயத்தில் மட்டும் தாமதப்படுத்தவே கூடாது. உடனடியாக மருத்துவரை ஆலோ சனைக்கேளுங்கள்.

### பலனில்லாமல் படித்து விட்டேனே!

**லட்சுமி மகாலிங்கம் கல்லக்குடி.**

நான் பி.எ. தேர்ச்சி பெற்று வருஷம் ஐந்து ஆகிறது. இன்னும் எந்த வேலையும் கிடைத்தபாடில்லை. பத்திரிகைகளில் வரும் வேலை வாய்ப்புப் பகுதிகளைத் தவறாமல் படிக்கிறேன். மாதம் அவைகளுக்கெல்லாம் விண்ணப்பம் போடவே ஐம்பது ரூபாய் செலவாகிறது. வேலை வாய்ப்பு அலுவலகத்திலும் பதிவு செய்துள்ளேன்.

மனம் நாளுக்கு நாள் கஷ்டப்படுகிறது. வாழ்க்கையே வெறுப்பாகி விட்டது. என்ன செய்வதென்று தெரியவில்லை.

### ஒரு வேலைவாய்ப்பு அதிகாரியின் பதில்:

உங்களைப் போல ஆயிரக் கணக்கானவர்களை நாங்கள் தினமும் சந்திக்கிறோம். எங்களால் முடிந்த அளவுக்கு உதவி செய்கிறோம். அறிவுரையோ, ஆறுதலோ கூறுகிறோம்.

ஆனால் இந்தக் கேள்விக்குப் பதில்அளிக்கும் முகமாக எல்லோருக்கும் ஒன்று கூறவிரும்புகிறேன்.

வாழ்க்கையிலே திட்டமிட்ட முறையில் முன்னேற வேண்டும். இன்றைக்கு எங்களிடம் எம். காம் படித்தவர்கள் அதிகம் இல்லை. பெண் விண்ணப்பதாரர் யாருமே கிடையாது. அப்படி யாராவது இருந்தால் மறுநாளே அவர்களுக்கு வேலை கிடைக்கும்.

ஆனால், பி. ஏ. எம். ஏ. படித்தவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இவர்களை வைத்துக்கொண்டு என்ன செய்ய?

ஏதோ விண்ணப்பம் போட்டோம், ஏதோ ஒரு வகுப்புக் கிடைத்தது. படித்தோம் என்று படிக்கிறார்கள். நாங்கள் கேட்ட குரூப் எங்கே சார்கிடைக்கிறது என்று கேட்பீர்கள். படித்துவிட்டு வேலைக்குத்தான்போகவேண்டும் என்று இருப்பவர்கள், ஒரு படிப்பை ஆரம்பிப்பதற்கு முன் ஒரு நிமிஷம் யோசிக்க வேண்டும். இதைப் படித்தால் நமக்கு என்ன வாய்ப்புகள்

இருக்கின்றன என்று தெரிந்து கொள்ளவேண்டும். தெரியவில்லை என்றால் விசாரிக்க வேண்டும். அந்த வேலைக்கு விட்டு விட்டு, பிறகு தும்பை விட்டு வாலைப் பிடித்த கதையாக வருத்தப்படுவதில் பிரயோஜனம் இல்லை.

ஆங்காங்கே வேலை வாய்ப்பு அலுவலகம் இருக்கிறது. தகவல் வரும் நிலையங்களும் இருக்கின்றன. அவற்றை அணுகுங்கள். எஸ். எஸ். எல். சி. முடித்தவுடனே பிளஸ் 2 முடித்தவுடனே தகுந்தவர்களின் ஆலோசனையுடன் மேற்படிப்பைத் தொடருங்கள். ஏனெனில் பயனில்லாமல் படித்துவிட்டு எங்களிடம் வந்து கண்ணீர் வடிக்கும் இளைஞர்களின் கதைகள் பெரிய இராமாயணம் போன்றது.

## என் மகளுக்கு நான் எப்படிச் செய்வேன்?

**விசாலாட்சி** **வேலூர்**

எனக்கு வயது ஐம்பத்தைந்து. ஒரு மகனும் மகளும் இருக்கிறார்கள். மகன் டாக்டர். நல்ல நிலையில் திருமணம் செய்து கொண்டு இருக்கிறான். மகளுடைய விஷயத்தில் தான் ஏமாந்து விட்டேன். மாப்பிள்ளை குடும்பப் பொறுப்பு இல்லாமல் இருக்கிறார். இதிலே இரண்டு பெண்கள் வேறு.

நான் பெற்ற பெண் கண்ணீர் வடிப்பதைப் பார்க்கும்போது கஷ்டமாக இருக்கிறது. என் கணவர் எனக்கு விட்டுச் சென்றுள்ள சொத்தை என் மகளுக்குத் தர வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். மகனும் சரியென்கிறான்.

ஆனால், நான் அப்படி எழுதி வைத்தால் மாப்பிள்ளை அவளைச் சும்மா விடமாட்டார். அதையும் பிடுங்கிக் கொண்டு போய் செலவழித்துவிடுவார். அவள் ஆயுள்வரை பொருளாதாரப் பாதுகாப்புத் தர நான் விரும்புகிறேன். எந்த வகையில் இதை நான் செய்ய முடியும்?

### வழக்கறிஞரின் பதில் :

செய்யலாம். உங்கள் பெண் வழிப் பேத்திகளின் மீது உங்கள் சொத்தை செட்டில்மெண்ட் பத்திரமாக எழுதி வையுங்கள். அதிலிருந்து கிடைக்கும் வருமானம் உங்கள் மகளின் ஆயுள் பரியந்தம் அவளிடம் கொடுக்கப்பட வேண்டும் என்றும், அதற்குப் பின்னரே பேத்திகளை இந்த இந்த முறையில் சென்று அடைய வேண்டும் என்றும் எழுதி வைத்துவிடுங்கள்.

சொத்து மாற்று உரிமைச் சட்டத்தில் இதற்கு இடம் இருக்கிறது. உங்கள் பெண்ணின் ஆயுள்வரை அதை விற்கவோ, மாற்றவோ கூடாது என்று எழுதி வைத்துவிட்டீர்களானால் யாரும் ஒன்றும் செய்ய முடியாது.

## கணவர் காலுடைந்து கிடக்கிறார்!

**கமலம்மாள்** **பஞ்சவடி**

என் கணவர் ஒரு ரிக்ஷாத் தொழிலாளி. அவர் நான்கு மாதத்துக்குமுன் எங்கள் வீட்டிலிருந்து காலையில் புறப்பட்டார். எங்கள் சந்தைத் தாண்டி மெயின் ரோட்டுக்கு வந்தபோது, அதிகாலையில் வேகமாக வந்த பஸ் ஒன்று அவரை மோதிவிட்டுப் போய் விட்டது.

அப்படியே அங்கேயே நினைவிழந்துவிட்டார். முழங்காலில் நல்ல அடி. பின் பக்க மண்டையிலும் அடி. பொது மருத்துவ மனையில் சேர்த்தோம். இரண்டு மாதம் நினைவில்லாமல் கிடந்தார். அப்புறம் கூட கண்டபடி பிதற்றுவார். எவ்வளவோ மருத்துவம் பார்த்த பிறகு இப்பொழுது பரவாயில்லை. ஆனால் இன்னும் அவரால் நீண்ட தூரம் ரிக்ஷா ஓட்ட முடியவில்லை என்று கஷ்டப்படுகிறார்.

எங்களைச் சுற்றியிருப்பவர்கள், பஸ்காரர் மீது வழக்குத் தொடரலாம் என்று சொல்கிறார்கள். எங்களுக்கு அவ்வளவு வசதி கிடையாது. இதுவே நான் சொல்லி இன்னொருவர் எழுதியிருக்கிறார். எங்கள் ஏழைக் குடும்பம் பிழைக்க ஏதாவது வழி சொல்லுங்களேன்.

### வழக்கறிஞர் பதில் :

உங்களைப் போன்ற ஏழைகளுக்கு உதவுவதற்கு என்றே உயர்நீதி மன்றத்தினுள் 'இலவச சட்ட ஆலோசனை உதவிக் குழு' என்ற ஒன்று உள்ளது. அவர்களை அணுகிக் கேட்டீர்களானால் பலன் கிடைக்கும்.

'மோட்டார் வாகன விபத்து நிவாரணச் சட்டம்' என்று ஒன்று உள்ளது. இதன் கீழ் உங்களுடைய வழக்கைத் தொடரலாம்.

பஸ் விபத்தினால் உங்கள் கணவர் எவ்வளவு தூரம் உடலில் காயம் பட்டுள்ளார், மருத்துவச் செலவு எவ்வளவு ஆனது, மற்றபடி உங்களுடைய எதிர்கால வருமானம் இந்த விபத்தினால் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டுள்ளது என்பதை யெல்லாம் விசாரிப்பார்கள். தகுந்த மருத்துவச் சான்றிதழ்களுடன் உங்களுடைய பாதிப்பை நிரூபிப்பீர்களானால், நீதி மன்றம் உங்களுக்கு நஷ்ட ஈடு தரச் சொல்லும்.

---

**சாப்பிடும் டேபிளில் ஈக்கள் மொய்த்தால், சிறிது தேங்காய் எண்ணெயில் ஒரு வில்லை சூடத்தை நுணுக்கி போட்டு, வெள்ளை துணியில் இலேசாக தொட்டு தேய்த்தால் ஈக்கள் மொய்க்காது.**

# எப்போதும் பெண்

சுஜாதா

**கா**ரில் ஒரு கண்ணாடிப் பொருள் போல அவள் கிடத்தப் பட்டாள். பார்வதி பழக்கமில்லாமல் அதை எடுத்துக்கொள்ளப் பிரயத்தனப்பட்டபோது பாட்டி ''மெதுவாம்மா மெதுவா! இன்னும் தலை நிக்கலை பாரு அதனால எப்பவும் தலையை அணைச்சுப் புடுச்சிண்டுதான் எடுத்துக்கணும்'' என்றாள்.

பார்வதி 'ச்' என்று அதை அவசியமில்லாமல் கொஞ்ச முற்பட்டாள். நமச்சிவாயம் டிரைவருக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு ''மெதுவா ஓட்டுப்பா'' என்றார். பாட்டி, ''போய்ட்டு வாரியாடி செல்லம்'' என்றாள். அவள் கண்கள் கலங்கியிருந்தன.

''உன்னைத்தான் வெச்சுக்கப் பாக்கியமில்லாமப் போயிடுத்து! போய்ட்டு வாடி செல்லம். நாங்கள்ளாம் பாபிஷ்டாள். இந்த மாரி ஆயிடுத்து. என் கண்ணும் காதும் செரியா இருந்தா எட்டுருக்கு வெச்சுக்க மாட்டேனா? என் செல்வமே!''

''பாட்டி, குழந்தையை எங்கே எடுத்துண்டு போறா?'' என்று அண்டை அசலில் விசாரிக்க வந்துவிட அப்பா, ''பாட்டி, விடுங்கோ. அவா கிளம்பட்டும்'' என்றார்.

அவள் உறங்கிக் கொண்டிருந்தாள். காரின் ஆட்டம் அவள் தூக்கத்தைக் கலைக்கவில்லை. கண்ணைத் திறக்க அவசியம் ஏற்படவில்லை. பாட்டி பப் என்று பால் போட்டியிருந்தாள். சுற்றிலும் வெல்வெட் தலைகாணிகள் அமைத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

''இதுக்குப் பேர் என்னங்க?'' என்றாள்.

''பேர் இன்னும் வெக்கலை போல இருக்கு''

''பாக்கியம் எட்டுப் பேரு சொல்லியிருக்கு.''

''எதுக்கும் அவங்களைக் கேட்டுக்கிட்டு வெக்கலாம்.''

''நல்லதா, புது மாதிரியா வெக்கலாங்க''

''பழய மாதிரியாவும், அம்மன் பேர்ல ஒண்ணும் வெக்கலாம். மெள்ளப் போய்யான்னு!''

''மெள்ளத்தாங்க போறேன்.''

''குழந்தைக்கு ஆடுதில்ல. இருப்பத்திலே சாக்கிரதையாப் போ!''



பேருக்குப் பேர் அதிகாரம் என்று மனசில் சொல்லிக் கொண்டான் டிரைவர்.

''பணம் எடுத்திங்களா?''

''ஐயாயிரம் எடுத்தேன். போதுமில்லே?''

''வீட்ல ஸ்வீட் பண்ணச் சொல்லியிருக்கேன். லேடி டாக்டரை வரச் சொல்லியிருக்கிறேன். அப்புறம் வெட் நர்ஸுக்குக் கூட ஏற்பாடு பண்றதாச் சொல்லியிருக்காங்க.''

சாயங்காலம். மது பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்ததும் நேராகப் பாப்பாவைப் பார்க்கப் போனான்.

''பாட்டி, பாப்பா எங்க?''

''பாப்பா வந்து... ஊருக்குப் போயிருக்குடா.''

## குழந்தையின் உயரமும் எடையும்

குழந்தையின் எடையை அறிய குழந்தையின் வயதுடன் 3-ஐக் கூட்டி அந்தக் கூட்டுத் தொகையை 5 - ஆல் பெருக்குங்கள்.

(வயது + 3) × 5 = குழந்தையின் எடை (பவுண்டில்)



''ஊருக்கா? அது எப்படித் தனியாப் போகும்?''

''எடுத்துண்டு போயிருக்காடா.''

''யாரு?''

''தெரிஞ்சவா. பாப்பா ரொம்ப விச்சுளியா இருக்கோல்லியோ. அதுக்கு புஷ்டியா ஆகாரம் கொடுத்துத் திருப்பிக் குடுத்துருவா.''

''யாரு. அந்தக் குண்டு மாமியா?''

''ஆமா. அவா தான்.''

''எதுக்கு? நம்மாத்திலே இருந்துட்டுப் போறது. நான் மம்மு கொடுக்கிறேன். கடைல வாங்கிண்டு வரேன்.''

''ரொம்ப நா அங்கே இருக்காது. வந்துரும்.''

''ம்! எனக்குப் பாப்பா வேணும்.''

''எல்லாம் உங்கப்பாவைக் கேளு.''

''நீ கேளு.'' இதற்குள் மற்ற பிள்ளைகள் வந்துவிட, பாப்பா! பாப்பா! எங்க என்று ரகளை பண்ணினார்கள். மது மூலையில் போய் உட்கார்ந்து கொண்டு அழுதான். ''உங்கப்பா வந்தா முதுகுத் தோலை உருச்சுருவான். சத்தாம இருங்கோ!''

மூன்று பேரும் ஆளுக்கொரு மூலையில் உட்கார்ந்து கொண்டு விசித்து விசித்து அழுதார்கள். பாப்பா பாப்பா என்று அரற்றினார்கள். அப்பா வாசலில் வரும் சப்தம் கேட்டதும் அழுகையை நிறுத்தி கவரை நோண்டினார்கள்.

''என்னடா விளையாடப் போகலையா?''

பதில் இல்லை.

''மூணும் ஏங்கிப் போயிருக்கு.''

''மது! வா, சினிமாவுக்கு அழைச்சுட்டுப் போறேன்.''

''வேண்டாம்.''

''என்னடா இது ஆளுக்கொரு மூலேலே! இதப் பாரு மது, பாப்பா நம்மை விட்டு எங்கயும் போகலை. அது எங்க இருக்குன்னு எனக்குத் தெரியும். அதைக் கொஞ்ச நல்ல திரும்பி வாங்கிண்டு வந்துறலாம். கொஞ்ச காலத்துக்குத்தான். நம்மால வளக்க முடியலையோல்லியோ, அதுக்காகத்தான் அவாகிட்ட அனுப்பிச்சிருக்கோம். பெரிசாப் போனப்புறம் கொண்டு வந்துருவோம். எங்கயும் போகலை. போகாது.''

மது கண்களில் கண்ணீருடன், ''நான் வளக்கறேம்ப்பா'' என்றான்.

அப்பா அவனைத் தன்பால் வாங்கிக்கொண்டு சற்றே அணைத்துக் கொண்டு தலையைத் தடவிக் கொடுத்து, ''சரி, பார்க்கலாம். இன்னிக்கு அங்க இருக்கட்டும். நாளைக்குப் பார்க்கலாம். போய் விளையாடு. டீவில என்னடா இன்னிக்கு?''

மது உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை. அப்பாவைப் பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். அடிப்பார் என்று எதிர்பார்த்தான். தலையைத் தடவிக் கொடுத்தது சற்று ஆச்சரியமாக இருந்தது.

புதியவனுக்கு முதலில் உலகம் என்பது அவனுள் பொதிந்திருக்கும் உணர்ச்சிகள் ஆதார உணர்ச்சிகளிலிருந்துதான் ஆரம்பித்திருந்தது. கருவின் இருட்டில் இருக்கும் போது அவனைச் சூழ்ந்திருந்த கதகதப்பும் போஷாக்கும் வெளியே வந்தபோது கொஞ்ச நாளைக்காவது அம்மா என்பவளின் ஸ்தனங்களின் ஆக்கிரமிப்பில் கிடைத்திருக்க வேண்டும். அவனுக்கு அம்மாவின் தொடர்பு அறுந்திருக்கக் கூடாது. அறுந்துவிட்டது. அவனுள் இருந்த அசேதனமான உணர்ச்சிகள் திரிந்தன. அம்மாவின் ஏராளமான உடம்பின் கதகதப்புக் கிடைக்காமல் அவனுள் இருக்கும் ஆத்மா தவித்தது. புரியவில்லை

இப்போது ஒரு புதிய உஷ்ணம். இது என்ன என்று இனம் கண்டு பிடிக்க முடியவில்லை. இருந்தும் அவள் உதடுகள் மார்பகங்களை நாடின.

மார்பில் பால் பொங்கும் ஒரு புதியவள் ஒரு நாள் மாலை வந்து அவள் வாயில் காம்பை வைத்தபோது முதலில் சற்றுத் திகைத்துப் போனாலும் சற்று நேரத்தில் ஜிவ்வென்று இழுக்க ஆரம்பித்தாள். ஏதோ குறையாக இருந்தது. எப்படியோ புரியாத விதத்தில் நிறைவு பெற்று விட்டது. பழகிவிட்டாள். அவள் தினம் தினம் வருகிறாள்.

''உறிஞ்சுதா?''

''நல்லா உறிஞ்சுதுங்கம்மா.''

பார்வதி சற்று திருப்தியுடன் குழந்தையைப் பார்த்தாள். வீட்டில் கூடத்தில் ஒரு ஓரத்தில் அந்தப் பெண் உட்கார்ந்திருந்தாள். அவள் மார்பு நிறைந்து ததும்பிக் கொண்டிருந்தது. பாடி எதுவும் அணியவில்லை. மார்பு தெரிவதைப் பற்றியும் வெட்கப்படுபவளாகத் தெரியவில்லை.

''உங்குழந்தைக்கு எத்தனை மாசம் இருக்கும்?''

''இது மாதிரிதாங்க அதும்! இப்பவே காப்பி குடிக்குது!''

''பின்கட்டிலிருந்து பசும்பால் வாங்கிட்டுப் போ. என்ன?''

''ஆவட்டும்மா.''

''இந்தா மாத்திரை. இதைச் சாப்பிடு. காலைல சுத்தமாக் குளிச்சுட்டு வரணும் தெரியுமா? முலை எப்பவும் மூடியிருக்கணும். டாக்டரம்மா கொடுத்திருக்காங்க பாரு பஞ்சு மாதிரி, அதை எப்பவும் வச்சுக்க. பாடி போடாட்டாப் பரவாயில்லை. தவறாம வைட்டமின் மாத்திரை, டானிக் எல்லாம் சாப்பிடணும். சளி இளி புடிச்சுக்கிச்சுன்னு உடனே எங்கிட்டச் சொல்லிரணும். காலைல வந்ததும் டெட்டால் போட்டுக் குளிக்கணும். நகத்தை இவ்வளவு நீளமா வெச்சுக்கக் கூடாது.''

''சரிங்கம்மா.''

''இந்தா ஆப்பிள் சாப்பிடு.''

அவள் வெட்டப்பட்ட துண்டங்களில் ஒன்றை மட்டும் தயக்கத்துடன் சாப்பிட்டாள்.

''எல்லாத்தையும் இங்கேயே சாப்புடு.''

''எம் புருசன்....''

''அவனு பால் குடுக்கறேன், சாப்பிடுறீ!''

அவள் முண்டி முண்டிப் பால் குடித்துக் கொண்டிருந்தாள். பக்கத்தில் வெல்வெட்டும் சாட்டினும் இறைந்திருந்தன. சின்னதாக அரை வட்ட வடிவில் கொசுவலை. மேலே தொங்கும் ப்ளாஸ்டிக் சலசலப்புடன் தொட்டில். ஊரில் உள்ள அத்தனை பேபி ஆயிலும் சோப்புக்களும் பஞ்சை விட மென்மையாகப் பஞ்சுகளும் இன்ன பிறவும்... அவள் முதன் முறையாக மார்பிலிருந்து விலகி கண்ணைக் குறுக்கிக் கொண்டு விளக்கைப் பார்த்தாள்.

❋❋❋❋❋❋❋❋-❋❋❋❋❋❋❋❋




இனிய இசையையும், கலைகளையும் ரசிக்க வலது காது ஏற்றது. தர்க்கம் (லாஜிக்), கணக்கு போன்ற கடினமான விஷயங்களைக் கருத்தூன்றி கேட்க இடது காது ஏற்றது என்று இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள். -ஏ.வி. தேவன்

❋❋❋❋❋❋❋❋-❋❋❋❋❋❋❋❋

''எம்மாடி! கண்ணு! தங்கப் பாப்பா! அம்மாவைப் பாரும்மா! இத பாரு அம்மா! உன் பேர் என்ன என் தாயே! தங்கமே! உன் பேர் என்ன? எப்படி எங்கிட்ட வந்தியா செல்லம்!

**கண்ணில் உறுமணியோ எங்கள்**
**களி தீர்த்த பெட்டகமோ**
**பொன்னில் உறும் ஒளியோ**
**பூவில் உறும் ஒளியோ**
**கொடிக்கால் மருக்கொழுந்தோ**
**கோதையில்லாப் பூச்சரமோ**

கொண்டாடி என் செல்வத்தை! நீ அங்கே போய் பால் ஊறினப்புறம் வா!''

''அம்மா! எப்பம்மா வூட்டுக்குப் போகலாம்?''

''சொன்னனில்ல? சாயங்காலம் வரைக்கும் இங்கதான் இருக்கணும்.''

''அங்க ஒரு புள்ளம்மா.''

''அதுக்குத்தான் புட்டி புட்டியா பவுடர் கொடுத்திருக்கேனே போதாதா? வெள்ளைக்காரன் பவுடர்.''

''வெள்ளைக்காரன் பவுடர் எல்லாம் கொடுத்தா கக்குதும்மா!''

''கொஞ்ச நாள்ள பழகிடும். உம் புருசனைப் பார்த்துக்கச் சொல்லு.''

என்னம்மா, என்னம்மா! ஏழு கடல் நீந்தி எடுத்து வந்த தாமரைப்பூவே!

''என்ன, என் மக எப்படி இருக்கா?''

பால்காரி எழுந்து நின்றாள். அவள் மார்பகம் இன்னும் மூடாமலே இருந்தது.

''இங்கல்லாம் வராதிங்கன்னு சொல்லியிருக்கேனில்ல?''

''நேத்திக்கு அழுவலை போலிருக்கே! அந்த ஆளு போன் பண்ணியிருந்தாரு. புள்ளங்

கள்ளாம் பார்க்க விரும்புதாம். கூட்டி யாரவான்னு கேட்டாரு.''

''சரிதான். போன வாரம்தானே பாத் தாங்க!''

''பத்து நாளாயிடுச்சு பார்வதி.''

''ஆறைக்க, அதுக்காகத் தினம் பாக்க வர ணுமா?''

''அவங்க குழந்தைதானே!''

''இத பாருங்க. இத நீங்க திருப்பித் திருப்பிச் சொல்லிக்கிட்டிருக்க வேணும். எடுத்து வந்தோம். வளக்கறோம். ராஜாத்தி மாதிரி வளந்துக்கிட்டு இருக்கா. ஒரு குறை யும் இல்லேன்னு சொல்லுங்க. ஒரு அழுகை இல்லே. குழந்தை தேறி இருக்குன்னு சொல் லுங்க. பாக்க வரணும்னு நாத்திக்கிளமை மத்தியானம் அரை மணி வந்து பாத்துட்டு போகச் சொல்லுங்க.''

''எப்படிச் சொல்றது பார்வதி? எப்ப வேணுக் காட்டறோம்னுதானே பேசி எடுத் தாந்திருக்கோம்.''

''இளவனுக்கு வேற வேலே இல்லே! நாம கொண்டு வராட்டாச் செத்துப் போயிருக் கும்! கண்ல உசிரை வெச்சுக்கிட்டுப் பாச் சாங்குஞ்சு மாதிரி வந்தது எப்படி தேறி யிருக்கு பாருங்க. கண்ணு பட்டுரும் போங்க. எப்படியாவது அவங்களுக்குச் சொல்லிப் போட்டுருங்க. தடுப்பு ஊசி கொடுத்திருக்கு, நாத்திக் கிளமை வந்தாப் பாக்கலாம்னு சொல்லிடுங்க.''

''அய்! என்னைப் பாக்கறு.''

குழந்தை அழ ஆரம்பித்தது.

''உங்களைப் பார்த்தாலே பயந்துக்குது. பயப்படுத்திட்டீங்க. இங்க இருந்து போங்க! என்னம்மா! வாம்மா.''

''இப்பத்தாங்க குடுத்தேன். மறுபடி குடுத்தா ஜீரணம் ஆவாதுங்க!''

''அழுதே! அதபாரு! எனக்கு எப்பக் குடுக் கறது, எப்பக் கூடாதுன்னு தெரியும். குழந்தையே தொப்பை ரொம்பிருச்சன்னு விட்டுரும். என்ன? எதுத்துப் பேசாம அவுத்துக் கொடு!''

அவள் மறுபடியும் உட்கார்ந்து தன் கரிய மார்பகத்தைத் திறந்து அவன் வாயில் திணித்தாள்.

கொஞ்சம் கொஞ்சமாக படிப்படியாக அவன் தன்னிலிருந்து வேறுபட்ட பொருள் களை உணர ஆரம்பித்தாள். அவைகளினின் றும் தன்னைப் பிரித்துக் கொள்ளும் உணர் வும் அவளுக்குச் சிறுகச் சிறுக ஏற்பட்டது. வளர வளர அவன் அந்த அந்நிய மார்பி லின்றும் விலகித் தன்னைச் சுற்றி கூரிய கண் களால் கவனிக்க ஆரம்பித்தாள். விளக்கு அவளைக்கவர்ந்தது. அவள் முகத்தில் தசை அமைப்புக்களை வடிவப்படுத்திக் கொள்ள அவ்வப்போது சிரிப்பது போலவும் இருந்தது. முயன்றாள். மெல்ல அவள் சில கவன ஈர்ப்புக் காரியங்களையும் கற்றுக் கொள்ள ஆரம் பித்தாள். அப்போது அவள் சிரிப்பு உள் நோக்கத்துடன் அமைவது போலத்தான் இருந்தது. அவளுக்கென்று ஒரு 'நான்' லேசாகப் பிறக்க ஆரம்பித்தது. சில பரிச் சய முகங்களைப் பார்த்துச் சிரிக்கக் கற்றுக் கொண்டாள். பார்வதியின் முகம், பால் தரும் முகம், நமச்சிவாயத்தின் முகம், டிரை வர் முகம், மூத்திரத் துணி மாற்றுவதற் கென்றே வைத்திருந்த சின்னப் பெண்ணின் முகம், ஆம், இது யார் புதுசா மூன்று முகங்கள்!

''அப்பா அதா நம்மாத்துப் பாப்பா?'' என்றான் மது.

''பெரிசா ஆயிடுத்து'' என்றான் சின்ன வன்.

அப்பா ஓரத்திலிருந்து கூப்பிட்டார். ''அப்படியே அவதான் நமச்சிவாயம்! கண்ணு, காது மடிப்பு, நெத்தி எல்லாம்.''

''அப்படிங்களா? உங்க சம்சாரத்தைச் சின்னப் புள்ளையில இருந்தே தெரியுங்களா? பாவம், மகராசி, போய்ட்டா!''

''தொடக் கூடாது தம்பி!''

''விரலே மட்டும் தொட்டுப் பாக்கறேன் மாமி. சின்னூண்டு நகம் வெச்சிருக்கு!''

''பத்தியா பத்தியா கை அழுக்கா இருக் கில்லே!''

''ஊம், பாப்பா என்னுது!'' என்றான் சின்னவன்.

''உன்னதுதாம்மா, தொடாம, கிட்டத் தில போகாமப் பாரு அதுக்கு வலிக்கு மில்லே!''

''கொஞ்சம் எடுத்து வெச்சிக்கறேன்'' என்று அதன் தலைமாட்டில் மது உட்கார்ந் தான்.

''ச்ச்ச்ச் குழந்தையைக் கசக்கக் கூடா துப்பா. பூமாதிரி அது. கொஞ்சம் பெரி சாகட்டும். விளையாட அனுப்பிடறேன்.''

''எப்ப, நாளைக்கா?''

''இன்னும் கொஞ்சம் வருஷம் ஆனதும்''

''இதுக்குப் பேரு என்ன?''

''பேரு நிறைய வச்சிருக்கோம். 'பொண் ணு'ன்னுதான் கூப்பிட்டுக்கிட்டிருக்கோம். சன்ன இல்லாத பேரு பாருங்க. பொண்ணு பொண்ணு பொன்னுதாங்க! இது தங்கக் கட்டி..''

''என்ன அய்யரே! பார்த்தீங்களா? எப் படி இருக்குது? புஷ்டியா, பயில்வான் மாதிரி! பேசாதீங்க. கண்ணு பட்டுரும். போய்ட்டு வாங்கடா... பையன்களா, போயிடுங்கப்பா அப்பப்ப வரலாம்!'' (தொடரும்)

கால் பெருவிரலின் நகக்கண் வலிக்கு டிங்க்ச்சர் அயோடினைப் போட்டால் வலி போய்விடும், அழுக்கும் இருக்காது. வலி வரும்வரை காத்திருக்க வேண்டாம்; சேற் றில், மழையில், தண்ணீரில் அதிகநேரம் இருந்துவிட்டு வரும்படி நேர்ந்தால் இதைப் போட்டால் போதும். நகக்கண் வலியே இருக்காது. இதை நான் எனக்குத் தெரிந் தவர்கள் அனைவருக்குமே சொல்லிப் பயன் அடைந்துள்ளேன். -சாயி

என் கதையால் எனக்கு ஏற்பட்ட பிரச்னை:

## இந்துமதி சொல்கிறார்

நான் எழுதிய கதைகளிலேயே ரொம்ப பிரச்னையா இருந்தது 'இரண்டு பேர்' ஒண்ணு தான். ரொம்பச் சங்கடமாக இருந்தது.

இதுல எனக்குன்னு தனிப்பட்ட பிரச்னை என்று சொல்றதுக்கில்ல; அந்தக் கதையே 'போல்ட் தீம்'ங்கிறதாலயும், தமிழ்ல 'வெஞ்சர்' ஆகப் பண்ணினதாலேயும் நிறைய பேருக்குப் பிரச்னையாயிடுச்சு.

அந்தக் கதை—

திருமணமாகி, வயதுவந்தபெண் இருக்கும் ஒரு தாய்க்கு ஏற்படற மனத் தடுமாற்றத் தைப் பற்றினது. இசையில் ஈடுபாடுள்ள ஒரு இளைஞன்கிட்ட அவளுக்கு லயிப்பு ஏற்படறது. அவனுக்கும் இவளிடம் ஈர்ப்பு இருக்கிறது. கடைசியிலே கணவனிடமே திரும்பிடறா.

இதைக் குமுதத்திலேநானும், திருமதி சிவசங்கரியும் மாத்தி மாத்தி எழுதினோம்.

நான் போற வர்ர இடங்கள்லேயெல்லாம் நீங்களா இப்படி எழுதறதுன்னு ஆச்சரியத்தோடும்... நீங்க இப்படி எழுதலாமான்னு கேள்விக் குறியோடும், முகச் சுளிப்புகளோடும் எத்தனை எத்தனையோ 'எக்ஸ்பிரஷன்ஸ்' வெளிப்படநடந்துக்கிட்டாங்க.



பெண்கள் இதப் பற்றி எங்கிட்ட கொஸ்டின் பண்ணினத விடவும்...: ஆண்கள்லே கேட்டவங்கதான் அதிகம். காரணம் இந்தக் கதை தங்களுக்குப் பிரச்னையா வருமோன்னு பயத்திலேயே இந்தக் கதை ஆண்களுக்குப் ப்ரச்னையாயிடுச்சு... ஸோ, அவங்களாலே அதத் தாங்கிக்க முடியாமத்தான் கொஸ்டின் பண்ணியிருக்காங்க...

இன்னொருத்தர் போன்ல, 'என்னைப் பார்க்க வரணும்... பேசணும்'னு கேட்டார். 'வாங்க பேசலாம்னு' சொன்னேன்.

மறுநாள் காலேலே தன் மனைவியையும் மகளையும் கூட்டிக்கிட்டு எங்க வீட்டுக்கு வந்தார். 'இந்துமதி'யைப் பார்க்கணும்னு என்கிட்டயே கேட்டார். 'நான்தான், என்ன விஷயம் சொல்லுங்க'ன்னேன். இந்துமதின்னு ரொம்ப வயசிருக்கும்னு நினைச்சிட்டு வந்த அவருக்குப் பெருத்த ஏமாற்றம்.

'உன்னை மாதிரி சின்னப் பொண்ணுகிட்டே பேச விரும்பல... அதைப் பற்றி உனக் கொண்ணும் தெரியாது'ங்கிற மாதிரி சொல்லிட்டு வேகமாய்த் திரும்பிப் போய்விட்டார்.

இது எனக்கு ரொம்ப அதிர்ச்சியாகவும் புதிராகவும் இருந்தது. அவர் எதைத் தருதின்னு நினைக்கிறார்... வயதையா?

இதுமட்டுமில்ல, இன்னொரு பெண் அந்தக் கதை வந்தப்புறம் தினமும் காலேலே பதினொரு மணிக்குத் தவறும போன் பண்ணுவாங்க... என்னவெல்லாமோ சொல்லி அழுவாங்க. 'அம்மா எனக்கு வீட்லே வேலையிருக்கு'ன்னு சொன்னாக்கூட, ப்ளீஸ்... எனக்கு உங்கிட்ட இதெல்லாம் சொல்லிடணும்... சொன்னாத்தான் கொஞ்சம் மனசு லேசாறது...எனக்காகக் கொஞ்ச நேரம் கேளுங்க... தயவு செய்து போனை வச்சிடாதே'ன்னு சொல்லிக் கெஞ்ச ஆரம்பிச்சுடுவாங்க. எனக்கும் வேறென்ன செய்யறதுன்னு தெரியாம தினமும் கேட்கவேண்டியதாயிடுச்சு.

ஒவ்வொரு தடவையும் அந்த அம்மாபேசி முடிச்சதும் எனக்கு வேலையே ஓடாது; அவங்க போன் நம்பர் கேட்டாலோ அட்ரஸ் கேட்டாலோ சொல்ல மாட்டாங்க.

நான் வேற வீடு மாறி, போன் நம்பர் மாறினப்புறம்தான் அந்த அம்மா போன் பண்றதில்ல; என்னோட கதைகள்லே ரொம்பவும் மத்தவங்களுக்கும் எனக்கும் ப்ரச்னையானது 'இரண்டு பேர்'தான். —துரை

---

நெஞ்சில் கபம் உள்ளவர்கள் வால் மிளகை இடித்துத் தூள் செய்து கொண்டு, ஒரு ஸ்பூன் தேனில் ஒரு சிட்டிகை மிளகுத்தூளைக் கலந்து காலையில் சாப்பிட்டால் கபம், கோழை உடனே பறந்து விடும். - ஏ.வி. தேவன்





# உணவின் மறுபக்கம்

— மாயா

டாக்டர்வீட்டிலிருந்து வந்த அத்தை மொண மொணவென்று பொரிந்து கொட்டிக் கொண்டிருந்தாள். அத்தையின் பெண் குழந்தை சுஜாதாவுக்கு டான்ஸில்ஸ் ஆப்பரேஷன், டைபாய்டு என்று போன வருஷம் பூராவும் ஆஸ்பத்திரி வாசம், வைத்தியர் விஜயம்தான்.

சின்னஞ் சிறு வயதிலிருந்தே, நாள் கழித்து தவமிருந்து பிறந்த பெண்ணென்று சுஜாதாவைக் கண்ணும் கருத்துமாய்ப் பார்ப்பாள் அத்தை. கொழு கொழுவென்று எல்லார் கருத்தையும் கவர்ந்த குழந்தை சுஜாதா.... 5, 6 வயதானதும் ஒவ்வொன்றாகச் சிறு சிறு கோளாறுகள். 'திருஷ்டி பட்டு விட்டது' என்று ஒருவர் கண்ணிலும் படாமல், தனி அறையில் சாப்பாடு போடுவாள் அத்தை.

ஜலதோஷம், தொண்டைப் புண், ஜுரம் என அவளுக்கு ஒவ்வொன்றாய் வர வர, பந்து, ஓடிப் பிடித்தல் போன்ற வெளி விளையாட்டுக்கள் குறைந்து. வீட்டினுள் அமுக்கமாக உட்கார்ந்து புத்தகம் படிப்பது சுஜாதாவின் வழக்கமாகி விட்டிருந்தது.

மொட்டை மாடிக்குப் போனவள், ஒரு தட்டு நிறைய உருளைக் கிழங்கு வறுவலுடன் ஒரு எனிட் பிளைட்டன் புத்தகத்தில் ஆழ்ந்து போயிருந்த சுஜாதாவிடம்,

'டாக்டர் என்ன சொன்னார் சுஜா உனக்கு?'' எனக் கேட்டேன்.

''எனக்கு 'ஓவர் வெயிட்'டாம் அக்கா. சாப்பாட்டில் கொழுப்புச் சத்தைக் குறைத்து வெயிட்டைக் குறைத்தால்தான் உடம்புக்கு நல்லதென்று டாக்டர் சொன்னான்.''

—''என்ன படிப்புப் படிச்சுட்டு வந்துர்ராங்க... கொழந்தை சதை வயசானா மறைஞ்சு போயிடாதா என்ன? அதுக்காக, வளர்ற வயசிலே போய் டயட்டாம், கண்ட்ரோலாம். அதுவும் உடம்பாக் கெடந்து தேறின குழந்தை.... கொஞ்சம் வாளிப்பா வளர்ந்த பரம்பரை. அவளுக்கும் பொதுவாவே ஒடம்பு பெரிசு... அது தெரியாம அந்த டாக்டரு....''

அத்தையின் பொருமலுக்கு அர்த்தம் பூராவும் புரிந்தது எனக்கு. அத்தைக்கு இதைப் பற்றிய சில முக்கியமான விஷயங்களைக் கட்டாயம் சொல்ல வேண்டும் என்றும் கூடவே தோன்றியது.

நம் உடலில் இருக்கும் கொழுப்பு செல்

களின் எண்ணிக்கை பெரும்பாலும் சிறு வயதிலேயே நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது. சிறு வயதில் தேவைக்கு அதிகமாக நாம் அவர்களுக்குக் கொடுக்கும் அநாவசியமான உணவுப் பொருட்கள் இந்தக் கொழுப்பு செல்களின் எண்ணிக்கையை அதிகமாக்குகின்றன. 80 சதவீதத்துக்கு மேல் சிறு வயதில் சதை போடும் குழந்தைகள் பெரியவர்களானதும் கூட அவ்வாறே இருக்கக் காரணம் அதுவே. இந்தநியதிஎல்லாக்குழந்தைகளுக்கும் பொருந்தாவிட்டாலும், பரம்பரையாக சரீரம் பெரிதாக அமைந்த குடும்பங்கள், நீரிழிவு மற்றும் கொலஸ்ட்ரால் குறை அமைந்த குடும்பங்கள் இவற்றில் பிறக்கும் குழந்தைகளுக்கு மிகவும் பொருந்துகிறது.

அதிகம் பருமன் உள்ள பெற்றோர்களுக்கு பிறக்கும் குழந்தை, குடும்பத்திலேயே சதை போடும் உடல் வாகு இருத்தல், நான்கிலிருந்து சுமார் பதினொரு வயது வரை அளவுக்கு அதிகமாக அளிக்கப்படும் போஷாக்கு, நோயினால் தாக்கப்பட்டு பிறகு குணமாகும்பொழுதில் சாப்பாட்டை அதிகமாகத் திணித்தல், சோம்பேறித்தனமான பொழுது போக்குகளை வளர்த்துக் கொள்ளுதல் இவை யாவும் குழந்தைப் பருவத்திலேயே சதை போட முக்கிய காரணங்கள். இவற்றைத் தவிர, உடலில் ஏற்படும் சில சுரப்பிக் கோளாறுகளினாலும் இக்குறை ஏற்படலாம். உங்கள் குழந்தை அளவுக்கு மீறிய பருமனாக இருப்பதாக உங்கள் மனத்துக்குத் தோன்றும் நிமிஷத்தில் உங்கள் டாக்டரைக் கலந்தாலோசித்து குழந்தையின் எடையை சராசரியுடன் ஒப்பிட்டுப் பாருங்கள்.

மருத்துவ ரீதியாக உடல் பருமனில் சிறு வயதிலிருந்தே ஏற்படும் கஷ்டங்கள் ஒரு புறமிருக்கட்டும். மனோதத்துவ ரீதியிலும் கூட அளவுக்கு மீறிப் பருமனாக உள்ள குழந்தைகள் மற்ற குழந்தைகளினின்றும் தனித்தவர்களாக விடப்பட்டு, அவர்கள் தமக்குள்ளாகவே அந்தக் குறையைத் தீவிரமாக்கிக் கொள்ளவும் வாய்ப்புண்டு. இளமையில் இட்டமான உடல் அமைப்புக்காக நேரத்தையும் பணத்தையும் செலவழித்து, கவலைப்படுவதை விட சற்று முன்னதாகவே, அளவாக வளருவதில் கவனம் செலுத்துவது மேலல்லவா? மேலும் சிறு வயதில் சரியாக்கப்படாத இக் குறை நாளாக ஆக, அதிகமாக வளர வாய்ப்புள்ளதே தவிர, குறைய வாய்ப்பில்லை. இது பலரும் அறியாத ஒரு முக்கியமான உண்மை.

குழந்தைகள் சுமார் 16 வயது வரை வளரும் பருவத்தில் இருப்பதால் உங்களது கட்டுப்பாடான உணவு முறை அவர்களின் வளர்ச்சியை எந்த விதத்திலும் பாதிக்கக் கூடாது. சத்துக் குறைவோ தலைகாட்டவும் கூடாது. எந்த ஒரு பருமனான குழந்தையையோ, டீன் ஏஜரையோ விளையாட்டுக் காகக்கூடக் கேலி செய்யாதீர்கள். இது



தவறான முறையில் அவர்களது மனத்தில் உறுத்தலாம். இந்தப் பிரச்னையைக் குழந்தையின் எதிரே விவாதிப்பதுகூட அநாவசியம். ஆனால் நீங்கள் இதைப் பற்றி தீவிரமான நடவடிக்கை எடுத்தல் மிக அவசியம்.

பிரச்னையைச் சமாளிக்க வேண்டிய நிலையிலிருப்பவர்களுக்குக் கீழ்க்கண்ட வழிமுறை நல்ல பலனைத் தரலாம்.

முதல் கட்டமாக, உங்கள் குழந்தை எந்த அளவில் எந்த விதத்தில் சராசரியிலிருந்து வேறுபடுகிறது என்பதை மருத்துவர் உதவியுடன் கண்டறிந்து, எவ்வளவு கிலோ எடையைக் குறைத்தால் போதுமானது எனக் கண்டறியுங்கள். பிறகு உணவு முறை, தேகப் பயிற்சி, இவை இரண்டில் எதை எவ்வாறு உபயோகப்படுத்தப் போகிறீர்கள் என்பதைத் திட்டமிடுங்கள்.

வளரும் குழந்தைகளுக்குக் கட்டுப்பாடான உணவு ஒன்றும் அனுமதிக்கப் படுவதில்லை. ஆதலால், சில எளிய, நல்ல தேகப் பயிற்சிகள் இம்முயற்சிக்கு மிகவும் இன்றியமையாதவை. இக்காரணத்துக்காக உங்கள் குழந்தையின் சில பழக்க வழக்கங்களை அடியோடு மாற்ற வேண்டியதாயிருக்கலாம்.

1. முதலில் இனிப்புப் பண்டங்கள், எண்ணெய் சேர்த்த பலகாரங்கள் இவற்றை அறவே தவிர்த்து, பிறகு படிப்படியாக சர்க்கரையைக் குறைத்து வாருங்கள்.

2. Ready made formula feeds, டின்னில் அடைத்த பாலுணவு, மற்றும் தானிய உணவுகளைக் கூடியவரையில் குறைத்து நாம் டாப்பிடும் பால் தானிய உணவுகளையே கூடியவரையில் பழக்குங்கள். அளவு தெரியாமல் கிடைக்கும் டின் புட் அவைகளை எல்லாம் குழந்தைக்கு அளிப்பது அவர்கள் அதிகப் பருமனை அடைய ஒரு முக்கியமான காரணம் எனக் கண்டு பிடித்துள்ளனர். இந்த நிலையில் தாய்ப் பாலின் மகத்துவத்தை மறுபடியும் நினைத்துப் பாருங்கள்.

3. இதைப் போலவேதான் முட்டை விஷயமும். குழந்தைகளை 'நன்றாக'க் கவனிக்கும் பொருட்டு ஒரு நாளைய சாப்பாட்டில் அதிகமாக முட்டையைச் சேர்ப்பது மிகத் தவறு. எந்த வயதினரானாலும் நார்மலாக இருப்பவர்களுக்கு ஒரு நாளைக்கு ஒரு முட்டைக்கு மேல் கண்டிப்பாகத் தேவை இல்லை.

4. நடு நடுவே கொறிக்கும் தின்பண்டங்கள் எண்ணெய் சேராதவையாய் இருக்கட்டும். (அரிசிப் பொறி, பாப்கார்ன், ஏதாவது காய்கறி(வெள்ளரி, காரட்)பழங்கள் இவையே கொரிக்கும் பண்டங்களாக இருக்கட்டும்.

5. பருமனான உங்கள் குழந்தைக்கு தேங்காய் அதிகம் சேர்க்க வேண்டாம். தினமும் சமையலுக்காக ஒன்று முதல் இரண்டு டீஸ்பூன் வரை எண்ணெயைத் தவிர, வேறு கொழுப்பு எதுவும் வேண்டாம்.

கொஞ்சம் சிரமம் பாராட்டாமல் ஒரு மாதத்திய குழந்தை உணவுக் குறிப்பை சீர்தூக்கிப் பார்த்தலின் மூலம் கீழ்க்கண்ட மாறுதல்களை நீங்கள் எளிதாகச் செய்யலாம். வீட்டில் தின்பண்டங்களைச் சேகரிக்காமல் இருப்பது, நிறையக் கீரை காய்கறிகள் சாப்பிடப் பழக்குவது, நொறுக்குத் தீனியை வாங்கிக் கொடுக்காமல் இருப்பது இவை நீங்களே ஆச்சரியப்படும்படி நல்ல பலனைத் தரும். எண்ணெய், இனிப்பு சேர்ந்த பண்டங்களை அறவே தவிர்த்து, சர்க்கரையையும் ஒரு நாளைக்கு ஒன்று அல்லது இரண்டு டீஸ்பூன் அளவுக்குக் கொண்டு வந்தாலேயே ஒரு நாளைய உணவில் அவசியமான சத்து எதையும் குறைக்காமலேயே சுமார் 200 கலோரியை நீங்கள் கட்டுப்படுத்து கிறீர்கள்.

நடனப் பயிற்சி, ஸ்கிப்பிங், ஓடிப்பிடித்து விளையாடுதல் இது போன்ற உடலுழைப்பு அதிகமாகத் தேவைப்படும் விளையாட்டுக்களில் உங்கள் குழந்தைகளை ஈடுபடுத்துங்கள்.

அவ்வப்போது கடைப்பிடிக்கப்பட்டுவரும் சில மிகக் கடுமையான கட்டுப்பாடுகளைக் காட்டிலும் ஒரு நிரந்தரமான, சீரான, சாப்பாட்டு, தேகப் பயிற்சி முறையே மிகவும் சிலாக்கியமானது.

## தாய்ப்பால் சுரக்க வழிகள்

தற்சமயம் தாய்ப்பாலின் மகிமையை யாவரும் உணரத்துவங்கியுள்ளனர். ஆயின் எல்லாத் தாய்மார்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்குத் தேவையான அளவு பால் சுரப்பதில்லை. பால் சுரக்க எளிதான பல வழிகள் உள்ளன.

1. முருங்கைக் கீரையை இளம் தளிராக எடுத்து (இளம் பூவும் இருக்கலாம்) பாசிப்பருப்புடன், சீரகம் சேர்த்து நெய்யில் தாளித்து கறி செய்து உட்கொண்டால் பால் சுரக்கும்.

2. சுரைக்காயையும் மேற்கண்டவாறு பக்குவம் செய்து சாப்பிடலாம்.

3. வெள்ளைப் பூண்டை தோல் நீக்கி, பல்லு பல்லாக எடுத்து, நெய்யில் வதக்கி பாலில் வேக வைத்து சர்க்கரைச் சேர்த்து உண்டாலும் பலன் கிட்டும்.

இவை தாய்ப்பால் சுரக்க எளிய வழிகளாகும்.






ஜனவரி இருபத்தாறு. ராஜபாத்தின் இருபுறமும் நிரம்பி வழியும் ஜன சமுத்திரம். அத்தனை பேரும் வேடிக்கை மட்டும் பார்க்க வந்தவர்கள் இல்லை. எங்கோ ஒரு மூலையில் கட்டாயம் நாட்டுப் பற்று இன்னும் ஒளிந்து கொண்டுதான் இருக்கிறது.

மிகவும் நெருக்கமான், பழக்கமான மிலிட்டரி பாண்ட்... அத்தனை தலைகளும் நிமிர கம்பீர ஹெலிகாப்டர்கள் பட்டாம் பூச்சிகளாக வானத்தில் படபடத்தன. முதலாவது தேசியக் கொடியைத் தூக்கி வர, பின்னது முப்படைச் சின்னங்களைப் பெருமிதத்துடன் காட்ட, மற்றொன்று குளிர்கால ரோஜாக்களை அள்ளி வீச,

பனியில் நனைந்த ஒற்றை இதழ், காற்றில் சுழன்று படர்ந்து, அவன் கன்னத்தில் வருடி அமர...

ப்யூகல் ஓசை.... விமானப் படையின் தாளம்... அவனுக்கு மிகவும் நெருக்கமான பழக்கமான ஒருங்கிணைந்த பூட்ஸ் ஒலி...

மேஜர் ஜெனரல் ராமசந்திரன் தலையசைத்து முப்படைகளின் ஒழுங்கு தவறாத மார்ச் பாஸ்ட். அவன் மூன்று நாளாய் 'ரிகர்ஸல்' ஏறி இறங்கிப் பழகிய 'டயஸில்'. அனுப் பின்றி ஸல்யூட் ஏற்கும் ப்ரெஸிடென்ட்.

அவன் இருபுறமும் நிமிர்ந்த மார்புகள்... திடமான கண்கள், பளபளப்பூட்டிய ஷூக்கள், முரட்டுக் காக்கி யூனிபாரம்கள்... இதில் எதுவுமே அவனுக்கு அந்நியமில்லை.

அவன் சின்னச் சலனத்தைக் கூட இனம் கண்டு கொண்டு, "ஆர் யூ டயர்ட் மிஸஸ் ரிஷி... இதோ சீக்கிரம் முடிந்து விடும்..." வீரச் சக்கரம் பெறப் போகும் காப்டன் சிங். முரட்டுச் சீருடையில் மிருதுவாகப் பேசி, சகஜமாகத் தோளில் தட்டி. இதம் தர ஒரு முப்படைக்காரனுக்குத்தான் சாத்தியமா?

"தாங்க்யூ... காப்டன் சிங்... ஐ ஆம் ஓ.கே..."

கூட்டத்தில் ஆர்ப்பாட்டமான ஓசை எழுந்தது. வானத்தில் யானையாக மாறு வேடம் பூண்டிருந்த சேதக் விமானம் ஒயிலாட நடந்து, புரண்டு நடனம் ஆட...

தரையில் ராஜபாட்டையில் பிரும்மாண்டமான விஜயந்தா டாங்குகள், அப்பாட் கன்ஸ், ராக்கெட்டுகள், டைகர் காட் மிஸைல்ஸ் பவனி வர... உலகத்தின் ஒரே குதிரைப் படையான 61வது காவல்ரி நான்கு நான்காகப் புரவியில் ஏறிவர...

ஒலிபரப்பியில் கம்பீரமான ஹிந்தி...

''மெட்ராஸ் ரெஜிமென்ட் மிகவும் பழைமையும் வீரமும் மிக்கது. 1758ம் வருடத்திலேயே தொடங்கியது....''

பன்னிரண்டு பேர் ஒரு வரிசையும்... ஆறு வரிசையாக...முயன்றும் அடக்கமுடியவில்லை. 'சட்'டென்று நெஞ்சை அடைத்தது. கண்களில் நீர் விளிம்பு....

''சமாலோ, பஹன்....'' (அடக்கிக்கொள் சகோதரி) அவள் கரத்தைப் பரிவாகப் பற்றுவது மறுபடியும் காப்டன் சிங்... ரிஷி விட்டுச் சென்ற சொந்தங்கள்... பஹன்... பாபீ.... எத்தனை உறவுகள்...

''மாலு, சாதாரணமா 'ஆர்மிலே' எங்களையெல்லாம் 'இட்லி, சாம்பார்னு' கேலி பண்ணுவா. போர்முனையில் கூட கிடைத்ததைச் சாப்பிடப் பழகாம இட்லி கேட்போம் என்று சொல்லுவா. ஆனா, அது உண்மையில்லே. இந்த மெட்ராஸ் ரெஜிமென்ட் புராதனமா விருந்தாலும், வீரம் குன்றும் இருக்கிறது எல்லோருக்கும் தெரியும். சாத்வீகமான இட்லியைச் சாப்பிடற கூட்டத்துக்கு வீரம் எங்கிருந்து வரும் என்ற வேடிக்கைப் பேச்சு இது. ஆனால் எல்லோருக்கும் தெரியும், நம் திராவிட இரத்தம் ஆறடி உயரத்தையும், ஆஜானுபாகுவான உடலையும் தரவில்லையே தவிர, இந்தடி உயரத்திலேயே உலகத்தையே விலைக்கு வாங்கற, ஜப்பான்காரனுட்டமா நிறைய மனசு பலத்தைத் தந்திருக்கு.

''ஜெய் காளி மாதா'' என்றோ, ''ஜெய் காளி'' என்றோ இல்லாம மெட்ராஸ் ரெஜிமென்டின் 'கம்பாட் க்ரை''அடி, குத்து' ன்னு இருக்கேன்னு நாகூட மொதல்ல நினைச்சதுண்டு. கடவுள் பெயரையும், தாயின் பெயரையும் சொன்னா, நம்மனசெல்லாம் இளகத்தானே செய்யும்... காலில் விழுந்து கும்பிடத் தோணும். நம்ம பண்பு அப்படி. அதனால்தான் யாரை அடிக்கிறோம்... எவர் வெற்றி பெறக் குத்துகிறோம் என்றெல்லாம் எண்ணமை, அடி, குத்து என்ற ஆயுதத்தை மட்டும் கூராக்கிக் கொள்கிறோம். இது, தன்னை ஒரு செயலின் கருவியாக மட்டும் பார்க்கும். தான், தன்னுடையது எல்லாம் மறந்த யோக நிலை...''

ரிஷியுண்டிய இந்த யோக பாவம் நினைவுக்கு வரும்போது, இந்த பரேட், அதுடன் கூடிய ஆர்ப்பாட்டம் எல்லாமே மிகவும் அந்நியமாக, வெறுமையாக, 'வல்கராக'க்கூடப் படுகிறது.

''எதையும் கஷ்டப்பட்டு அடையணும் மாலு. ஆனால் பெற்ற பிறகு பேணி வளர்க்க வேண்டுமே தவிர பெருமைப்படக்கூடாது. அது நம்மையே ஏளனப்படுத்திக் கொள்கிற மாதிரி. நான் மேஜராகி விட்டேன் என்பதற்காக ஏதோ இந்த இடமே பொருத்த மற்றுப் போன மாதிரி வேறு பெரிய கிளாட்டுக்குப் போய், என் முதுகில் நானே தட்டிக் கொடுத்துக்கொள்ளணுமா ...அது அவசியம் இல்லே...நமக்கு இது போதும்....''

'அப்படிப் பார்த்தால் நாம் பெற்ற குடியரசைக்கூடப் பேணி வளர்ப்பதற்குப் பதிலாக வெறும் வெளிச்சம் போட்ட 'ஷோ' ப்பாம்மையாக்கி விட்டோமே' அவளுள் எழும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல ரிஷி இங்கில்லையே.

விடியற்காலை நடந்த கூத்து... நடு இரவில் அலாரம் வைத்து அவளை எழுப்பிய ப்ரிகேடியர் கால்வாயின் மனைவி, ''தலையை ஷாம்பூ போட்டுக்கொள்'' என்று கட்டாயப் படுத்தி, அதை 'ஹேர் ட்ரையரில்' அவசரமாக ப்ளோ செய்து, பின்புறம் திரும்பித் திரும்பி 'புஸ்'ஸாக வாரி, அவள் எத்தனை மறுத்தும் கேளாமல் லேட்டாக மேக் அப் போட்டு, புருவம் தீட்டி, உதட்டில் 'க்ளாஸ்' பூசி... 'முஜே நஹி பஸந்த் ஹை' என்று அவள் மறுத்தும், அவள் எடுத்த சாதாரண வாயில் புடவையைக் கட்ட விடாமல் தடுத்து, தன் வெள்ளை ஜார்ஜெட் புடவையையும் நீண்ட கை வைத்த ரவிக்கையையும் அணியச் சொல்லி, வெள்ளை ஷாலைப் போர்த்தி, புடவைத் தலைப்பை முக்காடாக்கினாள்.

''எங்களுக்கு இதெல்லாம் வழக்கமில்லே'' என்று இவள் மறுத்தும்: ''ஊஹூம், பரவா

---

## யோசனை

அரைத்து விட்டக் குழம்பு நீர்த்துப் போகாமலிருக்க வெறும் மூடியை பாத்திரத்தின் மேல் மூடாமல், நல்ல வெள்ளைத் துணியைமுதலில் போர்த்தி விட்டு மூடியை மூடினால், கொழம்பு நீர்க்காது கெட்டியாக இருக்கும்.



யில்லே... பார்க்க வருபவர்கள் எதிர் பார்ப்பார்கள்.''

என அவள் வாயை அடக்கி,

ஹிந்திப் படத்தில் தியாகம் செய்யும் விதவைத் தாயைப் போல் ஏன் இந்த வேஷம்? சென்னையில் இப்படியா வெள்ளைப் புடவை அணிகிறேன்... இல்லேயே... கலர் புடவை அணிந்து, பொட்டிட்டு, சாதாரணமாகத் தானே இருக்கிறேன். சப்தரிஷியின் மனைவி ஒரு ரிஷி பத்னிகூட... கணவனின் நிழலில் வாழப் பழகிவிட்டாலும் நிழல் மறைந்த பிறகும் நிமிர்ந்து நிற்கப் பண்பட்டுப் போனவள்.

''மாலு... ஹனி மூனில் கவிதை படிக்கிற ஒரே கணவன் நாளுக இருக்கலாம். ஏன்னு நான் வெறும் மாலுவோட புருஷன் மட்டுமில்லே. ஒரு ஆர்மிக்காரன். என் வாழ்விலே தவிர்க்க முடியாத சிலவற்றோடு உனக்கு இப்பவே பரிச்சயம் ஏற்படறது நல்லது. பத்மா நதிக் கரையிலே, வாழ்வில் சகல சௌபாக்கியங்களுக்கும் நடுவில் அழகும், தத்துவமும் கண்ட அந்த வெண்தாடி மன்னர் தாகூரின் வரியைப் படிக்கிறேன்' கேளு... இதை மட்டும் என்றுமே மறக்கக் காதே..

தவிர்க்க முடியாததைக் கூட மனிதனுல்
இயற்கையாக எடுத்துக்கொள்ள முடியவில்லேயே!
பிடுங்கப் படுமுன் அழகாகத் தரப்
பழகிக் கொண்டால்...?
பறிக்கப் படுமுன்
பகிர்ந்து கொண்டால்...?

ஒரு சிப்பாயின் மனைவி அவனே அவன் நாட்டுப் பொறுப்புக்களுடன் பகிர்ந்து கொண்டு தான் ஆகவேண்டும்...பண்படுத்திக் கொள்ள வேண்டும் மனதை...

அப்போது குழப்பமாக இருந்தது. இப்போது புரிகிறது...தவிர்க்க முடியாத சாவைக் கூட. அவனே நாட்டுக்குத் தந்ததாக அவன் என்னை அப்போதே பக்குவப்படுத்தத் துவங்கியிருக்கிருனே...

இந்த வெள்ளைப் புடவை வேஷம் கற்டாயம் ரிஷிக்காக இல்லே. அவளிடம் அன்பும் அனுதாபமும் அரவணைப்பும் காட்டும் அவள் கணவனின் நண்பர்களுக்காக. அவன் மதித்த அவன் அதிகாரிகளுக்காக, அவர்களின் விவரம் புரியாத மனைவிகளுக்காக... இந்த வேஷமல்ல ரிஷியின் மனைவி... அதனுள் மறைந்திருக்கும் கம்பீர உள்ளம்தான் அவன் விரும்பிக் காதலித்து, புகிர்ந்து மகிழ்ந்த மனைவி.

''தேகியே ஹாதி மே பச்சே...''

நினைவு திரும்புகிறது.

அலங்கரிக்கப்பட்ட யானைகளின் மேல் குழந்தைகள்... வீரக் குழந்தைகள்... பரிசு பெறப்போகும் அஞ்சா நெஞ்சங்கள்... தாய் தந்தையரைப் பெற்ற நாளிற் பெரிதுவக்கச் செய்யும் சிறுர்கள்.



ப்யூஸான பல்புகளை தூக்கி எறிந்து விடாமல், அதன் உள்ளே இருக்கும் டங்ஸ்டன் கம்பிகளை நீக்கிவிட்டு, நவராத்திரியின் பொழுது அப்பல்புகளின் உள்ளே கலர் நீர்விட்டுத் தொங்கவிடலாம்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''ரிஷிக்குக் குழந்தை பிறக்காததுதான் நாலு வருஷ தாம்பத்தியத்தில் குறையாகவே நின்று விட்டது. ரிஷி குமாரன், பெயருக்கேற்ற தேஜஸோடு, வீரமாக... என்ன அசட்டுத்தனம்... ரிஷியே மறைந்த பிறகு ரிஷிகுமாரன் பற்றிய எண்ணமா... சே... அஞ்ஞானம்....''

''பீஜியே பாபீஜி... ரொம்பக் குளிராக இருக்கிறது...'' காப்டன் கவுல் கப் அண்ட் சாஸரில் காப்பி எடுத்து வந்து நீட்டினுன். இந்தச் சூடு இப்போது ரொம்ப அவசியமாக இருக்கிறது. அதைவிட எங்கோ காஷ்மீரில் பிறந்த இந்த மனிதனின் அண்ணி என்ற உறவு. அண்ணன் இறந்த பின்னும் தொடரும் பரிவு பெருமிதமாக இருக்கிறது.

''தைரியமாக இருங்கள்...'' காப்டன் கவுலும், காப்டன் சிங்கும் இருபுறமும் நிற்கிருர்கள்....

''கிளம்புங்கள்... தைரியமாக''

''அடுத்ததாக வசிஷ்ட சேவா மெடல் பெறுபவர் தஞ்சாவூர் வாஞ்சி ஐயர் சப்தரிஷி. இது பாஸ்துமஸ்ஸாக விளிக்கப்படுகிறது. எல்லேயில் ஊடுருவக் கலவரங்களை மிக சாதுர்யமாக அடக்கி, மிஸோ ரிபல்களைத் தடுத்திருந்த மேஜர் ரிஷி, கௌஹாத்தியிலிருந்து எல்லேக்கு ஜீப்பில் பயணம் செல்லும்போது, மறைந்திருந்த புரட்சியாளர்களின் குண்டடி பட்டு இறந்தார். இவரது விருதை இவர் மனைவி மாலதி சப்தரிஷி பெற்றுக்கொள்கிருர்...''

நமஸ்தே... கைகுலுக்கல்... உள், வெளி நாட்டு டீ.வி. காமராக்களின் குருடாக்கும் பளிச் பளிச்... அவன் சந்தோஷப்படனுமா, துக்கப்படனுமா, அழனுமா ... ஒன்றும், புரியவில்லே. ஆனால், இப்போதைக்கு அவள் உணர்ச்சி மரத்துப்போயிருந்தாள். அந்த அத்தனையிலிருந்தும் கழண்டு ஓடினுல் போதும் போலிருந்தது. ரிஷி இருந்தால் சிரிப்பார்....

''போய்விட்டவனுக்கென்ன பாராட்டு... வளர்ற செடிக்குப் பாராட்டை உரமாப் போட்டா செழிச்சு வளரும்... பட்டுப் போன செடிக்கு உரத்தால் என்ன பயன்?''

இந்தப் பாராட்டு விழாக்கள் அறியாமை தானு? இத்தனை ஜனங்களும் அறியாதவர் களாக இருக்க முடியாது. ரிஷியுடன் பழகிப் பழகி அவள் எண்ண ஓட்டங்கள்தான் விநோதமாகி விட்டன.

எதற்கு இத்தனை பேர் கைகுலுக்கு கிறார்கள்! ''உண்மையான வீரத்துக்குச் சாவே இல்லை'' என்ற சப்பைக்கட்டு வேறு. கண்டலன்ஸா, சந்தோஷமா, எப்படி நடந்து கொள்வது என்று பெரும்பாலோருக்குப் பயம் வேறு.

காரில் திரும்பும்போது உடம்பு, மனசு இரண்டுமே துவண்டிருக்கிறது. பர்கேடியர் சாவ்லா இரண்டு முறை பேசத் துவங்கி, ரிஷியை நினைவுகூர்ந்து மாலதியின் துக்கத்தைக் கிளறி விட்டு விட்டோமோ என்ற பயத்துடன் வாயை மூடிக் கொண்டார்.

''பேடி, சாயந்திரம் ஒரு சின்ன பார்ட்டி... ஐ மீன், ஜஸ்ட் எ கெட் டு கெதர்... ரிஷி யுடன் பழகியவர்கள், வேலை செய்தவர்கள், நண்பர்கள் எல்லோரும் உன்னைச் சந்திக்க விரும்புகிறார்கள். நீ திரும்ப எப்போ டெல்லிக்கு வரப் போகிறாய்?'' மாலதி தவருக எண்ணி விடுவாளோ என்ற தயக்கம் அப்பட்டமாகத் தெரிகிறது.

''பரவாயில்லை. ரிஷியுடன் பழகியவர்களைச் சந்தித்தால் எனக்கும் சந்தோஷமாகத்தான் இருக்கும். என்னை யாரும் துக்கம் மட்டும் கேட்க வேண்டாம்... எனக்குத் துக்கமே யில்லை...''

மிஸஸ் சாவ்லா அவள் கையை ஆதாரமாகப் பற்றினுள்.

''மாலதி பேடி, இந்தியன் ஆயில் 'பார் மாலிடிகள்' எல்லாம் முடிந்து விட்டது. நீ ஊருக்குத் திரும்புவதற்குள் 'டீலர்ஷிப்' ரெடியாகிவிடும். எனி ஹார்ட்ஷிப், பணமோ மனுஷ சகாயமோ, ஒரு வார்த்தை சொல்... ஓடிவந்துவிடுவோம்....''

''நீங்கள் சொல்லாமலே அது எனக்குத் தெரியும் பிரிகேடியர் ஸாஹப், ஸர்வீஸின் மிகப் பெரிய பலமே இந்த ஒண்டுக் குடும்ப மனப்பான்மைதானே... தம்பி இறந்தாலும் அவன் மனைவியைக் கைவிடாத சக குடும்ப பாவம்....''

''இதெல்லாம் எங்க வாழ்வில் சின்னக் காம்பன்ஸேஷன்ஸ்.. பாதி சமயம் நாங்க மனிதர்களாக இருக்க முடியாத போறதினால தாம்மா எங்க மனுஷத் தன்மையை இப்படியெல்லாம் காப்பாத்திக்க வேண்டியிருக்கு. சாவ்லாவின் கம்பீரமான குரலில் கரைய வைக்கும் நெகிழ்ச்சி.

''நீங்கள் எல்லாம் அடிக்கடி நாங்கள் மனிதர்கள் என்ற சுய எண்ணமே இல்லாமல் விசை தொடுத்த இயந்திரமா மாறுவதால்தானே உலகத்தில் இத்தனை பேர் நிம்மதியாக வாழ முடிகிறது.''

''நீ அழகாப் பேசறேம்மா...''

● ● ●

**''தா**யில்லாக் குழந்தையை மடியிலே போட்டு ''ஒம்பொண்ணு வள அக்கா''னு அழுதயே. இப்ப திடீர்னு தோளிலேயும், முதுகிலேயும் சுமந்து வளர்த்தவளிடம் ஒரு வார்த்தை கேட்காம மிலிட்டரிக்காரனைப் பொண் பார்க்க வரச் சொல்லி இருக்கயே என்ன அர்த்தம்னு கேட்கறேன். உம் கடமை முடிஞ்சுடுத்து. போயிட்டு வான்னு சொல்லாமச் சொல்றயா?''

''அக்கா, வாஞ்சி ஐயர் பிள்ளைதான்; படிச்ச, பண்பட்ட குடும்பம். நல்ல பிள்ளை.''

''ஆமா... ஆளு. மிலிட்டரிக்காரன். நம்ம குலம். கோத்திரத்தில் இல்லாம, ஆட்டை, மாட்டை அடிச்சுத் தின்னு, மடா மடாவாக் குடிச்சு, ஆடிப் பாடி, கண் காணுத தேசத்திலே கஷ்டப்பட்டுண்டு நிக்கணும்னு எம்பொண்ணுக்கென்ன தலையெழுத்து? ஊர் உலகத்திலே ஒனக்கு ப்ராமணனே கெடக்கல்லியா?''

ராமச்சந்திர கனபாடிகள் அடங்கிச் சிரிக்கிறார். ''சப்தரிஷி உனக்குப் பிராமணனுகத்

## கை நடுக்கம்

**சில நுணுக்கமான வேலைகளில் ஈடுபடும் சிலருக்கு விரல்கள், நடுக்கம் ஏற்படும். இது நரம்புத் தளர்ச்சியின் அடையாளம். இதைப் போக்க மிக எளிதான வழி இதோ! நாட்டு மருந்துக் கடைகளில் அமுக்கராங் கிழங்கு கிடைக்கும். இலை நசுக்கி பனை வெல்லத்துடன் சேர்த்து காபி போடுவது போல் காய்ச்சி அருந்தவும். சுரன்**



தோணலியா? அவன் வாஞ்சி அய்யர் பிள்ளையானதாலே அவன் ப்ராமணன்னு நான் சொல்லலே. ப்ராமணப் பெற்றேருக்குப் பொறக்கறவாளெல்லாரும் ப்ராமணனு? இல்லே இல்லே. அப்படி நெனைச்சா அது அறியாமை. அச்வாமித்ரனரயும், புரமிதரரையும், அஜமிதரையும் ப்ராமணராக்கியது அவர்கள் அப்பா ஜாதியா? ஒரே பெற்றேர் வயிற்றில் பிறந்த சந்தானு க்ஷத்ரிய ராஜாவாகவும், தேவாபி பிராமண குருவாகவும் ஆனது எப்படி? க்ஷத்ரியராஜா ஜனகர் ப்ராமணத்துவம் பெற்றது எப்படி? மகாபாரதத்திலே ஒரு ஸ்லோகம் சொல்றேன் கேளு.

மனுஷர்கள் அத்தனை பேருமே ப்ராமணர்களாகப் பிறந்தவர்கள்தாம். அவனவன் ஒழுக்கத்தாலும், தொழிலாலும் வெவ்வேறு ஜாதியைத் தழுவுகிறர்கள். கனபாடிகள்னு பேரை வைச்சுண்டு இருந்தாலும் ஆபீஸ் க்ளார்க்கான நான் திருடாத, பொய்க் கணக்கு எழுதாத வைசியன்தான். 'கண் காணுத தேசத்திலே ஊர்உலகம் க்ஷேமமா இருக்கணும்னு உடம்பையும், உசிரையும் பணயம்வைக்கிற மிலிடரிக்காரன் ரிஷி க்ஷத்ரியன். எங்க ரெண்டு பேருடைய சீலத்திலேயும், தொழிலிலேயும், ஒழுக்கத்திலேயும் நிலைத்திருக்கிறதுதான் ப்ராமணத்துவம். அவனவன் தொழில் தர்மத்துலே அவன் அரிசி கிடைக்காத இடத்திலே ஆட்டை, மாட்டை அடிச்சுத் தின்னதாலோ, குடிச்சதாலோ எதுவும் தவறில்லே.''

''ஓம் பேச்சு, குதர்க்க வாதம் ஏதாவது புரிஞ்சாத்தானே? எதுக்கும் மாலதியை ஒரு வார்த்தை கேட்டுக்கோ. பி.ஏ. படிச்ச பொண்....'' அத்தை அலுப்புடன் முணுமுணுத்தாள்.

''நீங்க பார்த்து எது செய்தாலும் சரி...'' மாலதிக்கு ஒன்றும் புரியவில்லை தான். மாமிசம் சாப்பிடுவாரா, சீசீ... வேண்டாம் என்று தோன்றுகிறது. அத்துடன் அறிமுகமில்லாத ஒரு புது வாழ்வைச் சந்திக்கும் ஆவல் வேறு.

அத்தை நிறையவே உருவேற்றியிருந்தாள். பயமுறுத்தியிருக்கிறள். அத்தையின் பேச்சைக் கேட்கக் கேட்க ஒரு குறுகுறுப்பு... ரிஷி எப்படித்தான் இருப்பார் பார்த்துவிடலாமே?

ஆளை ஊடுருவிச் சென்று இதமாக வருடும் கண்கள்... இதுவா குடிகாரன் கண்கள்... உடம்பு வளர்ந்து தோள் படர்ந்திருந்தது என்னவோ உண்மை... ஆனல் அது வெட்டி முறிக்கும் கொடூரமாகத் தெரியவில்லையே... அடக்கி ஆளும் ஆண்மையாகத்தான் படுகிறது. கம்பளிப் பூச்சி மீசை காணவில்லையே, கறுப்பிலும் பளபளப்பு, கம்பீரம். அத்தை சொன்னதில் ஒன்றுதான் உண்மை. சட்டியைக் கவிழ்த்துப் போட்டுத்தான் தலை வெட்டி இருப்பார்கள் போலிருக்கிறது.

'என்னைப் பார்த்து ஏன் எழுந்து நிற்கிறர்?'



**யோசனை**

தலைக்கு ஷாம்பூ போட்டு குளிப்பதைவிட புளித்த தயிரை ஊற்றி சிறிது நேரம் ஊற வைத்தபின் குளித்தால் தலைமுடி பளபளப்பாகவும், கவர்ச்சியாகவும் இருக்கும், தயிரிலுள்ள அமினே அமிலங்கள் தலையிலுள்ள அழுக்கை அகற்றிவிடும். —ஏ. வி. தேவன்

''நமஸ்காரம் பண்ணுடி...'' அத்தை குரல் எழு முன் அந்த ஆண்பிள்ளை மரியாதையாக வளைந்து இரு கையையும் கூப்பி அவளை நமஸ்கரிக்கிறர். இதென்ன கூத்து?

''நீங்க உட்காருங்கோ'' — அப்பா அவசரப்படுகிறர், சற்று ஆச்சரியத்துடன்.

''பெண்கள் உட்காரட்டும்.'' அத்தை உட்காரவாகாக ஒதுங்கி நிற்கிறர். 'ஆம்பிள்ளைகளுக்குச் சமமாக நாற்காலியில் உட்காரவாவது?' — அத்தை அவளைத் தனியே விட்டுவிட்டுக் கதவிடுக்கில் தஞ்சம் புகுகிறள். அப்பாவின் சைகையைப் புரிந்து கொண்டு மாலதி நாற்காலி நுனியில் அமர்ந்த பிறகே அவர் அமர்கிறர்.

''நமஸ்காரம் பண்ணும்மா'' — அப்பா சொல்ல, மாலதி எழ, சப்தரிஷி அவளைக் கையமர்த்துகிறர். ''வேண்டாம். எவரையும் ஆசீர்வதிக்கும் தகுதி எனக்குக் கிடையாது. நான் பெண்ணைக் கடவுளாகவும் மதிக்கவில்லை, அவளைத் தாழ்ந்த பூச்சியாகவும் நினைத்து இரக்கப்படுவதில்லை. மிஸ் மாலதி... நான் உங்களுக்கு நமஸ்காரம் பண்ணும் பக்குவம் எனக்கு வந்த பிறகு நீங்கள் எனக்கு நமஸ்காரம் பண்ணலாம்'' —

நேராக மாலதியைப் பார்த்தே பேசுகிறர். தங்கள் வாழ்க்கையை விவரமாகச் சொல்கிறர். அடிக்கடி குடும்பத்திலிருந்து பிரிந்திருக்க நேரிடும் என்கிறர்.

''ஓய்வு நேரத்தில் டென்னிஸ் விளையாடுவேன், கவிதை படிப்பேன், படம் போடுவேன், காலாற நடப்பேன். இதெல்லாம் என்னுடைய லயிப்புகள் தான். என் மனைவியாக வருபவள் மாறுபட்ட விருப்புக்கள் கொண்டிருப்பதில் எனக்கு மறுப்பில்லை. பாடினல் கேட்க முயற்சிப்பேன். ஆடினல் பார்ப்பேன். இதெல்லாம் கூடச் சின்ன விஷயங்கள். என்னைபொறுத்தவரை இரு

மணங்கறது ஒரு முதிர்ச்சியான அன்பாக, காளிதாஸன் சொல்ற "பாவ பந்தன ப்ரேம மாக" அமைய முயற்சிப்பேன். உங்கள் எண்ணங்களைத் தெரிந்து கொள்ளலாமா?"

மாலதி மிரள மிரள விழிக்கிறாள். இவர் பேசுவதென்னவோ அழகாகத்தான் இருக்கிறது. அவளுக்கு என்ன எண்ணம்?

அத்தை உள்ளிருந்து குரல் கொடுக்கிறாள்: "அவளுக்கு என்ன தெரியும்? அவ குழந்தை"

மொட்டாக இருந்த அந்தக் குழந்தை மனத்தைதானே சூரியவெளிச்சமாக்கி மெல்ல மெல்ல இயற்கையாக மலரச் செய்து... எட்டு வருட தாம்பத்தியத்தில் எல்லையில் இரண்டாண்டு; வெலிங்டனில் ஓராண்டு, அஸ்ஸாமில் சில மாதங்கள், நடு நடுவே, 'நான்-பேமிலி' ஸ்டேஷனில் ரிஷி போஸ்டிங்கில் செல்லும்போது அப்பாவுடன் மன்னார் குடியில் பல மாதங்கள் என... நடுக்கும் குளிரில் கம்பளி கோட், தொப்பி அணிந்து ரிஷியுடன் கைகோர்த்து உலவியது... டென்டில் இரவு நேர அமைதியில் மண்ணெண்ணெய் விளக்குச் சுவாலையில், ரிஷி காளிதாஸரையும், தாகூரையும், ரஸ்ஸலேயும் படிக்க, மடியில் படுத்துக் கொண்டு ரசித்த நாட்கள், ஆர்மி மெஸ்ஸில் சக ஆபீஸர்கள் குடும்பங்களுடன் பியரின் நுனி நாக்குக் கசப்பில், புகை நெடியில் ஆடிப் பாடிச் சிரித்த நாட்கள், கடும் கோடை—நாட்களில் உடலையும் மனத்தையும் நிர்வாணமாக்கிக்கொண்டு மயங்கிக் கிடந்த காலங்கள்....

அத்தனையும் இன்று வெறும் கனவாக மட்டுமின்றி, இனிய நினைவாகவும் ஏற்றுக் கொள்ளும் பக்குவத்தையும், பாங்கையும் அளித்தது... ரிஷியின் வெற்றிகரமான முயற்தானே... இதுதானா "பாவ பந்தன ப்ரேம" மென்பது?

• • •

"மிஸஸ் சப்தரிஷி, உங்கள் டீலர்ஷிப் 'ஸேங்ஷன்' ஆகிவிட்டது. 'எக்ஸ்- ஸர்விஸ்' மென்ஸ் வெல்பேரிலிருந்து பாங்க் காரண்டியும் தந்து விட்டார்கள். இனி இடத்திற்கு அட்வான்ஸ் தந்துவிடலாம். இந்தத் தொழிலின் நுணுக்கங்களை எங்க ஆபீஸில் ஒரு வாரம் பயிற்சி தருவார்கள்."

"தாங்க்யூ மிஸ்டர் க்ருஷ்ணன். எல்லாம் நான் எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாகவே நடந்து விட்டது."

"பை தி வே, உங்களுக்கு ஹெல்ப் செய்ய உங்க பாதர், ப்ரதர், யாராவது....?"

"ஆண் துணை இருக்கான்னு கேக்கறீங்களா? ஐ டோன்ட் திங்க் தட் ஈஸ் நெஸஸரி" என் பாதர் இறந்து இரண்டு வருஷமாகிறது.. ஐ ஹேவ் நோ ப்ரதர்ஸ்."

"ப்ளீஸ் டோன்ட் மிஸ்டேக் மீ... உங்கள் கணவர் இறந்து ஒரு வருடம் கூட ஆகவில்லையே, உங்களால் சமாளிக்க முடியுமா என்றுதான் கேட்டேன்."

"மிஸ்டர் கிருஷ்ணன், நான் சொல்றது உங்களுக்கு வேடிக்கையாகஇருக்கலாம். ஆனா அது உண்மை. இந்தியாவில் ஒரு ஆணுக்குப் பெண் துணை தேவைப்படற அளவுக்குப்



பெண்ணுக்கு ஆண் துணை அவசியமில்லே. நாங்க எல்லாம் யுக, யுகமா 'லிபரேடட்.' இருபது வயதிலே கணவனைப் பறிகொடுத்துட்டு, தாங்கி நிற்கப் பணமும் இல்லாம, மூணு குழந்தைகளைத் தனியா உழைத்து ஆண் துணையில்லாம வளர்க்கற எத்தனையோ பெண்களைப் பார்க்கிறோம். ஆறு, மனைவி இறந்த எத்தனை ஆண்களால் தாயில்லாத மூன்று குழந்தைகளைப் பெண் துணையில்லாம வளர்க்க முடிகிறது... நம்ம பெண்களுக்கு மன பலம் அதிகம்...''

கிருஷ்ணன் அவளை நிமிர்ந்து தீர்க்கமாகப் பார்த்தார். அவர் உதவியிருக்கும், தொழில் ரீதியாகப் பழகியிருக்கும் மற்ற 'வார்-விடோ'க்களிடமிருந்து இவள் மட்டும் ஏன் மாறுபடுகிறாள்? இரக்கத்தை எதிர்பார்க்காமல் நிற்பதாலா... ப்ராக்மாடிக் அப்ரோச்சு லைப்... இவ்வளவு சிறிய வயதில் இந்தத் துணிவும், தன்னம்பிக்கையும் சாமானியமாக வருவதல்லவே? நாற்பது வயது வரை வாழ்வில் சுமை தாங்கியாக நின்று, நாலு தங்கை, இரண்டு தம்பிகளைச் சுயநலமின்றி வளர்த்துவிட்ட அவரால் இந்தப் பெண்ணிடம்... அவள் வெறும் மாலதி இல்லை. மாலதி லைப்தரிஷி என்று அறிந்தும் கூட ஈர்க்கப்படுவதை உணர முடிகிறது.

''உங்களை மாலதி என்று கூப்பிடலாமா?''

''வொய் நாட்? தட் ஈஸ் மை நேம்...''

''எனக்கு உங்களைப் பிடித்திருக்கிறது.''

''தேங்க்யூ... டு லைக் ஸம்படி ஈஸ் எ லவ்லி ஃபீலிங்... நான் உங்களை பற்றி இன்னும் நினைக்கவில்லை. அதனால் ரிஸிப்ரோகேட் செய்ய முடியவில்லை.''

இருவருமே சிரித்தார்கள்.

அதன் பிறகு அடிக்கடி சேர்ந்து சிரித்தார்கள். சந்திப்புக்கள் சரளமாக இனிமையாக இருந்தன.

''மாலதி, ஐ வான்ட் டு மேரி யூ...''

''கிருஷ்ணன், நான் ஒரு ஆணுடன் எட்டு ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறேன். அதுவும் சந்தோஷமாக வாழ்ந்திருக்கிறேன்.''

''அது தெரியும் மாலதி. ஒரு ஆணுடன் சந்தோஷமாக வாழ்ந்த பெண்ணால்தான் ஆண்-பெண் உறவை அழகாகப் பார்க்க முடியும். அதன் பரிணாமத்தைப் புரிந்து கொள்ள முடியும். கலியாணத்தைப் பற்றியே கசப்பை வளர்த்துக் கொண்டளால் இன்னொரு ஆண்



பின்னேயுடன் மட்டும் நம்பிக்கையுடன் பழக முடியுமா?''

''நீங்க ரொம்ப அழகாகச் சிந்திக்கிறேள், மிஸ்டர் க்ருஷ்ணன். ஐ அட்மயர் யூ. ஆனு. ரிஷி இன்னும் என் நினைவுகளில் நிலைத்து ரொம்ப நெருக்கமாக இருக்கார்...''

''அதுதான் அன்பு. நிஜங்களிலே மறைந் போனதுகூட நினைவுகளில் நிலைப்பதுதான் உண்மை. நான் சின்ன வயசிலே ஒண்ணாங் க்ளாஸ் படிக்கிறபோது ஸ்கூல்லேருந்து ஓடி வருவேன். அம்மா நிலைப்படியைத் தாண்டி வெளியே வந்து தூக்கி அணேச்சுப்பா. இப்ப நெணேச்சுப் பார்த்தாலும் அம்மாவுடைய ஸ்பரிசம், அந்த உணர்வு எல்லாம் நிலையா இருக்கு. ஒவ்வொரு கால கட்டத்திலேயும் ஒவ்வொரு உணர்வுகள், காலம் கடந்து பாதைகள் மாறின பிறகும் நிலைக்கும்...

எங்கம்மா இப்பக்கூட ''எப்படா ஆபீஸ் லேந்து வந்தே''ன்னு கன்னே இடுக்கிண்டு கேட்பா... அதே அம்மாதான். ஆனு. உணர்ச்சியை வெளிப்படுத்தற முறை மாறிடுத்து. அம்மா இல்லாமலிருந்தா வேறு ஒரு சித்தி வந்து வேறு விதமா அன்பைப் வெளிப்படுத்தியிருக்கலாம். ரிஷியுடன் நீங்க மனேவியாக சந்தோஷமாக இருந்து மகிழ்ந் தது ஒரு கால கட்டம். யூ ஹேவ் க்ராஸ்ட் இட். பட் யூ ஸ்டில் ஸ்வீட் மெமரீஸ்... யூ ஆர் ஸ்டில் கேபபிள் ஆப் லிவிங் லவ், டேகிங் இட், என்ஜாயிங் இட்... ஒரு பெண் எத்தனேயோ குழந்தைகளுக்குத் தாயாக இருக்கலாம். ஆனு ஒரு சமயத்தில் கணவனுக்குத்தான் மனேவி யாக இருக்க முடியும் என்கிறது மனுஷ தர்மம். ரிஷிக்கு நல்ல மனேவியாக இருந்தது போல், ரிஷிக்குப் பிறகும் வேறொரு கண வனுக்கு நல்ல மனேவியாக இருக்கமுடியும்...''

மாலதிக்குப் புரிந்தது. ரிஷி அடிக்கடி கூறும் இரு மனமுதிர்ந்த இன்டர்விஜுவல் ளின் உறவு என்பது இதுதான். என்னுடைய யது. என்னுடையது என்ற சுயநலத்தையும், அதனுல் வரும் 'ஈகோ'வையும் மட்டும் நம்பா மல், உறவுகளின் பரிணுமத்தில் நிமிர்ந்து நிற்கும் திருமணம். ரிஷி இந்த உறவில் ஒரு நெருஞ்சி முள்ளாகக் குத்தி நிற்க மாட்டார். அவர் நினைவு நெருடல் வருத்தாதது. அவ ரைப் பற்றிச் சரளமாகப் பேச முடியும். நினைக்க முடியும்... ஹி வில் பி அக்ஸப்டட்...

அவள் முதல் மணத்தைப்பற்றி எந்த அள வுக்கு அவளுக்குக் குற்ற உணர்வு இராதோ, அந்த அளவு க்ருஷ்ணனுக்கும், ரிஷியுடன் பரிச்சயம் இருக்கும். ''யெஸ் ஐ கேன் ஸ்டில் லிவ் லவ்... டேக் இட்... என்ஜாய் இட்... யெஸ்...''

பிடுங்கப் படுமுன் அழகாகத் தரப் பழகிக் கொண்டால்...

பறிக்கப் படுமுன் பகிர்ந்து கொண்டால்...

யெஸ் ஐ கேன் ஷேர் மை ஸெல்ப்....''

• • •

எட்டு வருஷ தாம்பத்தியத்தில் அவள் பெற முடியாத ஒன்று இப்போது கிடைத் திருக்கிறது. முகம் வெளிறி, கண்ணில் கரு வட்டம் தோன்ற, உடல் தளர்ந்து வயிறு மேடிட்டு... கேஸ் ஏஜென்ஸியில் அதிக நேரம் உட்கார முடியவில்லே. மூச்சு முட்டு கிறது. உதவிக்கு அக்கவுண்டண்டும், சிலின் டர் ஏற்றி இறக்கி மேற்பார்வை இடும் க்ளார்க்கும் இருந்தும் கூட எல்லாமே மலேப் பாக இருக்கிறது.

''மாலு, யூ நீட் ரெஸ்ட்'' கிருஷ்ணன் அவளேத் தடுத்து வீட்டுடன் நிறுத்தி வைத் திருக்கிருர். ''மாலு, வாம்மா ஒரு சின்ன வாகிங்'' —

குழந்தையைப் போல் கையைப்பற்றி அழைத்துச் செல்கிருர். சூடாகக் காப்பி கலந்து தந்து, நரம்பிழுத்திருக்கும் காலே இரவெல்லாம் மெல்ல அழுத்தி... இப்படி ஒரு மென்மையை இதத்தை அளிப்பது முரட்டுத்தனம் மிக்க ஆணுக்குச் சாத்தியமா?

இந்த நிலையில் ரிஷியும் அவளிடம் இப்படி நடந்திருக்கக் கூடும். ஆனுலும், ரிஷி... இது உங்கள் குழந்தையாக இருந்திருந்தால் என்று எண்ணத் தோன்றவில்லே. மாறுக நண்பரே, எங்களுக்குக் குழந்தை பிறக்கப் போகிறது. சந்தோஷம்தானே, என்று மன தாரக் கேட்க முடிகிறது.

ரிஷியுடன் வாழ்ந்த வாழ்க்கையிலிருந்து முற்றும் மாறுபட்ட வாழ்க்கை இது. இது நகரம். இங்கே அனேவருக்குமே அவசரம். அண்ணனென்றும், தங்கையென்றும் கொண் டாட எவருக்கும் நேரமில்லே. கிருஷ்ண னுக்குக் காலேயிலிருந்து மாலேவரை அலுவலக வேலே. அவளுக்கு காஸ் ஏஜன்ஸி, வீட்டுப் பொறுப்புகள். டாகூரும், காளிதாஸரும் ரஸ் ஸலும் எங்கோ நினைவுகளாகத்தான் இருக் கிருர்கள். கிருஷ்ணன் சொல்வது போல்

நரம்புத் தளர்ச்சிக்கு முருங்கை நீர் சிறந்த மருந்து. நரம்பு தளர்ச்சியுள்ளவர்கள் தினம் ஒரு வேளே சாப்பாட்டுடன் முருங்கைக் கீரையை அருந்தி வந்தால் பூரண பலனே விரைவில் காண்பார்கள்.

- மகேஸ்வரி



அது வேறு கால கட்டம் போலிருக்கிறது. இல்லாவிட்டால் இந்த சாதாரண நகர வாழ்விலும் அவளால் எப்படி இன்பமாக இசைவாகப் பொருந்த முடிகிறது? உடம்பு மனது இரண்டுமே சூழ்நிலையை ஒட்டித் தானே செயல்படுகின்றன?

ஹிந்துப் பேப்பரைப் புரட்டும்போது அலுப்பும், ஆயாசமும் நெருக்குகிறது. எங்கோ ஒரு சின்ன மூலையில் படித்த செய்தி, டெல்லிப் பேப்பரை வாங்கிப் படிக்க மாட்டோமா என்று தோன்றுகிறது. படித்தென்ன பலன்?

''மிஸா ரிபல்களின் பாசறைகளைக் கைப்பற்றிய போலீசார் அங்கு அடைத்து வைத்திருந்த 'பத்துக் கைதிகளையும் விடுவித்தனர்...''

குண்டடி பட்டு மண்டை சிதறி, அடையாளம் கூடத் தெரியாமல் மிலிட்டரி மரியாதையுடன் அடக்கம் செய்யப்பட்ட ரிஷி கைதியாகவா திரும்பி வரப்போகிறார்? அத்தனையும் நப்பாசை. வந்தால்தான் என்ன? அவருக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்... சம்பந்தம் இருக்கிறதோ இல்லையோ எட்டு வருட பந்தமான அன்பு..

செய்தி மனத்தை அலைக்கழிக்கிறது. ரிஷியின் நினைவு அடக்க மாட்டாமல் எழுகிறது. ரிஷிக்கும் ஒரு குழந்தை பிறந்திருக்கலாம். அப்படிப் பிறந்திருந்தால் அவள் மறு மணத்தை நாடாமல் அந்தக் குழந்தை வளர்ப்பிலேயே கவனம் செலுத்தியிருக்கக் கூடும். அப்போது வாழ்வு வேறு மாதிரி அமைந்திருக்கக் கூடும்...

காஸ் டிப்போவுக்குப் போய் மூன்று நாளாகிறது. உடம்பு துவள்கிறது. வயிற்றுப் பளுவின் சுமை நன்றாகத் தெரிகிறது. கண் மூடி மெல்ல சோபாவில் சாய்கிறாள்.

மெல்ல அவள் முதுகில் வருடுவது... தூக்கிப் போட்டுக் கொண்டு எழுந்தால்...

''தூங்கு மாலதி, ரொம்ப டயர்டாக இருக்கிறாயே....''

''பரவாயில்லே. உங்கள் கண்ணெல்லாம் ஏன் இப்படிச் சிவந்திருக்கிறது?... முகம் வீங்கி... யூ லுக் ஷாட்டர்ட்.''

கிருஷ்ணன் பதில் பேசாமல் அவளையே வெறித்துப் பார்த்துக் கொண்டு நிற்கிறார்.

திடீரென்று அவளைப் பாய்ந்து அணைத்து, அவள் தோளில் முகம் புதைத்து...

''க்ருஷ்... என்ன ஆச்சு உங்களுக்கு, அழறேளா, உடம்பு ஏன் இப்படித் தூக்கிப் போடறது? க்ருஷ்ணன்... சொல்லுங்கோ... என்ன ஆச்சு உங்களுக்கு?''

''மாலதி... ஐ ஹாவ் லாஸ்ட் யூ... ஐ ஹேவ் லாஸ்ட் யூ...''

''என்ன இது. ஒண்ணும் புரியாம புலம்பிண்டு....''

கிருஷ்ணனின் உடல் வெகு நேரம் அதிர்கிறது. கடைசியில் ஓய்ந்தவராக நாற்காலியில் துவண்டு உட்கார்ந்தார்.

''மாலதி, நாளை ரிஷி இங்கே வருகிறார்..''

ஒரு வினாடி அதிர்ச்சி...''பேப்பரில் பார்த்தபோதே மனத்தில் ஏதோ பட்டது....'' குரலில் பலமில்லை.

''மாலதி, உன்னை இந்த நிலையில் அதிர்ச்சிக்குள்ளாக்க நான் விரும்பல்லே. ஆனால்

ஒன்னு சொல்றேன், எட்டாண்டு உன்னோடு வாழ்ந்த ரிஷிக்கு உன்னிடத்தில் என்னைவிட பாத்யதை அதிகம். அத்தோட எப்போ ரிஷி உயிருடன் இருக்காரோ அப்பவே நம் திருமணம் சட்டப்படி நல் அண்ட் வாய்டு ஆகிவிடும். இது செல்லாத பிணைப்பு. ஒரு வருஷம் பாசறையில் சித்ரவதைப் பட்டு வரும் கணவனுக்கு நீ நல்ல மனைவியாக இருப்பதுதான் முறை. நான் உன்னுடன் வாழ்ந்த ஓர் ஆண்டுக் காலத்தை மனதால் நினைத்து: ரசித்து, மகிழ்வேன்.... நோ ஹார்ட் பீலிங்க்ஸ்....''

மாலதியின் அடிவயிற்றிலிருந்து விம்மல் பிறிட்டு வந்தது. நெஞ்சு கிறுகிறுத்தது. ஒரு பெண் ஒரு கணவனுக்குத்தான் ஒரு சமயத்தில் மனைவியாக இருக்க முடியும். அதற்காக மாறி, மாறி மனைவியாக முடியுமா?... இது என்ன சோதனை... இரண்டு கணவான்களின் பண்பட்ட உள்ளங்களின் நடுவே அவள் ஒரு விட்டில் பூச்சியாகவா... நோ... நோ... இந்த மரணவஸ்தையை விடச் சாவே மேல்... இத்தனை ஆண்டு கழித்து அவள் வயிற்றில் உதித்திருக்கும் அரும்புடன் சேர்ந்து சாவதா.. இல்லை, இல்லை, அதை தைரியசாலியான ரிஷியும் விரும்ப மாட்டார், சாதாரண மனிதனுக உணர்ச்சி வசப்படும் கிருஷ்ணனும் விரும்ப மாட்டார். அவள் முடிவுதான் என்ன?

இரண்டு மாறுபட்ட சூழ்நிலையில், இரண்டு ஆண்களுக்கு அவள் அளித்த அன்பில் எந்தப் போலியும் இல்லை. இன்னும் அவள் ரிஷியையும் காதலிக்கிறாள், க்ருஷ்ணனையும் காதலிக்கிறாள். அன்பு என்பது நிரந்தரமானால், உண்மையானால்,அவள் காதல்களும் உண்மை தானே? அன்பின் வெளிப்பாடாக ரிஷியுடன் உடல் உறவு கொண்டபோது அவள் விரசப்படவில்லை. அதே உடம்பை வேறொரு உறவின் பாலமாகக் கிருஷ்ணனுடன் அமைத்த போதும் அசிங்கப்படவில்லையே... இன்றும் அவளிடம் குற்ற உணர்வு இல்லை, குழப்பம் தான்.. குழப்பம் என்றால் சாதாரணக் குழப்பமில்லை. உடம்பையே அதிர வைத்து, மனத்தையும் செயலிழக்கச் செய்யும் குழப்பம்...

''யூ ஆர் நர்வஸ்... இதைச் சாப்பிடு...'' கிருஷ்ணன் தரும் தூக்க மாத்திரையை விழுங்கும்போதே நினைவு மரத்து விடுகிறது.

''ரிஷி... ரிஷி வந்துவிட்டாரா?'' தூக்கிப் போட்டுக் கொண்டு எழும்போது பக்கத்தில் கிருஷ்ணன் அமர்ந்திருக்கிறார். ''நல்ல வெயில் ஜன்னல் வழியே அடிக்கிறது... எத்தனை நேரம் தூங்கி விட்டேன்...''

''பரவாயில்லை மாலதி... காப்பி கொண்டு வரேன்....'' கிருஷ்ணன் எழுந்து செல்கிறார்.

பக்கத்தில் டீபாயில்... நடித்த கவர்... மாலதி கிருஷ்ணனுக்கு... இந்தக் கையெழுத்து... ரிஷி.... ரிஷியுடையதல்லவா?

''காப்பியைக் குடித்துவிட்டுப் படி மாலதி...'' கிருஷ்ணன் தந்த காப்பி சூடாயிருந்தது. கப்பை எடுத்துக் கொண்டு சென்ற கிருஷ்ணன் அறைக் கதவை மூடிக்கொண்டு வெளியேறினார்.

மாலதிக்கும் கிருஷ்ணனுக்குமான பொதுவான கடிதம். ''நான் பிழைத்து வருவேன் என்ற நம்பிக்கையே இல்லாதபோது, மாலதி தனக்கென்று ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொண்டு, வதங்காமல், வாழத் துவங்கியிருக்க வேண்டும் என்று சதா எண்ணுவேன். டெல்லியில் மற்ற ஆர்மிக்காரர்கள் மாலதி மறுமணம் செய்து கொண்டு விட்டாள் என்று சொன்னபோது சந்தோஷப்பட்டேன். அந்த மகிழ்ச்சியைச் சுமந்து கொண்டுதான் சென்னை வந்தேன். நாம் அன்பு கொண்டுள்ளவர்கள் துன்பப்பட்டு அதை நாம் பார்த்துச் சகிப்பதல்ல அன்பு. நாம் அன்பு செலுத்துபவரின் சகல சௌக்கியத்தையும் கண்டு மகிழ்வதுதான் உண்மையான அன்பு.

கிருஷ்ணன், காஸ் ஏஜன்ஸியில் இன்னார் என நான் அறிமுகப்படுத்திக் கொண்டதும், ஏன் இப்படி அதிர்ந்து போனீர்கள்?... மாலதியைப் பறித்துக் கொண்டு விடுவேன் என்று பதறிப்போனீர்கள் என்று எண்ணினேன். ஆனால் உங்களுடன் பேசப் பேசப் புரிந்து கொண்டேன், நீங்கள் எத்தனை பெரிய மனிதர் என்று. உங்களுக்குப் பொறுமை, காழ்ப்பு, கோபம் எதுவுமே கிடையாதா?

என் துக்கத்துக்கு உருகி, என் துன்பங்களுக்கு வருந்தி, மாலதி உங்களுடையவள் எனப் பரிந்து தர முற்பட்ட நீங்கள் என்ன மனிதரா கடவுளா? பெண்களைக் கேவலப்படுத்தி, விலை பேசும் நம் சமூகத்தில் உங்களைப் போன்ற ஒரு கணவரைப் பெற மாலதி ரொம்பவும் அதிர்ஷ்டம் செய்திருக்கிறாள்.

நான் வந்த நோக்கம் அதில்லை, கிருஷ்ணன்... நான் ஆர்மிக்காரன். எங்கள் உறவு முறைகள், பந்த பாசங்களே வேறு. ஹிட்லரின் நாஜிப் படையில் மேல் பதவிக்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆபீஸர்களிடம் ஒரு அல்சேஷன் குட்டி தரப்படுமாம். மனைவி, குடும்பம், குழந்தை அனைத்தையும் துறந்து வரும் வீரனுக்கு ஒரே துணை இந்த நன்றி மிக்க நாய்தான். அந்த சோல்ஜரின் ஒரே பாசப் பிணைப்பு அந்த நாலு கால் ஜந்து. அதை ஊட்டிச் சீராட்டி வளர்ப்பவன் அந்தச் சிப்பாய். ஒரு நாய் தரக்கூடிய அன்பையும், நன்றி உணர்வையும் - மனிதன் கூடத் தர முடியாது. உடல் நலிவு பட்ட ஒரு சிப்பாய்க்கு வேலைக்கு மருந்து தருவது. பாண்

---

முட்டை, புத்தம் புதியதுதானு என்று அறிய ஒரு வழி. ஒரு டம்ளரில் சிறிது தண்ணீர் எடுத்துக்கொண்டு அதில் இரண்டு ஸ்பூன் உப்பைப் போட்டு அதில் முட்டையைப் போட்டால், புதிய முட்டை உடனே முழுகிவிடும்.

- ஏ.வி. தேவன்

டேஜ் கட்டுவதெல்லாம் அந்த நாய்தான்.

திடீரென்று மேலிடத்திலிருந்து ஒரு நாள் ஆணை வரும். நீயே உன் கையால் தூக்கி வளர்த்த நாயைச் சாகும்வரை கழுத்தை நெருக்கிக் கொல் என்று. நாயின் கழுத்தில் கை வைக்கும்போதே 'என் மகனே' எனக் கதறிச் செயலிழந்து கழுவேறிய சிப்பாய்கள் பலர். இந்தச் சோதனையில் வெற்றி பெற்றவன்தான் உண்மையான சிப்பாய்க்கான மன இடத்தைப் பெற்றவன் எனக் கருதப்படுவான்.

இப்படிப்பட்ட குரூரமான சோதனையையும் தாண்டி நிற்பவன்தான் உண்மையான சிப்பாய். நாஜிச் சிப்பாய் சந்தித்ததை விட எந்தப் பெரிய சோதனையையும் நான் இப்போது சந்தித்துவிடவில்லை. அந்த நாஜிச் சிப்பாயின் மனோபாவத்தில் பாதிக்கு மேலாவது எனக்கு இருக்கும் என்ற தன்னம்பிக்கை எனக்குண்டு. அது இல்லையென்றால், பரமவிசிஷ்ட் சேவா மெடலைப் பெறும் தகுதி எனக்கில்லை என அர்த்தம்.

உங்கள் பெருந்தன்மையைப் பாராட்டினாலும் ஆர்மியில் பழக்கப்பட்டுக் கடினமாகிவிட்ட என் மனது உங்கள் வாழ்க்கையைக் குழப்பாது. எங்கள் வாழ்க்கை குறுகிய பல சுயநலங்களுக்கு அப்பாற்பட்டது. வளர்த்த நாயையே கொல்லத் துணிவு பெற்ற ஒருவன், அந்த நாயை அருமையாகப் போற்றிப் பேணக் கூடிய நண்பனிடம் தர மாட்டானா?

மாலதி சூலுற்றிருக்கிறாள் என்று கேட்டு எத்தனை சந்தோஷமாக இருக்கிறது? என்னால் அன்று முடியாமல் போனது, இந்த மினோச் சித்ரவதையால் முடியாது என்றே நிருபணமானது. அது உங்களுக்குக் கிடைத்திருப்பது மெத்த சந்தோஷம். மாலதியின் குழந்தை நல்ல தந்தையின் அற்புதமான மகனாக இருப்பான்.

நான் மாலதியைக் காணக் கடைக்கு வந்திருந்த மனநிலையும், கிருஷ்ணைப் பார்த்த பிறகான மனநிலையும் வேறு வேறு. நான் மாலதியை இப்போது சந்திக்க விரும்பவில்லை. ஏனெனில் சட்டப்படி எங்கள் திருமணம் முற்றுப் பெறவில்லை. இந்தப் பேப்பர்களைப் படித்துப் பார். 'ம்யூச்சுவல் கன்ஸெண்'டுடன் நாம் பிரிவோம்.

அதன் பிறகு நல்ல நண்பனாக அடிக்கடி உங்கள் வீட்டுக்கு வருகிறேன். எனக்குக் குழந்தைகள் என்றால் மிகவும் பிடிக்கும். உங்கள் மழலையின் விளையாட்டில் பங்கு கொள்ள, உங்கள் அன்பை ரசிக்க...

ஆறு மாதத்துக்குப் பிறகு—

எந்த மலைச் சாரலோ, பனிப் படலமோ.. எங்கே போஸ்டிங்கோ அங்கே என் சீரான வாழ்வைத் துவங்குவேன்.

நண்பன் ரிஷி''

டாகூர் மறந்துகூடப் போச்சு... ஆனால்

''பிடுங்கப்பட்டு முன் அழகாகத் தரப் பழகிக் கொண்டால், பறிக்கப்படு முன் பகிர்ந்து கொண்டால்.''

ஒரு காய்த்துப் போன சிப்பாயின் பாதை நீள்கிறது... அவன் நட்ட பாதை ஓரப் பூக்கள் தாமாகப் பூத்துக் குலுங்கி, ஒளிவிட்டுத் நனைத்து நிற்கின்றன.






அன்புள்ள வனிதா,

போன வாரம் கடைத் தெருவுக்குச் சென்றபோது நிர்மலாவைச் சந்தித்தேன். மளிகைச் சாமான்களை ஆர்டர் கொடுத்தபடி நின்றிருந்த அவளைப் பார்த்து எனக்கு அதிசயமாகப் போயிற்று.

மாதம் பிறந்து பதினைந்து தேதிகள் ஆகியுமா வீட்டுக்குத் தேவையான சாமான்களை வாங்காமல் இருக்கிறாள்? அதிலும் முதல் தேதியே அவள் கணவருக்குச் சம்பளம் வந்துவிடுமே?

வியப்புடன் அவளை அணுகியவள், "என்ன நிர்மலா? ஊருக்குப் போயிருந்தாயா? இப்பப் போய் மாச நடுவிலே, மளிகைச் சாமான் வாங்கறே?" என்றேன்.

அவள் முகம் கடுகடுத்தது. "அந்த வேதனையை ஏன் கேக்கறே. வழக்கம்போல் வாடிக்கையாகச் சாமான்களை வாங்கிப் போட்டேன். ஆனால் விருந்தாளிங்க வந்திட்டாங்க. அத்தனையும் காலி."

"அட பாவமே! உனக்கு விருந்தாளிகள் வரது தெரியலியா?" அனுதாபமாகக் கேட்டேன்.

"விருந்தாளிங்கள் வந்துட்டுப் போகட்டும். ஆனா காலை வித்தியாசம், நம்ப நிலைமையினு அனுசரிச்சுப் போகாதவங்களா இருந்திட்டா ரொம்பக்கஷ்டம்."

"அப்படியா?"

"ஆமாம். அவங்க புருஷன், பெண்சாதி, இன்னும் இரண்டு குழந்தைங்க, அதில ஒண்ணு கடைக்குட்டி. அது பால்தான் சாப்பிடுமாம். மூணு ஸ்பூன் சர்க்கரை ஒவ்வொரு வாட்டியும். காலையில ரொட்டி, ஜாம் முகத்தில்தான் குழந்தைங்க விழிக்குமாம். ஐயோ! போதும், போதும்னு ஆயிடுச்சு. அத்தோட, ஊருக்குப் புறப்படு முன், வழிச் சாப்பாட்டுக்குன்னு ஒரு மூட்டை சோறு, பூரி, சப்பாத்தி... மளிகை சாமானெல்லாம் காலி." அலுத்தபடி நடந்தாள்.

விருந்தும் மருந்தும் மூன்று நாட்கள்தான் என்று பெரியவர்கள் தெரியாமலா சொல்லியிருக்கிறார்கள்?

ஆமாம், விருந்தோம்பல் என்பதே தமிழ்ப் பண்பாடு என்று தம்பட்டம் அடித்துக் கொள்கிறோமே, அப்படி இருக்க, இந்தச் சலிப்பு எப்படி ஒரு குடும்பத் தலைவிக்கு ஏற்படலாம் என்கிறாயா?

ஏற்படலாம்... அதுவும் இந்தக் காலத்து விலைவாசியின் விலை ஏற்றத்திலும், பணம் கொடுத்தாலும் சில அத்தியாவசியப் பண்டங்கள் கிடைக்காத நேரத்திலும், எரிச்சல் ஏற்படுவது இயல்புதான்.

ஆமாம்! நானும்தான் கேட்கிறேன். விருந்தாளிகளாகப் போகிறவர்களுக்கும் சில பண்பாடுகள் தேவை இல்லையா?

அவர்கள் போய்த் தங்குமிடத்தில், வசதிக் குறைவாக இருந்தாலும் ஒத்துப் போகும் குணம் இருக்க வேண்டாமா?

"எங்கள் வீட்டில் சாப்பாட்டு மேஜையில் வெள்ளை விரிப்புப் போட்டுவிட்டுத்தான் பிறகு தட்டுகளை வைப்போம்" என்றோ,

"என்ன செய்வது? எங்க ரவி, முள் கரண்டியும், கத்தியும் இல்லாமச் சாப்பிட மாட்டான். ரொம்ப அடம்" என்றோ,

"அடடே! வெங்காயமா? நாங்க தொடவே மாட்டோம்" என்றோ,

"டீயா? எங்களுக்கெல்லாம் காப்பி தவிர வேறு எதுவும் பிடிக்கிறதே இல்லை" என்றோ கூறிக்கொண்டே இருக்கும் விருந்தாளியை யார்தான் வரவேற்பார்கள்?

ஒருமுறை என் மற்றொரு தோழி ஒருத்தி பங்களூரில் விருந்தாளியாக இருந்துவிட்டு

வந்தாள். போன இடத்தில், அவளை நன்ருகக் கவனித்தார்கள். அங்கே பெரிய வீடு. ஆள், படை கார் என்று சகல வசதிகளும் இருந்தன. பிறகு... பங்களூர்காரர்கள் டில்லிக்கு மாலதியின் விருந்தாளியாக வந்தனர். பதிலுக்கு விருந்தோம்ப வேண்டாமா?

டிசம்பர் குளிர். பங்களூர்காரர்களைப் போல மாலதிக்கு வசதி கிடையாது. ''ஃபட்பட''யும் டாக்ஸியுமாக வாகன வசதிக்குப் பணம் கரைந்தது. பூரிகளை நெய்யாலேயே பொரித்துப் போட்டு, நடுங்கும் குளிருக்காகக் கைகழுவ வெந்நீர் போட்டுக்கொடுத்து படாத பாடு பட்டுவிட்டாள். அதிலிருந்து ஒரு படிப்பினை... ஏறாத படியெல்லாம் ஏற வேண்டாம்! நமது தகுதிக்கு ஏற்ற இடமாக இருந்தால் விருந்தாளியாகப் போ... இல்லையேல் வேண்டாம். ஏனெனில் திருப்பமுடியாத கடனாகிவிடும்.

எதற்காக இத்தனையும் சொல்ல வந்தேன் என்ருல், நீ வேலைக்குப் போகும் பெண். சதா வீடு, ஆபீஸ் என்று இயந்திரமாக உழலும் வாழ்வில் ஓய்வு கட்டாயம் தேவை தான்.

அதற்காக, முன்னேற்பாடாக, சிறு துளியாகப் பணத்தைச் சேமித்து வைத்துக் கொள். ஆபீஸிலேயே விடுமுறை அலவன்ஸ் கொடுத்தால் மிகவும் நல்லது.

எந்த ஊருக்குப் போக வேண்டும், எத்தனை நாள் தங்க வேண்டும் என்பதையெல்லாம் கணக்கிட்டு, அங்கே வசதியாக, உனது கட்டுக்கு அடங்கும் ஓட்டலைத் தேர்ந்தெடுத்துத் தங்குங்கள்.

''என்னோட பெரியப்பா மகன் இருக்கான் கோயமுத்தூர்ல,. அங்கே தங்கிடுவோம்'' என்று உன் கணவர் சொல்லலாம்.

''மதுரையா? என் தங்கச்சி நாத்தனூர் வீடு இருக்கே'' என்று நீ செலவைக் குறைக்கப் பார்க்கலாம்.

வனிதா, இதுபோன்ற விஷயங்களில்தான் நாம் தவறு செய்கிறோம். ஓட்டல் செலவு ஆகுமே என்ற பயத்தில் பிறர் வீட்டில் விருந்தாளியாகப் போகிறோம். நம்மால் சும்மா உட்கார்ந்து ஓய்வெடுக்க முடிகிறதா? கூடமாட வேலை செய்கிறோம். அவர்களது விருப்பு வெறுப்புகளைத் தலைமீது அள்ளிப் போட்டுக் கொள்கிறோம். முடிவில் கிளம்பும் போது. இத்தனை நாள் சோறு தின்றோமே என்ற பயத்தின் உறுத்தலில், கணிசமான ஒரு தொகைக்கு ஒரு பரிசளிப்பு வேறு செய்கிறோம். பிறகு மீண்டும் தொடர் கதையாக, அவர்களை நம் வீட்டுக்கு விருந்தாளியாக அழைப்பு விடுகிறோம். அப்படி வந்துவிட்டால்... ஆபீஸ் — வீடு — விருந்து என்ற மூன்று முனைப் போர்களை நீ சந்திக்க வேண்டும் என்பதை மறவாதே.

நிச்சயமாக, இந்தக் காலத்தில் ஒரு வீட்டில் விருந்தாளியாக நீ போவது, கடன் வாங்குவது போல என்பதை மறவாதே. இந்தக் கடனைத் திருப்பித் தர நம்மால் இயலுமா என்பதை யோசி.

நீ ஒரு நாளோ, இரண்டு நாளோ ஒருத்தர் வீட்டில் தங்கிவிடுவதற்காக, பத்து நாள் பதில் உபசாரம் செய்ய உனக்கு நேரமும், உடலில் தெம்பும் இருக்குமா? யோசிக்கவும்.

விருந்தும், மருந்து போல்தான் என்பதை மறவாதே. உனக்கு ஓய்வு தேவை. லீவு எடுத்துக்கொள். நல்ல ஹோட்டல்களில் தங்கி, சுதந்திரமாக இரு. கணவருடன் ஊர் சுற்று. உறவினர்களைப்போய்ப் பார்த்து குசலம் விசாரி. உபத்திரவமான விருந்தாளியாக மாறிவிடாதே.

---

**இம்மாத இல்லத்தரசி போட்டி**

பொருள் : தக்காளி

முடிவு தேதி : 15 - 10 - 81

**சமையல் கூபன்**

இத்துடன் . . . . . . . . . . . என்ற தலைப்பில் சமையல் குறிப்புக்களை அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறோம்.

கையொப்பம்

சில அனுபவங்கள் நீங்காத நினைவுகளாக நம் நெஞ்சில் இடம் பெற்றுவிடுவது உண்மையே.

சமீபத்தில் என்னுடன் படித்த தோழி ஒருத்தி காலமாகி விட்டாள். கடைசி மரியாதை செலுத்த நான் போனபோது அந்தப் பிரிவின் அதிர்ச்சியில் மௌனமாக உட்கார்ந்திருந்தேன். ஆனால் அவளும் நானும் மட்டுமே சேர்ந்து உணர்ந்து அனுபவித்த சில கடந்த கால நிகழ்ச்சிகளின் நினைவு நெஞ்சுக்குள்ளே விரிந்து அடைத்துக்கொள்வதை உணர்ந்தேன். அது ஒரு அழமாட்டாத துக்கம்.

எந்த நிலையிலும் வேடிக்கையாகப் பேசி மற்றவர்களைச் சிரிக்கவும் சிந்திக்கவும் செய்யும் தனி ஆற்றல் அவளிடம் இருந்தது. ஒரே ஊரில், ஒரே கல்லூரியில் ஒரே வகுப்பில் அடுத்தடுத்த ஆசனங்களில் அமர்ந்து படித்த தோழிகள் — ஒரு நாள் இரண்டு நாள் அல்ல. வைத்தியக் கல்லூரி மாணவியாகச் சேர்ந்து படித்து — தேர்ந்து, ஹவுஸ் சர்ஜனாகி, ஒரே ஆஸ்பத்திரியில் பின்னர் தொடர்ந்து பணி புரியும்வரை சுமார் பத்தாண்டு காலத்துநெருக்கமான தோழமை. நாங்கள் வசித்த மயிலையிலிருந்து நகரத்தின் மறு கோடியிலிருந்த கல்லூரிக்கு டிராம் வண்டியில் தினமும் பயணப்படும்போது... அலுப்புத் தோன்றுதிருக்க... கதைகள் ஏதாவது சொல்லிச் சிரிக்க வைத்துக்கொண்டிருப்பாள். சில சமயம் நாங்கள் பரிட்சைக்குப் படிக்க வேண்டிய பாடப் புத்தகத்தை மடியில் பரப்பி வைத்துக் கொண்டு, டிராம் வண்டியின் சத்தத்தையும் ஆட்டத்தையும் பொருட்படுத்தாமல் அவள் படிக்க, நான் கேட்டுக் கொண்டே கல்லூரிக்குச் செல்வது வழக்கம்.

கல்லூரி நூல் நிலையத்துக்குள் யாரும் பேசக்கூடாது. புத்தகங்களை எடுத்து வைத்துக்கொண்டு அமைதியாகப் படிக்க வேண்டும். அப்படி ஒரு சட்ட திட்டம். ஆனாலும் நூல் நிலையத்தில் எங்கள் பகுதியில் நாங்கள் உட்கார்ந்து படிக்கும்போது அவள் அடிக்குரலில் மெள்ள ஏதாவது வேடிக்கையாக என்னிடம் சொல்லி விடுவாள். இல்லாவிட்டால் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி என் பக்கம் தள்ளி விடுவாள்.

எங்களுடன் படித்த சக மாணவர்கள் எங்களுக்குப் புனை பெயர் கொடுத்து அழைத்தது போல நாங்களும் அவர்களுக்குப் பல புனை பெயர்களைச் சூட்டி மகிழ்ந்திருக்கிறோம்.

''தயிர்வடை! இன்னிக்கு புது டை கட்டிண்டு வந்திருக்கான் திரும்பிப் பார்!

கிளி மூக்கு ராத்திரி யெல்லாம் சினிமா பார்த்தது போலிருக்கு — புஸ்தகத்தை வச்சுண்டு சாமியாடறது...''

அவள் எழுதி என்னிடம் தள்ளிவிடும் குறிப்புக்களை படித்து விட்டுத் திரும்பிப் பார்ப்பேன்.



# நீங்காத சில நினைவுகள்

.லக்ஷ்மி.



தயிர் வடை என்னும் அந்த மாணவன் (அடிக்கடி கான்டீனில் தயிர் வடை கேட்டு வாங்கிச் சாப்பிட்டதால் வந்த பேர்) தனது புது டையைப் பெருமையுடன் தடவிக் கொண்டு சுற்றிலும் பார்வையை ஓட்டிக் கொண்டிருப்பான்.

கிளிமூக்கு என்பவன் உண்மையாகவே கண்களை மூடிக்கொண்டு தூக்கத்தில் படிக்கும் பாவனையில் தூங்கி விழுந்து கொண்டிருப்பான்.

என்னால் தாங்க முடியாது. குபீரென்று எழுந்து அருகிலிருக்கும் பெண்களின் கழி வறைக்குச் சென்று மறைந்து கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரிப்பேன். கண்களில் நீர் வரும் வரை சிரித்து முடித்துவிட்டு நான் மெள்ள வெளியே வந்தால் என் தோழி வைட்டமின்களைப் பற்றி மிகவும் தீவிரமாகப்படித்துக் கொண்டு... குறிப்புக்களை ஒரு நோட்டுப் புத்தகத்தில் கவனமாக எழுதிக் கொண்டிருப்பாள்!

வகுப்புக்களிலும் சில சமயம் அவள் குறும்புத்தனங்களில் ஈடுபடுவதுண்டு. விளக்கெண்ணெய் போல எங்களுக்குப் பிடிக்காத பாடங்களை... பேராசிரியர் ஒரே சீரான குரலில் போதிக்கத் துவங்கினால்... தூக்கத்தைத் தடுக்கும் நிமித்தம் நோட்ஸ் எடுப்பவள் போல தமிழில் தனக்குத் தெரிந்த மட்டில் கதைகள் புனையத் தொடங்கி விடுவாள்.

ஒரு சமயம் அவள் எழுதிக் கொண்டிருந்த நோட்டுப் புத்தகத்தை நான் வாங்கிப் படித்துவிட்டுக் குபுக்கென்று சிரித்துவிட்டேன். புரொபஸர் பார்த்துவிட்டார். அவர் முகம் கடுமையாகியது. தடிமனான கண்ணாடி வழியே அவர் என்னைப் பார்வையால் எரித்தார்.

'அந்த நோட்டுப் புத்தகத்தை இப்படி எடுத்துவா...' உத்தரவிட்டபோது என் கையும் காலும் தந்தியடிக்கத் தொடங்கின.

'கட்டு விழிக்கும் உமது கண்கள் ஐயா!
வெறும் கண்ணும்புக் கரண்டான்கள்
வட்டமாகச் சுழலும் உமது விழிகள்
வண்டிச் சக்கரங்கள்'

அன்று எங்களுக்குப் பாடம் போதித்துக் கொண்டிருந்த பேராசிரியர் எங்கள் பரிட்சை அதிகாரியும்கூட. அவரைப் பரிகசிப்பது போல எழுதியிருந்த கவிதையை அவர் படிப்பதைக் கண்டு நடுங்கிப்போய்விட்டேன். போச்சு... வருகிற பரிட்சையில் இரண்டு பேரும் கோட்' என்ற பயங்கர உணர்வில் அன்று வீடு திரும்பும்போது டிராம் பயணத்தில் நாங்கள் இருவரும் மௌனமாக இருந்தோம்.

முடிவில் அந்தப் பரிட்சை வந்தது. எழுதினோம். முடிவுக்காகக் காத்துக் கொண்டிருந்தோம்.

ஒரு நாள் கல்லூரி வராந்தாவில் அந்தப் பேராசிரியரை எதேச்சையாகப் பார்க்க நேரிட்டது.

'கவிக் குஞ்சுகளே! எங்கே இப்படி?'— ஆசிரியர் புன்னகைத்தார்.

''புகையும் எரிமலை புன்னகைக்கிறது— நாமிருவரும் பரிட்சையில் தோற்றுவிட்டிருக்கிறோம்'' — கிசுகிசுத்தாள் என் தோழி.

பரிட்சையில் பெயில் ஆனால், எங்கள் வீட்டில் எனக்குக் கிடைக்கப்போகும் வரவேற்பை எண்ணியபோது 'ஐயோ' என்று வாய் விட்டு அலறிவிட்டேன்.

இரண்டு நாட்கள் கழித்துத் தேர்வின் முடிவு பத்திரிகையில் வெளியானபோது எங்களுக்கு வியப்புக் கலந்த அதிர்ச்சி.

இரண்டு பேரும் பாஸ் செய்து விட்டிருந்தோம்.

மதிப்பெண்களை முன்னதாகத் தெரிந்து கொள்ளும் ஆவலுடன் நாங்கள் துணிவேல்

லாம் திரட்டிக் கொண்டு அந்தப் பேராசிரியரைச் சந்திக்கக் கல்லூரியிலிருந்த அவர் அறைக்குள் மெல்லத் தலையை நீட்டினேம்.

''எங்கே வந்தீங்க?'' – மூக்குக் கண்ணுடி வழியே முறைத்தார் அவர்.

''மார்க்குகளைத் தெரிஞ்சுக்க....'' ஒத்துப் பாடினேம்.

''கவிதைகள் எழுதிக் கொண்டிருந்தீங்க... அப்படியும் அதிசயமா நல்ல மார்க்குகளுடன் பாஸாகி விட்டீங்க... ஆனல் இனி கவிதைகளை மூட்டை கட்டி வைச்சுட்டு ஒழுங்காகப் படிக்கணும்... இது உங்களுடைய கடைசி வருஷம். கடினமான படிப்பு... தெரியுமில்லையா?'' அதட்டியபடி எங்களது மதிப்பெண்களைக் குறித்துக் கொடுத்தார்.

நன்றி தெரிவித்துக் கைகூப்பி வணங்கி விட்டு அங்கிருந்து மாயமானேம்.

அதற்கு அடுத்த சில நாட்களில் அவர் மாரடைப்பில் திடீரென்று மரணமடைந்து விட்டார்.

'நல்ல மனிதர்களை யெல்லாம் ஏன் கடவுள் சின்ன வயதிலேயே தன்னிடம் அழைச்சுக்கிறர்? என்று கேட்டபடி கண் கலங்கிய என் தோழியைக் கண்டு எனக்கும் அவரது இழப்பின் துயரத்தில் கண்ணீர் வந்தது.

எப்பொழுதும் சிரிப்பும் வேடிக்கைப் பேச்சுக்களுமாக... வளையவந்த என் தோழியை முதல் முதலாகக் கண்ணீருடன் கண்ட அந்த நினைவு இன்னமும் மறக்கவே முடியவில்லை.

வீட்டுக்கு வந்து தோழியின் மறைவுக்கு மரியாதை தெரிவிக்க ஸ்நானம் செய்துவிட்டு அவளது ஆத்ம சாந்திக்குப் பிரார்த்தனை செய்துகொண்டபின் வெகு நேரம் நான் அப்படியே நாற்காலியில் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்து விட்டேன்.

கல்லூரியில் சேர்ந்த முதல் நாள் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு 'உன் பெயர் என்ன?' என்று அவள் பேச ஆரம்பித்தது முதல்... பேசாது என்னிடம் மீளா விடை பெற்றுக் கொண்டு அவள் போய் விட்ட அன்றுவரை... நடந்த நிகழ்ச்சிகள் பலவும் தொடர் கதையாக நெஞ்சில் எழ என் கண்களிலிருந்து கண்ணீர் தானே பெருகி ஓடியது.

என் தோழியின் இழப்பின் துயரத்தை நான் யாருடனும் பங்கிட்டுக் கொள்ள விரும்பவில்லை. அதனல்தானே என்னவோ துக்க வீட்டில் ஒரு பொட்டுக் கண்ணீரைச் சிந்தாத என் கண்கள் தனிமையில் கண்ணீர்த் துளிகளைத் தொடர்ந்து கொட்டின.

என் அன்பான சினேகிதியே... தனிமையில் நான் வடிக்கும் இந்தக் கண்ணீர் உனக்கு நான் சாற்றும் இறுதி மலர் மாலை.. என் நட்பின் காணிக்கை...

எனக்குள் பலமுறை சொல்லிக் கொண்டேன். அவள் நினைவு இன்னமும் நெஞ்சை லேசாக நெருடிக் கொண்டிருக்கிறது.

இன்னொரு மறக்க முடியாத நிகழ்ச்சி. சில ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு சமயம் நானும் என் கணவரும் – மகனும் ஆப்பிரிக்காவிலிருந்து தாய் நாட்டுக்கு வந்தோம். வாரணுசியைப் பார்க்கப் பிரியப்பட்டு காசிலேயே பயணப்பட்டோம். கங்கா நதியில் ஒரு படகில் ஏறிச் சென்று குளித்துவிட்டு காசி விசுவநாதரைக் கையால் தொட்டுப் பூஜித்து மகிழ்ந்து விசாலாட்சியை வணங்கிய பின்னர் அருகில் உள்ள சாரநாத் கோயிலுக்குப் புறப்பட்டோம்.

புத்தருக்கு ஞானேதயம் ஏற்பட்ட சமயம் அவர் அமர்ந்திருந்த இடத்திலே வளர்ந்திருந்த போதிமரத்தின் சிறு செடியொன்று பிரகாரத்திலே பெரும் மரமாக வளர்ந்து நிற்பதாகவும் அதுவும் வணக்கத்துக்கு உரியது என்றும் கைடு விவரிக்கவே அந்த அரச மரத்தின் அடியில் போய் உட்கார்ந்து கொண்டேன். பழுத்து உதிர்ந்த கீழே சருகாகக் கிடந்த சில இலைகளை ஞாபகத்துக்காகச் சேகரிக்கத் தொடங்கியபோது என்னையும் மீறிய ஓர் உணர்வில் குலுங்கிப்போய் நான் திடீரென்று அழ ஆரம்பித்து விட்டேன்.

ஆசியாவின் ஜோதி என்று அழைக்கப்படும் புத்த பகவான் சித்தார்த்தன் அரசிளங்குமரனக இருக்கையில் அரண்மனை வாசம், அன்பு மனைவி, அழகான பிள்ளை, ஆண்டு அனுபவிக்க ஒரு ராஜ்யம் என்று பல சௌபாக்கியங்கள் இருந்தன. அத்தனையையும் உதறிவிட்டு, ஒரு நாள் இரவு வைராக்கியமாக உண்மையை நாடிக் கொண்டு துறவறத்தை மேற்கொண்டு அரண்மனையிலிருந்து புறப்பட்டு விட்டார். அந்தத் தூயவரின் பாதம் பட்ட மண்ணிலே நானும் நடக்கும் பாக்கியத்தைப் பெறுகிறேனே என்று நினைக்கும் போது... அந்த மகானின் கால் தூசிக்கும் சமதையில்லாத என் சிறுமையை எண்ணி... பச்சாதாப உணர்வில் அழுதேன்....

சிறிது பொழுதில் நான் என்னைச் சமாளித்துக் கொண்டு மறுபடியும் புத்தரை வணங்கக் கோயிலுக்குள் சென்றேன்.

எனது பழைய டைரி ஒன்றின் ஏடுகள் இடையே அந்த அரசு இலைகளைப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டிருக்கிறேன்.... அவைகளைப் பார்க்கும்போதெல்லாம் சாரநாத் கோயிலின் நினைவு நெஞ்சை நிறைக்கிறது.

---

பூரான் கடித்தால் உடம்பில் தடிப்பு ஏற்படும். நமைச்சல் ஏற்படும். உடனே பெரிய நெல்லிக்காய் அளவு பனை வெல்லத்தை நன்ருக கடித்து சாப்பிடவேண்டும். பூரான் விஷத்தை பனை வெல்லம் முறித்து விடும்.

–உமா

# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

## ஐடெக்ஸ்

டீலக்ஸ் குங்குமம்
matt finish

காட்டெங்கணும் நாகரீக நங்கையர்
நாடி அணிவது ஐடெக்ஸ் குங்குமம்
மங்கையரின் மலர்முகத்தின் இன்னழகை
எடுத்துக் காட்டுவதும் இதுவே.
14 கண்கவர் வண்ணங்களில் கிடைக்கிறது.
சாஸ்திரீய முறைப்படி தயாரிக்கப்படும்
ஐடெக்ஸ் குங்குமம் சருமத்திற்கு எவ்வித
தீங்கும் விளைவிக்காதது.



ஐடெக்ஸ்
38 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்

அரவிந்த் லாபரட்டரீஸ் சென்னை 600 033.

Imageads-AL-1304 Tam

# பேப்பர் கோலேஜ் ஓவியங்கள்



வீணாகிவிட்ட பழைய ஆர்ட் பேப்பர் காலண்டர்கள், வாழ்த்து அட்டைகள், நல்ல பிரிண்ட் கொண்ட புத்தக மேலட்டைகள் இவைகளை வைத்துக் கொண்டு அழகான புதுமை 'கோலாஜ்' ஓவியங்களை நீங்கள் தயாரிக்கலாம். செலவே இல்லாதது என்பது மட்டுமல்ல மிகவும் கவர்ச்சியானதும் கூட! சிறிய அளவு தட்டியில் ஒரு ஓவியம் தயாரிக்க சராசரி 3 ரூபாய் கூட ஆகாது.

**தேவையான பொருட்கள்:**

பெயிண்டிங் மேட் 1 (சிறியது).
ஒரு முழுத் தாள் சிவப்பு வர்ண ஆர்ட் பேப்பர் (இது ஒரு பக்கம் மட்டும் கலராக வும் பின்பக்கம் வெள்ளையாகவும் இருக்கும்)
கார்பன் பேப்பர்,
பென்சில்,
கத்தரிக்கோல்,
ஒட்டுவதற்கு பெவிகால்,
பலரக வர்ணம் கொண்ட படங்களுடன் கூடிய ஆர்ட் பேப்பர்துண்டுகள் (கம்பி மத் தாப்பு லேபிள்களையும் பயன்படுத்தலாம்)

**செய்முறை:**

நீங்கள் விரும்பும் ஒரு டிசைனை படத்தில் காட்டியது போல் இருப்பதை கார்பன் வைத்து சிவப்பு ஆர்ட் பேப்பரில் டிரேஸ் செய்யுங்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கும் டிசைன் தட்டியின் அமைப்புக்கு அளவானதாகவும் மத்தியில் இட்டமான அளவுடன் கூடிய

ரமணி ரங்கநாதன்



தாகவும் இருப்பது அவசியம்! ஸ்டிரேஸ் செய்த டிசைனை தனியே கத்தரித்து எடுத்து தட்டியில் பெவிகால் கொண்டு ஒட்டவும். பிறகு உங்கள் கற்பனையை உபயோகித்து ஆர்ட் பேர்ப்பர் துண்டுகளை பல கோண சிறு வடிவங்களாகக் கத்தரித்து படத்தின் மேல் ஒட்டிவரவேண்டும். நிழலான இடங்களுக்கு கருமையான வர்ணங்கள் கொண்ட துண்டுகளாகவும் மற்ற இடங்களுக்கு வெளிர் நிறத் துண்டுகளையும் ஒட்ட வேண்டும். இடைவெளி பாகங்களில் சிவப்பு ஆர்ட் பேப்பர் தெரியும். அதனால் அந்த இடைவெளி ஒரே சீராக இருக்கும்படி பார்த்து செயல்பட வேண்டியது மிக முக்கியம். காது அணிகள், கழுத்து மணிகள் இவைகளுக்கு பழைய படங்களில் வரும் பூக்கள் புள்ளிகள் போல் சிறு அமைப்புக்களை வெட்டி ஒட்ட வேண்டும்.

நீங்கள் கோலாஜ் செய்யப் பயன்படுத்தும் காகிதங்கள் ஒரே சீரான கனத்துடன் கூடிய பேப்பராக இருக்க வேண்டும். மெல்லிய ஆர்ட் அட்டைகளைப் பயன்படுத்தினால் படம் முழுதும் அதே கனத்துடன் கூடிய அட்டைகளையே பயன்படுத்தி பூர்த்தி செய்ய வேண்டும். காலண்டராக இருந்தால் அதே கனமான பேப்பர்களை முழுதும் வர வேண்டும்.

அம்மாதிரி சிறு துண்டுகளாக ஒட்டாமல் வேறு முறையிலும் செய்யலாம். நீங்கள் கோலாஜ் செய்ய இருக்கும் ஓவியத்தை தட்டியில் டிரேஸ் செய்துவிட்டுத் தனியாகவும் ஒரு வெள்ளைக் காகிதத்தில் படத்தை டிரேஸ் செய்தும் எடுங்கள். அந்தப் படத்தின் மேல் துண்டு பண்ண வேண்டிய பாகங்களைப் படத்தில் காட்டியது போல் குறுக்குக் கோடுகளைப் போட்டுக் கொண்டு அதை வெட்டி வைத்துக் கொண்டு அதே அளவில் நீங்கள் எடுத்து வைத்திருக்கும் பழைய ஆர்ட் பேப்பர் துண்டுகளின் மேல் வைத்து அதே அளவில் வெட்டி வெட்டி

அவ்வப்போது படத்தில் ஒட்டி வரலாம். படத்தின் இடது பக்கம் இளமஞ்சள், இளம் பச்சை, ரோஜா வர்ணம் இதுபோலவும் வலது பக்கத் துண்டுகளில் கரும் பச்சை, கரு நீலம் எல்லாம் கலந்து கருமையான வர்ண அமைப்புடனும் ஒட்டவும். ஒரே வர்ணத்தைப் பக்கத்துப் பக்கத்தில் ஒட்டாமல் வெவ்வேறு வர்ணங்களைக் கலந்து ஒட்ட



⌘ சிறுசிறு துண்டுகளாகக் கத்திரிக்கப்பட்ட வண்ணப் பேப்பர்களை ஒட்டித் தயாரிக்கப்பட்ட ''பேப்பர் கோலாஜ்'' ஓவியம்.

வேண்டும். படத்தை முடித்து விட்ட பின் கண்களுக்கு மெல்லியதாக கருப்புப் பேப்பரை வெட்டி ஒட்டிப் பூர்த்தி செய்யவும். படத்தின் கீழ் அழகான அமைப்புடன் கூடிய சில்க் லேஸ் ஒட்டி அலங்கரிக்கலாம். இதே முறையில் உங்கள் கற்பனையைப் பயன்படுத்தி மிக நேர்த்தியான கோலாஜ் ஓவியங்களை நீங்கள் தயாரிக்கலாம். குறைந்த செலவில் நிறைந்த திருப்தியைத் தரக்கூடியவை இந்த ஓவியங்கள்!

## கடலைச் சுண்டல்

இது நவராத்திரி மாதம். பத்து நாட்களும் ஏதாவதொரு சுண்டல் செய்வீர்கள். அதிலும் சரஸ்வதி பூஜையன்று கொத்துக் கடலைச் சுண்டல் செய்வது எல்லார் வீட்டிலும் சர்வ நிச்சயம். கொத்துக் கடலை சுண்டலை இப்படிச் செய்யுங்களேன்! புரதச் சத்து உடலுக்குச் சரியான முறையில் கிடைக்கும்.

கொத்துக் கடலையை 12 மணி நேரம் ஊறவைக்க வேண்டும். ஊறும் நேரத்தில் இரண்டு முறை நன்றாகக் கடலையைத் தேய்த்துக் கழுவி புது நீர் ஊற்றி மீண்டும் ஊறவைத்தால் கடலையின் மேற்புற அழுக்கு நீங்கிப் பளிச்சென்று இருக்கும்.

இப்படி ஊறின கடலையை ஒரு துணியில் கட்டி எட்டு மணி நேரம் வைத்திருந்தால் கடலை குறுமுளையாக விட்டு இருக்கும். முளைத்த கடலையைக் குக்கரிலேயோ அல்லது தனியாகத் தண்ணீரிலேயோ உப்பு சேர்த்து வேகவைக்கவும். (குக்கரில் வைத்தால் மாவுபோல் வெந்துவிடும்) அவரவருக்குத் தேவையான விதம் போல் வேகவைத்துக்கொள்ளுங்கள். பிறகு வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, அரிந்த பச்சை மிளகாய், கறிவேப்பிலை இவைகளை தாளித்துக் கடலையையும் அத்துடன் போட்டு புரட்டித் தேங்காய் சேர்த்துச் சுண்டல் செய்யலாம். கடலை முளைக்கும்போது அதில் உள்ள புரதமும் சர்க்கரைச் சத்தும் விரைவில் உடலில் செரிக்க வைக்கும். இந்த முறையில் செய்தால் சின்னஞ் சிறு குழந்தைகளுக்கும் இக்கடலை எளிதில் சீரணமாகிவிடும்.

அடிக்கடி கொத்துக் கடலையைச் சாப்பாட்டில் சேர்த்துக் கொள்ளுங்கள். நவராத்திரி காலத்தில் மட்டும் அல்ல. வாரத்தில் இரண்டு நாட்களாவது சிரமம் பாராமல் இம்முறையில் சுண்டல் செய்து சாப்பிடுதல் உடலுக்கு நல்லது.

முளைகட்டிய விதத்தில் இக்கடலையைக் குழம்பு, கூட்டு வகைகளிலும் செய்து உண்ணலாம்.

-வசந்தா கோவிந்தன்



# ராசி பலன் (அக்டோபர் '81)



## மேஷம்

அமைதியாகவும், தெய்வ பக்தியான மன நிலையுடனும் இம்மாதம் கழியும். ஆனால் உங்களுடைய ஒதுங்கி நிற்கும் சுபாவத்தை மற்றவர்கள் அவர்களுக்குச் சாதகமாக எடுத்துக்கொள்வதை அனுமதிக்காதீர்கள். இதனால் உங்களுக்கு வரவிருக்கும் வாய்ப்புக்கள் தவறக் கூடும். பொருளாதார நிலைமை சுமுகமாக இருக்கும். கணவருடைய உறவினரின் வருகையில் குடும்பத்தில் குதூகலமான சூழ்நிலை ஏற்படும்.



## ரிஷபம்

உங்களுடைய பண வரவு இந்த மாதம் உங்களுக்குச் சாதகமாக இருக்கும். நீதிமன்றங்களின் மூலம் வரவேண்டிய பணமும் இம்மாதம் வர வாய்ப்பு உண்டு. இதனால் வாகன வசதியும், இட வசதியும் ஏற்படுத்திக் கொள்ள நீங்கள் செய்யும் முயற்சிகள் வெற்றி பெறும். இளம் பெண்களுக்கு வாழ்க்கையில் சந்தோஷமான நிகழ்ச்சிகள் நிச்சயமாகும்.



## மிதுனம்

இந்த மாதத்தில் இரண்டாவது வாரத்தில் நீண்ட நாட்களாக இழுபறியாக இருந்த திட்டங்கள் முடியும். அதனால் பண வரவும், புகழும் ஏற்படும். கலைஞர்களுக்கும் சிறந்த எதிர்காலம் ஏற்பட, இம்மாதத்தில் நிறைவேறும் திட்டங்கள் துணை புரியும். ஆனால் உடல்நிலையைக் கவனமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்.



## கடகம்

சமூகத் துறையிலும், அரசியல், கலை, இலக்கியம் ஆகியவற்றிலும் சம்பந்தப்பட்டவர்களுக்கு இம்மாதம் புதிய திருப்பம் ஏற்படும். புதிய பொறுப்போ, மேற்பதவியோ கிடைக்க அதிக வாய்ப்புண்டு. பண வரவு சுமுகமாக இருக்கும். உங்களுடைய திட்டங்களை மற்றவர்களிடம் வெளிப்படுத்தாதீர்கள். இதனால் வெற்றி வாய்ப்புத் தவற வாய்ப்புண்டு.



## சிம்மம்

உங்களுடைய பேச்சுக்களை மற்றவர்கள் தவறாகப் புரிந்து கொள்வதால், குடும்பத்திலோ அலுவலகத்திலோ மனக் கசப்பு ஏற்படக் கூடும். அதனால் பேசுவதை சிந்தித்து அளந்து பேசுவது நலம். குடும்பத்தில் விருந்தினர்களின் வரவினால் செலவினங்கள் ஏற்படும். எல்லாவற்றுக்கும் முன்ஜாக்கிரதையுடனும், திட்டமிட்டும் நடந்து கொண்டால் நிம்மதியாக இருக்கலாம்.



## கன்னி

நீண்ட நாட்களாக இருந்து வந்த தொடர்பு ஒன்று இம்மாதத்தின் இறுதி வாரத்தில் முடிவடையும். இதனால் தீமைகளை விட, நன்மைகளே அதிகமாக இருக்கும். இதுவரை ஏற்பட்டு வந்த தயக்கங்களும், தடங்கல்களும் நீங்கி, நீங்களாகவே துணிவுடன் முடிவெடுக்கக் கூடிய திறன் உங்களுக்கு ஏற்படும். பொருளாதார நிலையிலும் இனி படிப்படியாக முன்னேற்றம் ஏற்படும்.



## துலாம்

வியாபாரத் துறையிலும் அரசு அலுவலகத் துறையிலும் நீங்கள் திட்டமிட்ட வேலைகளை நிறைவேற்ற இம்மாதம் ஏற்றதாக அமையும். உங்களுடைய உறவினர்களால் நல்ல உதவிகளும் கிடைக்கும். கணவருடைய முயற்சியினாலும் பண வரவு ஏற்படும். குழந்தைகளால் சமூகத்தில் நல்ல பெயர் கிடைக்கும்.



## விருச்சிகம்

இதுவரை உங்களுடைய முயற்சிகளும், பணிகளும் விமரிசிக்கப்படாமல் இருந்தாலும், இனிமேல் நல்ல விதமாகவோ, வேறு விதமாகவோ விமரிசிக்கப்படும். பொது மக்கள் அறிந்த நபராக மாறுவதற்கு வாய்ப்புக்கள் உள்ளது. வெளியூர்ப் பயணங்கள் ஏற்படும். புதிய நண்பர்கள் ஏற்பட்டுஅவர்களால் வாழ்வில் முன்னேற்றமும் ஏற்படும்.



## தனுசு

உங்களுடைய அதிர்ஷ்டமும், உழைப்பும் இணைந்து தந்த பலன்கள் நல்ல முன்னேற்றத்தைக் கொடுக்கும். தெய்வ அனுகூலம் உங்களுக்கு அதிகமாகக் கிடைக்கும். புனிதப் பயணங்கள் மேற்கொள்ளவும் தயாராக இருங்கள். கணவரால் சந்தோஷமும், அமைதியும் கைகூடும். இல்லத்தில் இருந்து சிறு சிறு பூசல்கள் கூட மறைந்து சுமுகநிலை ஏற்படும்.



## மகரம்

அடுத்து வரும் சில மாதங்கள் தொல்லை நிறைந்ததாகவே இருக்கும். மிகவும் பொறுமையுடனும், சகிப்புத் தன்மையுடனும்நடந்து கொண்டால் ஏற்படும் சோதனைகள் தீரும். தெய்வ பக்தி இவைகளிலிருந்து எளிதாக விடுபடப் பெரும் உதவியாக இருக்கும். செலவினங்கள் இருந்தாலும் அதற்கேற்ற வருமானம் இருப்பதால் பொருளாதார நிலை பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.



## கும்பம்

கடந்த சில மாதங்களாக இருந்து வந்த சஞ்சலங்கள், இம்மாதம் கிடைக்கப்போகும் இனிய செய்தியினால் மறைந்துவிடும். இதுவரை இருந்து வந்த கஷ்டங்கள் மாறி சுகத்திற்கான முன்னேற்றங்கள் படிப்படியாக ஏற்படும். உங்களுடைய இழப்புக்களை ஈடு செய்யும் வகையில் பலன்கள் நன்மையாகவே இருக்கும். தெய்வ நம்பிக்கையே இப்போது உங்களுக்குத் தேவை.



## மீனம்

உங்களுடைய முடிவெடுக்கும் திறனும், மேலதிகாரிகளின் ஆதரவும் வாழ்க்கையில் மேம்படுவதற்கு மிகவும் உதவியாக இருக்கும். வியாபாரத்தையோ மற்ற எந்த சொந்த முயற்சியையோ ஸ்திரப்படுத்திக் கொள்ளவும், விரிவுபடுத்தவும் இம்மாதம் ஏற்றதாக அமையும். இளைஞர்கள் முகவும் ஜாக்கிரதையாக முடிவெடுக்க வேண்டிய நேரமிது. வரன் தேடும் பெண்களுக்கு நல்ல வரன்கள் குதிரும்.

# 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



## 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

### இரும்புச்சத்து அதிகமுள்ள ::பாரெக்ஸ் கொடுங்கள்

''தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது.''

—Dr. Subhash C. Arya ''Infant & Childcare for the Indian mother''

**டாக்டர்கள் ::பாரெக்ஸ். சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப் பட்டது ::பாரெக்ஸ்— குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப்பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும் உடல் ஆரோக்கியத்திற்கும் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக அடங்கியது—::பாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ::பாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-203 TAM

# ஸ்ரீகனகதாசர்

— ஸ்ரீவேணுகோபாலன் —

கிருஷ்ண 'தேவராயர் காலம். விஜய நகர ராஜ்யத்தில் படா என்று ஊர். (கர்நாடகத்தில் தார்வார் மாவட்டம்) வீரப்பா என்பவர் அந்த ஊரின் கிராம அதிகாரி. இடைக் குலத்தைச் சேர்ந்தவர். அவர் மனைவி பாசம்மா.

சுகமாக வாழ்ந்து வந்த இவர்கள் வாழ்க்கையில் ஒரு குறை. அவர்களுக்குக் குழந்தை இல்லை.

இதற்காகத் திருப்பதிக்கு யாத்திரை சென்றார்கள். ஏழுமலையானைத் தரிசித்தார்கள். பூஜை முதலியவைகளை முறைப்படி முடித்தார்கள். தங்களுக்குப் புத்திர பேறு அருளுமாறு இறைவனை வேண்டினார்கள்.

ஊருக்குத் திரும்பியதும் பாச்சம்மா கருத்தரித்தாள்.

உரிய காலத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

திம்மப்பா என்று அவனுக்குப் பெயர் வைத்தார்கள்.

பையன் விளையாட்டுப் புத்தியோடு வளர்ந்தான். நீச்சலடிப்பது, மல்யுத்தம் போடுவது, ஊரில் எல்லா அட்டகாச விளையாட்டுக்களிலும் ஈடுபடுவது திம்மப்பனின் வழக்கம்.

படிப்பு அதிகம் ஓடவில்லை. ஏதோ படிக்க வேண்டுமே என்பதற்காக கற்றுக் கொண்டான்.

திம்மப்பா வளர்ந்து வரும் காலத்தில் முதலில் தந்தை இறந்தார். அதை அடுத்து தாயும் பரமபதம் அடைந்தாள்.

தந்தையின் வரி வசூலிக்கும் ஊழியம் திம்மப்பாவிடம் வந்தது.

எந்த விதக் கவலையில்லாமலும் தன் கடமைகளைச் செய்து, சகாக்களோடு அரட்டை அடித்துப் பொழுதைப் போக்கி வந்தான் திம்மப்பா.

ஒரு நாள் திம்மப்பாவின் வயலில் கிணறு வெட்ட வேண்டி வந்தது.

ஆட்களோடு குழி தோண்ட ஆரம்பித்தான்.

திம்மப்பா கடப்பாறையை ஓங்கி அடித்த போது கணங் என்று சப்தம் கேட்டது.

தோண்டிப் பார்த்தால் பெரிய பானை ஒன்று கிடைத்தது.

ஆவலோடு உள்ளே பார்க்க அவ்வளவும் பொன் நாணயங்கள்.

திம்மப்பாவுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. வீட்டுக்குக் கொண்டு போய்ப் பத்திரப்படுத்தினான்.

எனினும் விஷயம் ஊருக்குத் தெரிந்து விட்டது.

பொன் குவியலுக்கு அதிபதி ஆகிவிட்டதால் அவரை 'கனக நாயக்கன்' என்று அழைத்தார்கள்.

கனக நாயக்கன் தனக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு ஒரு கோயிலைக் கட்ட விரும்பினான்.

ஊரில் ஓர் இடிந்த கோயில் இருந்தது. அதில் ஆதி கேசவர் சிலை ஒன்று கேட்பாரற்றுக் கிடந்தது.

பக்கத்தில் சுகிநேனே என்ற கிராமம் இருந்தது. அந்த ஊரில் ஆதிகேசவருக்குப் பெரிய கோயில் ஒன்று கட்ட ஆரம்பித்தான்.

ஆலயம் அழகாக அமைந்தது.

கனக நாயக்கன் ஒரு கோயிலைக் கட்டினானே தவிர கடவுள் மீது பக்தி கித்தி எதுவும் கிடையாது. பணம் கிடைத்ததால் ஒரு புண்ணிய காரியம் செய்ய வேண்டும் என்ற நோக்கில்தான் கோயிலைக் கட்டினான்.

மற்றபடிக்கு மீண்டும் தன் ஒழுங்கற்ற வாழ்க்கையையே வாழ ஆரம்பித்தான்.

ஒரு நாள் இரவு.

கனக நாயகன் தூங்கிக்கொண்டிருக்கும் போது ஒரு கனவு வந்தது.

கறுப்பான உருவம் ஒன்று அவன் கண் முன் தோன்றியது:

"கனகா!" என்று அது அழைத்தது.

கனக நாயகன் திடுக்கிட்டான்.

"கனகா! என்னுடைய தாசன் (வேலைக்காரன்) ஆக இருப்பாயா?" என்று கேட்டது உருவம்.

"ஊஹூம்" என்று மறுத்துப் பேசினான் கனக நாயகன்.

கண் விழித்தபோது ஆதிகேசவக் கடவுள் தான் அவ்விதம் வந்து அவனிடம் கேட்டதாகப் புரிந்து கொண்டான்.

"ஊஹூம்! அதெல்லாம் மாட்டேன்" என்று உறுதியோடு மனத்தில் கூறிக்கொண்டான் அவன்.

அதன் பிறகு பலமுறை அதே கனவு வந்தது. ஒவ்வொரு முறையும் ஆதிகேசவர் அவன் முன்னால் கறுத்த உருவத்தோடு தோன்றி, "என்னுடைய தாசன் ஆவாயா" என்று கேட்க, அவனும் தீர்மானத்தோடு "முடியாது" என்று கூறிவிட்டான்.

ஒரு சமயம் நாட்டில் ஒரு யுத்தம் நடந்தது. அதில் மன்னனை கனக நாயகனும் சேர வேண்டி வந்தது.

யுத்த களத்துக்கு வீராவேசமாகச் சென்றான் அவன்.

சண்டை மும்முரமாக நடந்தது.

கனக நாயகன் குதிரை மீது ஏறிப் போரிட்டான்.

சண்டை நடந்து கொண்டிருக்கும்போது யாரோ ஒருவன் கனக நாயகனது முதுகில் குத்திவிட்டான்.

பெருத்த வலியோடு கனகன் குதிரை மீதிருந்து சரிந்து விழுந்தான்.

அந்தக் கணமே நினைவை இழந்தான்.

துரதிர்ஷ்ட வசமாக கனகநாயகன் சேர்ந்திருந்த கட்சி தோல்வியுற்றது. செத்தவர்கள் போக எஞ்சியவர்கள் ஓட்டம் பிடித்தார்கள். கனகநாயகன் களத்தில் விடுபட்டான்.

கனகன் சாகவில்லை.

வெகு நேரம் கழித்து அவனுக்கு நினைவு வந்தது.

வந்த கணத்திலேயே வலது காயத்தின் வலியும் சுரீர் என்று முதுகில் உரைத்தது.

காந்தல் தாங்காமல் முனகியவாறு அவன் தத்தளித்தான்.

அப்போது ''கனகா!'' என்று குரல் கேட்டது.

மெள்ளத் திரும்பினான்.

அந்தக் கறுப்பு உருவம் அவன் முன்னால் நின்றது.

''கனகா, எனக்குத் தாசன் ஆவாயா?'' என்று கேட்டது.

கனகனுக்குக் கோபம் சீறி வந்தது.

''ஏய்! உனக்கு வேறே வேலை இல்லை? இந்த நேரத்திலே வந்து கேட்கிறியே! நான் சாகக் கிடக்கிறேன்! போய்யா!'' என்றான் அவன்.

உருவம் அதைரியம் அடையவில்லை. ''கனகா! உன்னைச் சாவிலிருந்து காப்பாற்றிவன் நான்தான். இப்போது நீ என்னுடைய தாசன் ஆகலாம்.''

''ஏய்யா! என்னைப் போட்டு இளவு எடுக்கிறியே! வேறு யாராவது கிடைக்கலியா, உனக்கு?'' என்றான் கனகன்.

''முன்னால் நீ எனக்கு தாசனு சேவை பண்ணியிருக்கே! இப்பவும் பண்ணப் போறே!'' என்றது உருவம்.

கனகனுக்குக் கோபம் மீறியது.

''ஏய், என்னை மரணத்திலேர்ந்து காப்பாத்தினேன்னு சொன்னே! இப்போ முதுகிலே வலி பிராணன் போறது! அதுக்கு உன்னாலே என்ன செய்ய முடியும்?'' என்றான்.

''சரி, உன்னைக் குணமாக்கி பழையபடி அழகும் ஆரோக்கியமும் தந்தால் நீ எனக்கு தாசன் ஆவாயா?'' என்று கேட்டது உருவம்.

''ஆகட்டும்'' என்றான் கனகன்.

உருவம் அவனை லேசாகத் தொட்டது.

அந்தக் கனக நாயகனது வலியும் காயமும் மறைந்து முன்னால் இருந்த ஆரோக்கியமான உருவம் உண்டாகியது.



உடம்பு இலகுவாயும், ஒளி பொருந்தியதாகவும் மாறிற்று.

ஆச்சரிய பட்டு அவன் அந்த உருவத்தைப் பார்க்க, அதைக் காணவில்லை. திடீரென்று மாயமாகி விட்டது.

கனகநாயகனின் கண்களில் நீர் வழிந்தது. ''ஆதிகேசவா! இத்தனையும் உன் லீலையா?'' என்று கூறினான் அவன்.

## அப்பள பஜ்ஜி

விருந்தினர் வந்துவிட்டார்களா? பதற்றப் படவேண்டாம். கறிகாய்கள் வாங்க யாரும் இல்லையே என்று கையை உதற வேண்டாம். கடலை மாவும், அரிசி மாவும் கைவசம் உள்ளதா? பஜ்ஜியைப் போடும் பக்குவத்தில் அதாவது 2 பங்கு கடலை மாவும் ஒரு பங்கு அரிசி மாவும், சிட்டிகை சமையல் சோடா, தேவையான உப்பு, மிளகாய்த் தூள், பெருங்காயத் தூள் போன்றவற்றைப் போட்டு கெட்டியாகக் கலந்து கொள்ளவும். கறிகாய்க்குப் பதில் அப்பளத்தை எத்தனை டிஸைனில் கத்தரித்துக்கொள்ள முடியுமோ அத்தனை டிசைனில் கத்தரித்துக் கொண்டு பஜ்ஜி மாவில் தோய்த்து பஜ்ஜி போடவும். வித விதமான டிஸைனில் பஜ்ஜி தயார். விருந்தினர்களும் அதைச் சாப்பிட்டுவிட்டு ஆச்சரியப்படுவார்கள்.

- மாலா சக்ரபாணி



ஊரை நோக்கிச் சென்றான். உடம்பில் பக்தி திடீரென்று பரவி அவன் மெய்யைச் சிலிர்க்க வைத்தது.

நேராகக் கோவிலை நோக்கிச் சென்றான். அப்போது நடு நிசி.

கோயிலின் சன்னிதி பூட்டிக் கிடந்தது.

கனகன் இதயத்தில் பக்தி கொந்தளித்தது. உடனே சன்னிதியை நோக்கி அவன் பாட ஆரம்பிக்க, அற்புதமாக கீதம் ஒன்று தானாக உற்பத்தியானது.

பாகிலனு தேகேது லேவேயனு
கோடு ஹரியே,
கூகிதரு த்வனி கேளகில்லவே
நரஹரியே!

''கதவைத் திறந்து உமது சேவையை எனக்கு அளியுங்கள்;

ஹரியே! எனது வேட்கையான குரலை நீங்கள் கேட்கவில்லையோ?''

அவர் பாடி முடியும்போது சன்னதிக் கதவுகள் மணியோசைகளோடு தாமாகத் திறந்தன.

உள்ளே ஆதிகேசவர் முன்னால் தானாக தீபாராதனை நடந்தது.

கனக நாயகனால் உணர்ச்சிகளைத் தாங்க முடியவில்லை. பக்தி ஒரு காட்டாறு போல் பாய்ந்து வந்து அவனை மூழ்கடித்தது.

உள்ளே பார்த்தான்.

அங்கே சங்கு சக்கரம் தாங்கிய ஆதிகேசவர் புன்னகையோடு நின்று கொண்டிருந்தார்.

கனகனின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் உருகியது.

அப்போது ஆதிகேசவர் அவனைப் பார்த்து ''கனகா! எனக்கு நீ தாசன் ஆவாயா?'' என்று அதே கேள்வியைக் கேட்டார்.

''நிச்சயம் ஸ்வாமி! அடியேன் தங்களது தாசன்தான். என்னுடைய மாயைகள் ஒழிந்தன. என் மன இருள் அகன்றது. என் பெருமையும் அகந்தையும் மறைந்தன. இனி உனக்குச் சேவை செய்வதுதான் என் ஒரே வேலை!'' என்றான் கனகன்.

அதைக் கேட்ட ஆதி கேசவர் புன்னகை செய்து,

''கனகா! எனக்குத் தாசன் ஆவது அவ்வளவு எளிதன்று. நீ உன் உடைமைகளையெல்லாம் துறக்க வேண்டி யிருக்கும்'' என்றார்.

உடனே கனகர் மெய் சிலிர்த்தது. தமது திருநாவால் பாடல் ஒன்று பாடினார்.

தோரேது ஜீவிஸபஹுதே, ஹரி, நின்னசரண
பரிது மாதேகின்னு அரிது ஹேளுவேனய்யா!

''ஹரி! உமது பாத கமலங்களை மறந்து யாராவது வாழ முடியுமோ? இது வெறும் வார்த்தைகள் அல்ல. அறிந்து உணர்ந்து தான் இதை நான் சொல்கிறேன்.''

ஆதிகேசவருக்கு கனகர் மீது மிகவும் சந்தோஷம் ஏற்பட்டது. அவரைத் தமது தாசராக ஏற்றுக் கொண்டார்.

## கிருணி கீர்

கிருணிப்பழ (வடநாட்டில் கர்பூஜ் என்பார்கள்) சீசனில் பழத்தைச் சாப்பிட்டுவிட்டு நடுவில் இருக்கும் விதைகளை வீணாக்காமல் அவ்வப்போது சேமித்துத் தண்ணீரில் நன்கு அலசி எடுத்து வெய்யிலில் காயவைக்கவும். உள்ளிருக்கும் பருப்பை எடுக்க ஒவ்வொரு விதையாக உரித்தெடுப்பது கஷ்டம். ஆதலால் காயவைத்த விதைகளை அப்படியே இடித்தோ, அல்லது மிக்ஸியில் அரைத்துப் பொடியாக்கியோ மெல்லிய சல்லடையில் சலித்தால் அரைபடாத தோலும் அதன் துகள்களும் நீங்கிவிடும். மாவு போன்று சலித்தெடுத்த பொடியைக் காற்றுப் புகாதவாறு பாட்டிலில் போட்டு மூடி வைக்கவும்.

அரை லிட்டர் பாலுக்கு மூன்று டீஸ்பூன் கிருணி விதைப் பொடியையும் 100 கிராம் சீனியையும் கலந்து கால் லிட்டராக வற்றும் வரை காய்ச்சவும். பிறகு இறக்கி, சூடு ஆறி, மிதமான சூட்டில் இருக்கும்போது அரை டீஸ்பூன் பாதாம் எஸ்ஸென்ஸை விட்டுக் கலக்கி ஃப்ரிஜ் வைத்திருப்பவர்கள் ஃப்ரிஜில் உறையவைத்தும், ஃப்ரிஜ் இல்லாதவர்கள் ஐஸ் கட்டியை உடைத்துப் போட்டு ஜில்லென்றும் சாப்பிடலாம்.



'பாதாம் கீர் போன்ற' ருசியுள்ள, சத்துள்ள கிருணி கீர் தயாரிக்க ஆகும் செலவு மிகவும் குறைவு. தவிர இதன் பவுடரை பாயஸம், கீர் போன்ற இனிப்புப் பதார்த்தங்களோடு ஒரு டீஸ்பூன் சேர்த்துச் சமைத்தால் அடர்த்தியாகவும் சுவையாகவும் இருக்கிறது.

- திருமதி பாத்திமுத்து சித்திக்

---

அன்றிலிருந்து கனக நாயகருக்கு கனக தாசர் என்ற பெயர் வழங்கலாயிற்று.

ஆதிகேசவர் கனகரை நோக்கி, "கனகா! நீ சுவாமி வியாச ராயரிடம் போய் அவரைக் குருவாக ஏற்றுக்கொள்!" என்று கூறினார்.

கனகதாசர் உடனே வியாசரைத் தேடிச் சென்றார்.

அவர் சென்றபோது வியாச ராயர் அருகில் அவரது கீர்த்தி பெற்ற சீடர்களான புரந்தர தாசரும் வாதிராஜரும் இருந்தார்கள்.

கனகதாசர் விதிர் விதிர்த்து, "குரு தேவா!" என்று கைகூப்பினார்.

"யார் அங்கே?" என்றார் வியாச ராயர்.

"நான்தான், தங்கள் அடிமை!" என்றார் கனகதாசர்.

"ஓகோ! தங்கப் பொக்கிஷம் கண்டெடுத்த கனக நாயகனா!"

"இல்லை சுவாமி! அடியேன் வெறும் கனகன், மாடு மேய்ப்பவன்."

"ஏன் வந்திருக்கிறாய்?"

"ஆதிகேசவர் என்னைத் தங்களிடம் அனுப்பினார், மந்திரோபதேசம் பெறுவதற்காக."

"மாடு மேய்ப்பவனுக்கு என்ன மந்திரம் வேண்டிக் கிடக்கிறது? எருமைதான் மந்திரம்."

"நன்றி குருவே!"

கனகதாசர் அந்த ஆசிரமத்திலேயே தங்கிக்கொண்டு "எருமை! எருமை!" என்று தீவிரமாக ஜபிக்க ஆரம்பித்தார்.

பக்திப் பெருக்கோடு அவர் தவம்செய்தார். ஒருபெரியஎருமைஅவர்முன்னால்தோன்றியது.

அதை அழைத்துக் கொண்டு குரு முன்னால் வந்தார். குரு தமது சீடனின் மகிமையை அறிந்தார்.

உடனே அவர் அந்த எருமையை நோக்கி ஒரு பாறை ஒன்றை நகர்த்தும்படி பணித்தார். அந்தப் பாறை ஒரு நீர் ஓட்டத்தைத் தடுத்துக் கொண்டு நின்றது.

எருமை அந்தப் பாறையை நகர்த்த நீர் ஓட்டம் எளிதாக விரைந்தது.

(இந்த நிகழ்ச்சி நடந்த இடம் ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள மதனப்பள்ளி தாலுகாவில் இருக்கிறது. இன்றும் அதற்கு 'கனக துப்' என்று பெயர் வழங்குகிறது.)

இதன் பின்னர் வியாச ராயர் கனகதாசரைத் தமது ஆசிரமத்தில் சேர்த்துக் கொண்டார்.

அவருக்கு மந்திர உபதேசம் செய்து தீட்சை வழங்கினார்.

கனகதாசர் பின்னர் இந்தியா முழுதும் பக்தியைப் பிரசாரம் செய்து திரிந்தார்.

தமது திங்குரலில் நூற்றுக் கணக்கான பாடல்களை இயற்றி நாட்டு மக்களை பக்தி மயமாக மாற்றினார். இந்த மகான் வாழ்ந்த காலம் 16 ஆம் நூற்றாண்டு.




22 வயது நிரம்பிய மாநிறமுள்ள எஸ். எல். ஸி. படித்த அழகிய பெண்ணுக்கும் 29 வயது மத்திய சர்க்கார் உத்யோகம், மாத வருமானம் 900- 26 வயது நிரம்பிய மாநில சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கும் சகோதரர்களுக்கும் தகுந்த மணமக்கள் தேவை. விசால மனப்பான்மை கொண்ட நற்குடும்பத்தைச் சேர்ந்தவர்களிட மிருந்து கடிதத் தொடர்பு வரவேற்கப்படுகிறது. பெண் கொடுத்து பெண் எடுப்பதும் ஆலோசிக்கப்படும். சைவ வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்ருல் நலம். மற்றவர்களும் தொடர்பு கொள்ளலாம். பெற்ருேர் கலப்பு மணம் செய்து கொண்டவர்கள்.

## பெட்டி எண் 86

சென்னையில் மத்திய அரசில் லோயர் டிவிஷன் கிளார்க்காக வேலை செய்யும் பையனுக்குப் பெண்ணின் தகப்பனாரிடமிருந்து ஜாதகம் வரவேற்கப்படுகிறது. பையன் விவரம்: எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ், வாத்தியமா ஐயர், வயது 29. ஹரித கோத்ரம் அவிட்டம். சம்பளம் ரு. 620. பெண் வேலையில் இருப்பதை விரும்புகிருேம். உப பிரிவுகளும் ஏற்கப்படும்.

## பெட்டி எண் 87

பத்தாவது படித்த 30 வயதுடைய வீட்டை அழகாக நன்கு நிர்வாகம் செய்யக் கூடிய நல்ல குடும்பத்தைச் சேர்ந்த செங்குந்த முதலியார் பெண்ணுக்கு மணமகன் தேவை. இரண்டாம் தார வரன்களும் விண்ணப்பிக்கலாம்.

## பெட்டி எண் 88

பி. ஏ. படித்த, பம்பாயில் வேலையாக இருக்கும் அழகும், பண்பும் உள்ள 25 வயதுப் பெண்ணுக்கு கௌசிக கோத்ரம் இல்லாத தெலுங்கு அல்லது தமிழ் அய்யர் வகுப்பு மணமகன் தேவை. பெண் 5' 2''. ரேவதி நட்சத்திரம்.

## பெட்டி எண் 89

சென்னையில் உள்ள அழகும், நல்ல சிவந்த நிறமும், 5 அடி 2 அங்குல உயரமும் உடைய பி.ஓ.எல். படித்துள்ள, வேலையில் இல்லாத, ஆரோக்கியமான, குடும்பப் பாங்கான 30 வயது, கௌசிக கோத்ரம் ஐயங்கார் பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள ஐயர் அல்லது ஐயங்கார் வரன் தேவை. நல்ல வசதியில் உள்ள குழந்தைகள் இல்லாத, மனைவியை இழந்த 45 வயதுக்குட்பட்ட வரன்களும் விண்ணப்பிக்கலாம். 10 பவுன் நகை போட்டு 2 கிலோ வெள்ளிப் பாத்திரம் கொடுத்து, வரதட்சிணை, இதர செலவுகள் உட்பட 10 ஆயிரத்துக்குள் திருமணம் நடத்தித் தரப்படும்.

## பெட்டி எண் 90

வாணிய செட்டியார் குலத்தைச் சேர்ந்த பி.ஏ. பி.ஈ.டி. பட்டதாரி, 30 வயது கார்த்திகை நட்சத்திரம், நல்ல நிறம் 155 சி.எம். உயரம், நல்ல உத்தியோக அமைப்புடன் கூடிய பெண்ணுக்கு அதே குலம், நல்ல உத்தியோகத்தில் இருக்கும் மணமகன் தேவை. ஜாதகத்துடனும் புகைப்படத்துடனும் தொடர்பு கொள்ளவும்.

## பெட்டி எண் 91

தனியார் கம்பெனியில் வேலை செய்யும் பாரத்வாஜ கோத்ரம் பூசம் நட்சத்திரம் ஸ்மார்த்தாள் பிராமண (அய்யர்) வகுப்பைச் சேர்ந்த 29 வயது எம். ஏ. (இங்கிலிஷ் லிட்டரேச்சர்) பாஸ் பண்ணின பெண்ணுக்கு படித்த, உத்யோகமுள்ளவர்களிட மிருந்து ஜாதகமும், மற்ற விவரங்களும் போட்டோவுடன் வரவேற்கப்படுகிறது. பெண் நல்ல நிறம். 5, 5'' உயரம். ரு. 1500 மாத சம்பளம்.

## பெட்டி எண் 92

கர்கி கோத்ரம் வடகலை ஐயங்கார் உத்திரட்டாதி நட்சத்திரம், 36 வயதுள்ள தனியார் கம்பெனியில் ரு. 650 வருமானத்தில் வேலை பார்க்கும் வரனுக்கு 32 வயதிலிருந்து 34 வயதுள்ள வேலையில் இருக்கும் மணமகள் தேவை.

அன்னாரின் தங்கையான ரேவதி 3ம் பாதம் எஸ். எஸ். எல். ஸி. படித்த 30 வயதுப் பெண்ணுக்கு 34 லிருந்து 36 வயதுள்ள மணமகன் தேவை. இக் கடிதம் கண்டவுடன் விவரம் தெரிவிக்கவும்.

## பெட்டி எண் 93

25 வயதுள்ள சோழிய வெள்ளாளர், சைவப் பிள்ளை வகுப்பைச் சேர்ந்த எஸ். எஸ். எல். ஸி., டைப் ரைட்டிங் ஹையர், சுருக்கெழுத்து லோயர் பாஸ் செய்த ஓய்வு பெற்ற உயர்ந்த கெஜட் பதிவு பெற்ற அதிகாரியின் பெண்ணுக்கு நல்ல குணம், நடத்தை, படிப்பு வேலையில் உள்ள நல்ல குடும்ப மணமகன் தேவை. பெண் வேலை பார்க்கவில்லை. 155 செ.மீ. உயரம், சிகப்பு, குடும்பப் பாங்கு நிறைந்தவள். சைவ வெள்ளாளர் பிள்ளை, முதலியார் மாப்பிள்ளை தேவை. குறைந்தது எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து சொந்தத் தொழில் செய்யும் வசதியுள்ளவராகவும் இருக்கலாம். மணமகன், மணமகனின் பெற்

றோர்களின் விவரங்களுடன் ஜாதக நகலோடு தொடர்பு கொள்ளவும்.

### பெட்டி எண் 94

பிராமணன். வயது 65, மாத வருவாய் ரூ. 500. மனைவியை இழந்தவர். பொறுப்புகள் முடிந்தவர். தனிமையைப் போக்கி, தோழமை பெற மனைவி தேவை. சுமாரான மாத வருவாய் உள்ள, தனிமை கசந்து, தோழமை விரும்புகிற, சந்தானம் விரும்பாத, வயதான பெண்கள் (விதவைகள் உட்பட) தொடர்பு கொள்ளலாம். ரூ. 500ல் 2 பேர் வீட்டு வாடகை கொடுத்து நகரில் சௌகரியமாக வாழ முடியாது. கிராம வாழ்க்கைக்குத் தயார் என்றால் மாத வருவாயே இல்லாத பெண்களும் தொடர்பு கொள்ளலாம்.

### பெட்டி எண் 95

பெங்களூரில் அரசாங்கப் பொதுத் துறை நிறுவனத்தில் 1000 ரூபாய் ஊதியம் பெறும் பிராமண ப்ரஹசரண வகுப்பைச் சேர்ந்த உத்திரட்டாதி (3ம் பாதம்) பாரத்வாஜ கோத்திரத்து 32 வயது பெண்ணுக்கு வரன் தேவை. பெங்களூரில் நல்ல நிலையில் பணி புரிபவர்கள் விரும்பப்படுகிறார்கள். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.''

### பெட்டி எண் 96

நல்ல குடும்பப் பொறுப்புள்ள, குடும்ப வேலைகள் நன்கு அறிந்த சுத்த வெலநாடு தெலுங்கு பிராமண பாரத்வாஜ கோத்திரம், ஜேஷ்டா நட்சத்திரம் வயது 30 நல்ல நிறமுள்ள ஒரே பெண்ணுக்கு அதே ஜாதியில் நல்ல வேலையில் உள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பிரம்மச்சாரி வரன் தேவை. பெண் வேலையில் இல்லை. 8வது வரை படித்திருக்கிறாள். திருமணம் எளிய முறையில் தக்கபடி நடத்தப்படும். விவரங்களுக்கு எழுதவும்.

### பெட்டி எண் 97

கௌசிக கோத்திரம், பூரட்டாதி நட்சத்திரம், எஸ்.எஸ். எல். சி., வடகலை அய்யங்கார். 24 வயதுள்ள நல்ல நிறமுள்ள பெண்ணுக்கு அதே பிரிவில் மாத வருமானம் ரூ. 60 பெறும் நல்ல வரன் தேவை. பெற்றோர்கள் ஜாதக நகல் விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும்.

### பெட்டி எண் 98

நல்ல அழகும் ஒன்றரை லட்சம் சொத்தும் மாதம் ரூ. 1500 வருவாயுமுள்ள சொந்த டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட்டும் உள்ள பி.எஸ்.ஸி படித்த 27 வயது இந்து சோழிய வெள்ளாளப் பிள்ளை மகனுக்கு அதே வகுப்பில் அல்லது வேறு உட்பிரிவுகளில் அழகும், எஸ்.எஸ்.எல்.சிக்குக் குறையாத படிப்பும், வசதியும் உள்ள பெண் தேவை.

### பெட்டி எண் 99

கேரளா ஸ்டேட் ரோட் ட்ரான்ஸ்போர்ட் கார்ப்பரேஷனில் திருவனந்தபுரத்தில் வேலை செய்யும் (மாத வருமானம் 750) 27 வயது சாம்பவர் வகுப்பைச் சேர்ந்த வாலிபருக்கு வசதியுள்ள அல்லது வேலையில் உள்ள மணப்பெண் தேவை. எந்த ஜாதிப் பெண்ணும் சம்மதம்.

### பெட்டி எண் 100

தெலுங்குப் பிராமணர், முலகநாடு. கௌண்டின்ய கோத்திரம், சித்திரை (30) பொது நிறம், 4' – 10'', மெட்ரிக், ஹோமியோ, தற்போது விதேச மொழி கற்கும் பெண்ணுக்கும், ரோஹிணி, (28), சிவப்பு 5', பி.ஏ., என்.ஐ.எஸ். கோச், டில்லி மத்திய உள்நாட்டமைச்சு அலுவலகத்தில் பணிபுரியும் சகோதரிக்கும்; தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் அனுஷம் (32) பொது நிறம், 5' – 2'', பி. காம் சகோதரனுக்கும் மணமக்கள், மணமகள் தேவை. பிராமண வகுப்பார் விண்ணப்பிக்கவும். தகப்பனார் வெளி நாட்டிலாகாவில் பணி புரிகிறார்.

### பெட்டி எண் 101

34 வயது நிரம்பிய காஸ்ய கோத்ரம் திருவோண நட்சத்திரம். சோழியா, தொலைபேசி இயக்குனர்,மாதம் ரூ. 725 வாங்கும், உயரமுள்ள (5' 10'') பையனுக்கு அழகும் குணமும் வாய்ந்த, மத்திய சர்க்கார் அலுவலகத்திலோ, தேசிய ம ய மா க் க ப் பட்ட வங்கியிலோ, அல்லது சர்க்கார் உயர் நிலைப் பள்ளியில் ஆசிரியராகவோ பணியாற்றும் பெண் தேவை.

### பெட்டி எண் 102

கௌசிக கோத்ரம் வடமாள் கிருத்திகை நட்சத்திரம் எஸ்.எஸ்.எல்.சி. படித்துள்ள குடும்பப் பாங்கான 20 வயதான பெண்ணுக்கு தகுந்த வேலையில் உள்ள பட்டதாரி மணமகனும், பி.ஏ. பாங்கில் கிளார்க் ஆக 25 வயதுள்ள (உத்திரம் நட்சத்திரம்) பெண்ணின் மூத்த சகோதரனுக்கு மணமகளும் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் அனுப்பவும்.

### பெட்டி எண் 103

பி.எஸ்.ஸி. பி. ஈ.டி. படித்து, ஆசிரியராகப் பணிபுரியும் மாதம் ரூ. 750 வருமானம் பெறும் முதலியார் வகுப்பைச் சார்ந்த (ஆற்காடு, வேலூர், பூந்தமல்லி முதலியார் வகுப்பைச் சார்ந்தவர்களாக இருக்க வேண்டும்.) 32 வயதுள்ள வாலிபருக்குப் பட்டதாரியான, அரசாங்க உத்தி

பிரோகத்தில் உள்ள சற்று அழகான பெண் ணின் ஜாதகம் தேவை.

## பெட்டி எண் 104

பாரத்துவாஜ கோத்ரம், பிரேசர்ணம், பூசம் நட்சத்திரம் எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்து, சொந்தத் தொழில் செய்து வருடம் ரூ. 40,000 வரைசம்பாதிக்கும் 28 வயதான பிராமண இளைஞருக்கு அதே இனத்தில் 23 வயதுக்குள்ளான படித்த மணமகள் தேவை. பையனின் உயரம் 5 அடி 10 அங்குலம். விருப்பமுள்ளவர்கள் ஜாதகத் துடன் விண்ணப்பிக்கவும்.

## பெட்டி எண் 105

கௌசிக கோத்ரம், தென்கலை, 26 வயது உத்திர நட்சத்திரம் எஸ்.எஸ்.எல்.ஸி. படித்த குடும்பப் பாங்கான பெண்ணுக்கு மாதாந்திர வருமானமுள்ள மணமகன் தேவை.

## பெட்டி எண் 106

எம். ஏ. படித்து உதவிப் பேராசிரியை யாகப் பணி புரியும் 30 வயதுள்ள நல்ல அழகும், ஆரோக்கியமும் உள்ள மாத வரு வாய் ரூ. 1000 பெற்று வரும் வாதூல கோத்ரம் வடகலை அய்யங்கார் வகுப்பைச் சேர்ந்த பெண்ணுக்கு வரன் தேவை. ஜன்ம நட்சத்திரம் மூலம் 2ம் பாதம். உயரம் 5' 4''. போஸ்ட் கிராஜுவேட் அல்லது கிராஜுவேட் டிகிரியுள்ள பேங்க் அல்லது மத்திய சர்க்கார் அல்லது லைஃப் இன்ஷூ ரன்ஸில் பணி புரிபவர்களும் விண்ணப் பிக்கலாம்.

## பெட்டி எண் 107

"Wanted a non - Koundanya Iyer boy for a graduate girl employed in a Transport Company. Parents doctors. sub sect no bar. Reply with heroscope and men Perticulars"

## பெட்டி எண் 108

பாரத்வாஜ கோத்ரம் முலகநாடு தெலுங்கு பிராமணர் வகுப்பைச் சேர்ந்த 26 வயது ரோஹிணி நட்சத்திரத்தில் பிறந்த, மாநிறம் உயரம் 5 அடி 2 அங்குலம். நல்ல குடும்பப் பொறுப்புள்ள குடும்ப வேலைகள் நன்கு அறிந்த பி.யூ.ஸி. வரை படித்த அழகுள்ள கன்னிப் பெண்ணுக்கு அதே பிரிவில் அல்லது வேறு உட்பிரிவில் நல்ல வேலையில் உள்ள பிரம்மச்சாரி மணமகன் 32 வயதுக்குள் தேவை. பெண் வேலையில் இல்லை. ஜாதகக் குறிப்புடன் உத்தியோக விவரம் மற்றும் குடும்பப் பின்னணி நிலவரத்துடன் எழுதவும்.

## பெட்டி எண் 109

சங்கிருதி கோத்ரம், பிரகசரணம், திரு வாதிரை நட்சத்திரம் 3ம் பாகம் எஸ். எஸ். எல். ஸி. படித்துள்ள குடும்பப் பாங்குள்ள ஐயர் வகுப்பு 27 வயதுள்ள பெண்ணுக்கு அதே கோத்ரம் இல்லாத ரூ 700க்கு மேல் சம்பளம் உள்ள தகுந்த மணமகன் தேவை. ஜாதகத்துடன் மற்ற விவரங்களும் அனுப்பவும்.

## பெட்டி எண் 110

உபமன்ய வசிஷ்ட கோத்ரம் இல்லாத நல்ல உத்தியோகத்தில் உள்ள மாத்வா கன்னடம் பேசும் வயது 31லிருந்து 40வரை உள்ள மணமகன் தேவை. பெண்ணுக்கு வயது 30. விசாக நட்சத்திரம், படிப்பு எஸ். எஸ். எல். ஸி. பாஸ், திருமணம் உடனே நடத்தப்படும். விவரங்களுக்கு எழு தவும்.

## பெட்டி எண் 111

பாரத்வாஜ கோத்ரம், மிருகசீர்ஷ நட்சத் திரம், ஸ்மார்த்தான் பிராமண அய்யர் வகுப்பைச் சேர்ந்த 32 வயதுப் பெண்ணுக்கு ஏற்ற நல்லதொரு உத்தியோகத்தில் உள்ள பிராமண ஐயர் குடும்பத்தைச் சேர்ந்த மணமகனை வரவேற்கிறோம். பெண் எம்.காம் படித்து மத்திய அரசாங்கத்தில் உத்தியோகத் தில் மாதம் ரூ. 1000 சம்பாதிக்கிறார். நல்ல கலைக் குடும்பம். வரதட்சிணை கிடை யாது. ஜாதகப் பொருத்தம் அவசியமில்லை.

## பெட்டி எண் 112

பாரத்வாஜ கோத்ரம், மகம் நட்சத்திரம், ஸ்மார்த்தான் பிராமண அய்யர் வகுப் பைச் சேர்ந்த 27 வயது பெண்ணுக்கு ஏற்ற நல்ல உத்தியோகத்தில் உள்ள பிராமண அய்யர் குடும்பத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. பெண் பி.ஏ. (மியூஸிக்) நன்றாக கர் நாடக சங்கீதம் பாடுவார். தமிழ்நாடு அரசு நிறுவனத்தில் மாதம் ரூ. 550 சம் பாதிக்கிறார். சிவப்பான, சற்று மெலிந்த சரீரம். 5 அடி உயரம். நல்ல குணம். அழகும் உள்ளவர். ஜாதகம் மற்றும் சமீபத் தில் எடுக்கப்பட்ட போட்டோவுடன் கூடிய விவரங்களை அனுப்பி வைக்க அன்புடன் வேண்டுகிறோம்.

## பெட்டி எண் 113

தென்கலை ஸ்ரீரங்கம் ஐயங்கார், வயது 33, சதய நட்சத்திரம் பி.ஏ. எக். (இங்கிலீஷ் மீடியம்) படித்த வசதியோடு கண்ணிய மான குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணுக்கு கௌசிக கோத்ரமல்லாத 37 முதல் 41 வயதுக்குட்பட்ட மாதம் ரூ. 900 ரூபாய்க் குக் குறையாத சம்பளம் பெறும் நல்ல வேலை யில் உள்ள பட்டதாரியோ அல்லது முதுகலை நிலையில் உள்ள மணமகன் தேவை.

## பெட்டி எண் 114




"தலைமுறை தலைமுறையாக மக்கள் பயன்படுத்திவரும் இந்திய மருந்துகளின் சக்தியே தனி...

அவற்றுள் தனிச்சிறப்பு வாய்ந்தது அமிர்தாஞ்சன்."

தலைமுறை தலைமுறையாக மக்கள் நம்பிக்கையோடு பயன்படுத்திவரும் அமிர்தாஞ்சன் பத்து மருந்துப்பொருள்கள் அடங்கியது. இவை பத்தும் இயற்கையின் அற்புதமான சக்திவாய்ந்த மருந்துகள். அதனால்தான் அமிர்தர்ஞ்சன் ஒரு சக்திமிக்க வலி நிவாரணியாக விளங்குகிறது.

இதன் பயனாக தலைவலி, ஜலதோஷம், உடல்வலி, சுளுக்கு இவை எல்லா்வற்றுக்குமே அமிர்தாஞ்சன் விரைவாக நிச்சயமாக ிநவாரணம் அளிக்கிறது. அமிர்தாஞ்சன் உபயோகிப்பதால் ஆபத்து இல்லை. இதனால் வேறு தீய விளைவுகள் எதுவும் ஏற்படாது.

**அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கும் மேலாகப் பல குடும்பங்களில் பயன் பட்டுவரும் நம்பகமான மருந்து.**



# அமிர்தாஞ்சன்

**தலைவலி. ஜலதோஷம். உடல்வலி. சுளுக்கு — அனைத்தையும் போக்க அருமையான மருந்து.**

AM-2148

# முதல் தலைமை நீதிபதி—

அமெரிக்கத் தலைமை நீதிமன்ற முதல் பெண் நீதிபதியாக ஸாண்ட்ரா டே ஓ'கானர் நியமிக்கப்பெற்றுள்ளார். ஒரு அதிபர் நியமிக்கக்கூடிய ''பெரிதும் அச்சமூட்டும் பதவி இது என்பதில் ஐயமில்லை'' என்றார், ரீகன்.

அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், ஆளுநர்கள். மாநில உயர்நீதிமன்ற நீதிபதிகள் போன்ற உயர் பதவிகளையெல்லாம் இதற்கு முன்பு பெண்கள் வகித்ததுண்டு. ஆனால் அதிபர் ரீகன்தான் இப்போது வரலாற்றிலேயே முதல் தடவையாக ஒரு பெண் மணியை சுப்ரீம் கோர்ட் நீதிபதியாக்கியுள்ளார்.

நீதிபதி ஓ'கானர் அம்மையார் தலைமை நீதிமன்றத்தின் 12வது நீதிபதி. 191 ஆண்டுகட்கு முன்பு இம்மன்றம் நிறுவப் பெற்றது முதல் அதில் நீதிபதி பதவி வகுக்கும் முதல் பெண்மணி இவரே.

நீதிபதி ஓ'கானர், பழைமை விரும்பி; எனினும் சார்பற்றவர்; அனுபவம் மிக்க அரசியல்வாதி (அரிஸோனா மாநில செனட் சபையில் பெரும்பான்மைக் கட்சியின் முதல் பெண் தலைவி என்ற பெருமை படைத்தவர்) கடுமையாக உழைக்கும் பழக்கமுள்ள ஒரு வழக்கறிஞர். எதையும் திருத்தமுறச் செய்பவர்; நேர்மையாளர்.



நீதித் துறையில் அவரது அருஞ் சாதனைகளை நியூயார்க் டைம்ஸ் ஏடு சிறப்பித்துக் கூறியுள்ளது.

தாயின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டிருந்தாலொழிய, அரசு உதவி பெறும் டஸ்கன் (அரிஸோனா) மருத்துவ மனையில் கருச் சிதைவுக்குத் தடை விதிக்கும் ஒரு மசோதாவை மற்றும் எட்டு மாநில செனட்டர்களோடு சேர்ந்து எதிர்த்தார். இதுவும் அதே ஆண்டில்.

நிதானம், சட்டமியற்றுவதில் நீதிமன்றத்துக்கு மதிப்பளித்தல் ஆகிய நீதித் துறைக் கோட்பாட்டில் அதிபர் ஈடுபாடு உள்ளவர்; ஓ'கானரும் அப்படியே என்று அட்டார்னி ஜெனரல் வில்லியம் ஃப்ரெஞ்ச் ஸ்மித் குறிப்பிட்டார்.

✲✲✲✲✲✲✲✲-✲✲✲✲✲✲✲✲



குழந்தையின் உயரத்தைத் தெரிந்துகொள்ள குழந்தையின் வயதை 2 - ஆல் பெருக்கி அந்தப் பெருக்குத் தொகையுடன் 32-ஐக் கூட்டுங்கள்.

(வயது × 2) + 32 = குழந்தையின் உயரம் (அங்குலத்தில்)

இதுவே நார்மலாக இருக்கவேண்டிய உயரம்.

—மிஸஸ். ஸ்ரீஜானந்த்,

ஆதாரம்: 'குழந்தை நலம்.'

✲✲✲✲✲✲✲✲-✲✲✲✲✲✲✲✲

மத்திய அரசு நீதிமன்றங்களில் வழக்குகள் சுமை பெருகிக் கொண்டே போகிறது என்றும், ரீகன் அரசுமத்தியஅரசின் செலவுகளுக்கு 'கடிவாளம் போட' உறுதி கொண்டுள்ளது என்றும், எனவே சட்ட மன்றம் 1871ம் வருஷ குடியுரிமைகள் சட்டத்தின் வாய்ப்புக்கு அணை போடுவது பற்றிச் சிந்திக்க வேண்டும் என்றும் யோசனை கூறும் அளவுக்குக் கூட அவர் சென்றுள்ளார்.

பணக்கார நிலக்கிழார் குடும்பத்தைச் சேர்ந்தவர் திருமதி ஓ'கானர். அவருக்கு வயது 51. நீண்ட காலமாகக் குடியரசுக் கட்சிக்காரர்.

இவரது கணவர் ஜான் ஜே. ஓ'கானர் இவர் கூடப் படித்தவர். வழக்கறிஞர். இவர்களுக்கு மூன்று மகன்கள் உண்டு.




—எம்.ஜி.எல். நரசிம்மன்

ஒவ்வொரு பிரசவமும் ஒரு புதுப் பிறவி என்று கூறுவார்கள். அதனால்தான் பெற்றுப் பிழைத்து வந்தாள் என்றே சொல்வது வழக்கம். பிரசவம் வீட்டில் நடந்தாலும் சரி, ஆஸ்பத்திரியில் நடந்தாலும் சரி, குறைந்த பட்சம் எட்டு நாட்களாவது அந்தப் பெண் படுக்கையை விட்டு நகராமல் ஓய்வு எடுக்க வேண்டும். பிறகு 'ஈஸி சேர்' போன்ற சாய்வான நாற்காலியில் உட்காரலாம். பிறகுதான் நடக்கத் தொடங்க வேண்டும். என்ன வலுவுள்ள பெண்ணானாலும், பிரசவம் ஆகி, ஆறு வாரத்துக்குள் கடின உழைப்பை மேற்கொள்ளவே கூடாது.

பிரசவம் ஆகித் தேறி வரும் பெண்களுக்கு ஹோமியோபதியில் துணை செய்ய நிறைய மருந்துகள் உள்ளன. சாதாரண பிரசவம் (சிக்கல் இல்லாத) ஆகி, தேறிவரும் பெண்ணுக்கு மூன்று வாரங்கள் கழித்து Psorinum என்ற மருந்தைக் கொடுத்தால் தெம்பு விரைவில் பிறக்கும்.

குழந்தை பிறந்ததை அடுத்து, தாய்க்கு மாதவிடாய் போல Locnia எனப்படும் 'திரவ ஒழுக்கு' பிரசவத்திலிருந்து சுமார் 10 நாட்களுக்கு இருக்கும். சில பெண்களுக்கு சில நாட்களிலேயே இந்த 'ஒழுக்கு' நின்றுவிடலாம். சிலருக்குப் பல வாரங்களுக்கு நீடிப்பதும் உண்டு. இந்த ஒழுக்கு நீர்த்து சிறிதளவே இருக்கும். ஆனால் சில பெண்களுக்கு அணை உடைத்துக் கொண்டாற்போல் பெருக்காக ஏற்படலாம். முதலில் மாதவிடாய் போன்ற தோற்றத்தில் இந்தத் திரவ ஒழுக்கு இருந்தாலும், நாளாவட்டத்தில் ரத்த வண்ணம் குறைந்து, மஞ்சளாகி வெள்ளையாகி இறுதியில் அடியோடு நின்றுவிடும். இந்தத் திரவ ஒழுக்கு அளவுக்கு அதிகமாக இருப்பதும் சரியல்ல, திடீர் என்று நின்றுவிடுவதும் சரியல்ல. இப்படிக் கோளாறு ஏற்பட்டால் என்ன மருந்து சாப்பிடலாம்?

இந்தத் திரவ ஒழுக்கு நீண்ட நாட்களாகவும், அதிக அளவிலும் இருந்து, கரும்சிவப்பு வண்ணத்தில் கெட்டியாக இருந்தால் Crocus என்ற மருந்தைக் கொடுக்கலாம்.

திரவ ஒழுக்கு திடீரென்று நின்றுவிட்டது என்றால் Pulsatilla என்ற மருந்தைக் கொடுத்தால் போதும். காய்ச்சல், தலைவலி ஆகியவைகளோடு பாதங்கள் சில்லிட்டுப் போய், அடிக்கடி சிறுநீர் கழிக்க வேண்டும் என்ற உணர்வும் இருந்தால் இந்த Bryonia துணை செய்யும்.

சிறுநீர் கழிவது வெகு குறைவாக இருக்கிறது. தலைவலியோடு தலை கனத்து இருக்கிறது. முதுகு வலிக்கிறது என்றால் Bryonia

என்ற மருந்தை உட்கொள்ள வேண்டும். நல்ல சிவப்பு நிறத்தில் ஒழுக்கு இருந்து, அடி வயிற்றில் எரிச்சலோடு இருந்தாலும் இந்த மருந்து கொடுக்கலாம்.

திரவ ஒழுக்கு திடீரென்று நின்று, வயிற்றுப் போக்கும், வயிற்று வலியும் ஏற்பட்டால் Chamomilla என்ற மருந்து தீர்வு கொடுக்கும்.

திரவ ஒழுக்கு நின்றுவிட்டு சில நாட்களில் மீண்டும் தொடங்கினால் Rhustox என்ற மருந்தைப் பயன்படுத்தலாம்.

மற்றும், நோயாளிகளின் அறிகுறிகளுக்குத் தக்கவாறு Aconite, Belladonna, Dulsamara Platina முதலிய மருந்துகளும் இந்த திரவ ஒழுக்கு சம்பந்தப்பட்ட கோளாறுகளுக்குப் பயன் படுத்தப்படும்.

பிரசவம் ஆன பெண்களுக்கு ஏற்படும் இன்னொரு கோளாறு பால் கட்டிக்கொண்டு முலைக் காம்புகளில் வலி ஏற்படுவது. பெரும்பாலும் இந்தக் கோளாறு ஏற்பட்ட பெண்ணுக்கு வீக்கமும் வலியும் ஏற்படும். இந்தச் சந்தர்ப்பத்தில் Pulsatilla கொடுத்தால் உடனடி நிவாரணம் கிடைக்கும். இந்தக் கோளாறுடு, காய்ச்சல், நாவரட்சி, முதலியவையும் சேர்ந்துகொள்கின்றன. அப்போது Aconite கொடுக்கலாம். காய்ச்சல் இறங்கும்வரை Aconite தொடரலாம்.

மற்றும் Bryonia, Belladonna என்ற மருந்துகளும் இதர அறிகுறிகளுக்கு ஏற்பக் கொடுக்கலாம்.

சில சமயங்களில் முலைக் காம்புகளிலிருந்து பால் தானுவே சொட்டிக் கொண்டிருக்கும். இந்தச் சந்தர்ப்பங்களில் China என்ற மருந்தைக் கொடுத்தால் அப்படிச் சொட்டுவது நின்றுவிடும். தாய்ப்பால் நீர்த்துப்போயிருக்கிறது என்றால் Borax கொடுத்தால் சரியாகிவிடும்.

### மலச்சிக்கல்

பிரசவம் ஆன பின், சில நாட்களுக்கு மலச்சிக்கல் ஏற்படுவது சகஜம்தான். இது இயற்கையும்கூட. இந்த மலச்சிக்கலைப் போக்க எந்த மருந்தும் கொடுக்கக் கூடாது. இதனால் பிரசவம் ஆன பெண்ணின் ஆரோக்கியத்துக்கு நல்லதுதான். இந்த நேரங்களில் பேதி மருந்துகளைக் கொடுக்கவே கூடாது. அப்படிக் கொடுத்தால் அதனால் அப்பெண்களின் உடல்நலம்தான் கெடும்.

பிரசவம் ஆகி ஐந்து அல்லது ஆறு நாட்களுக்குப் பின் தலை கனத்துடன், வயிற்று வலியும் இருக்கிறது என்று அப்பெண் சொன்னால் Bryonia ஒன்றிரண்டு 'டோஸ்' கொடுத்தால், மலம் வெளிப்பட்டு, நிவாரணம் கிடைக்கும். அப்படியும் தீர்வு கிடைக்கவில்லை என்றும் இரவில் Nuxvonila கொடுத்துவிட்டு காலையில் எழுந்ததும் Sulphur என்ற மருந்து கொடுத்தால் மலம் பிரியும்.

பிரசவத்துக்குப் பிறகு ஏற்படும் இன்னொரு கோளாறு சிறுநீர் போகாமல் தடைப்பட்டு போவது அல்லது சிறுநீர் கழிக்கும்போது வலி ஏற்படுவது ஆகியவை. பிரசவ வலி கடுமையாக இருக்கும் பெண்களுக்கு, குறிப்பாக முதல் பிரசவத்தின் அடுத்து இந்தக் கோளாறுகள் தோன்றக்கூடும்.

ஆபரேஷன் மூலம் பிரசவம் ஆன பெண்களுக்கு இந்தக் கோளாறு தோன்ற வாய்ப்பு அதிகம்.

இப்படிப்பட்ட சமயங்களில் Arnica சிறந்த மருந்து. இந்தக் கோளாறுடன் காய்ச்சலும் எரிச்சலும் சேர்ந்து கொண்டிருந்தால் Aconite கொடுக்க வேண்டும்.

வயிற்றைச் சுருட்டி இழுப்பது போன்ற வலியுடன், வயிறு இடுப்பு எல்லாம் வலியும் இருந்தால் Belladonna சிறந்தது.

இந்தக் கோளாறு ஏற்பட்ட பெண்களுக்கு இளம் சூடாக வெந்நீர் ஒத்தடம் கொடுத்தால் நிவாரணம் கிடைக்கும்.

இந்தக் கோளாறுக்குக் கொடுக்கும் மருந்தை நீர்க் கரைசலாக வைத்துக்கொண்டு இரண்டு மணி நேரத்துக்கு ஒரு முறை கொடுக்க வேண்டும்.

பிரசவத்துக்குப் பின் வயிற்றுப் போக்கு ஏற்படுவதுண்டு. நாக்கில் வெள்ளை படிந்து, அடிக்கடி வாயுப் பிரிவு இருந்தால், அப்படிப்பட்ட வயிற்றுப் போக்குக்கு Antim Crud கொடுக்க வேண்டும். வயிற்றுப் போக்கினால் உடல் தளர்ந்து சோர்வு ஏற்படுகிறதென்றால் உட்கொள்ளலாம். வலியில்லாத ஆனால், வெறும் நீர்த்த வயிற்றுப் போக்காக இருந்தால் கொடுக்க வேண்டிய மருந்து Phosphoril Acid.

பிரசவம் ஆன பெண்களுக்கு பிரசவம் ஆன பின் சில நாட்களுக்கு, அதிகமாக வியர்த்துவிடும். இது ஆரோக்கியமானதுதான். இப்படி வியர்த்து விடுவது நிமர் என நின்றால்தான் கோளாறு எனறு எடுத்துக் கொள்ள வேண்டும். அளவுக்கு ரொம்ப அதிகமாக வியர்த்துவிட்டால், China என்ற மருந்து, அதனால் ஏற்படும் சோர்வைப் போக்கிச் சரிப்படுத்திவிடும்.

பிரசவம் ஆன பெண்களுக்குத் தலைமயிர் கொட்டிப் போவது உண்டு. அப்படித் தலைமயிர் கொட்டிப் போனால் Sulphur, Cycopodium அல்லது Calcarea Carb என்ற மருந்துகளில் ஒன்றை இதர அறிகுறிகளுக்கு ஏற்பக் கொடுத்தால் நிவாரணம் கிடைக்கும்.

தலை காய்ந்துபோய் தலைமயிரும் கொட்ட ஆரம்பித்தால் Kali Carb துணை செய்யும்.

**யோசனை**

தோசைவார்க்கும்போது கண்டிப்போனால் தோசைக் கல்லில் ஒரு ஸ்பூன் எண்ணெய் விட்டு அரை ஸ்பூன் உப்புப் போட்டு, கல் முழுதும் தேய்த்துவிட்டுப் பிறகு வார்த்தால் கண்டாது.

- பி. அம்புஜா

# உண்மையிலேயே உடன் பிறந்தவர்கள்!

அதென்ன உண்மையிலேயே 'உடன்' பிறந்தவர்கள்? மற்றவர்கள் பொய்யாகப் பிறந்தவர்களா? அப்படி இல்லை. ஒரே வயிற்றில் ஒரே சமயத்தில் பகிர்ந்து கொண்டு வாழ்ந்து, ஒருசில நிமிஷ இடைவெளியில் பிறக்கும் இரட்டைக் குழந்தைகளைத்தான் அப்படிச் சொல்கிறோம்.

இரட்டைப் பிரசவம் என்பது 80 பெண்களில் ஒரு பெண்ணுக்குச் சாத்தியமாகிறது. இது எப்படி நடக்கிறது?

பெரும்பாலும் ஆண்-பெண் இருவர் கொள்ளும் ஒரே உறவிலேயே இப்படி ஆகின்றது. சாதாரணமாகப் பெண்ணுக்கு மாதவிடாய் முடிந்தவுடன், குறிப்பிட்ட நாட்கள் கழிந்தவுடன் கர்ப்ப முட்டை ஒன்று தோன்றி, அதற்குரிய இடத்தில் நின்று கொண்டிருக்கிறது. இதனுடன் கலக்கும் ஆணினுடைய விந்தும் சேர்ந்து கருவாக மாறுகிறது.

சில சமயம் பெண்களுக்கு இரண்டு முட்டைகள் தோன்றுவதுண்டு. இது போன்ற சமயங்களில் ஆணின் இரண்டு அணுக்களோ, ஒரணு இரண்டாகப் பிளந்தோ பெண்ணினுடைய முட்டையுடன் கலந்து இரட்டைக் கருவாகிறது.

இப்படி இரண்டு கரு ஏற்படுவது பற்றிய பல சுவையான தகவல்கள் உண்டு.

ஒரே மாதவிடாய் முடிந்த இடைக் காலத்தில், இரண்டு வேறு வேறு நாட்களிலும் கூட கரு உண்டாகக் கூடும்.

அமெரிக்காவில் 48 மணி நேரத்துக்குள் ஒரே பெண் ஒரு அமெரிக்கனுடனும், ஒரு நீக்ரோவுடனும் இணைந்தாளாம். அவளுக்கு ஒரு வெள்ளைக் குழந்தையும் ஒரு கறுப்புக் குழந்தையும் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தன!

ஒரு மாத இடைவெளியில்கூட இரண்டு முறை கர்ப்பமாவதுண்டு. பொதுவாகவே ஒரு முட்டை கருவானவுடனே, மீண்டும் முட்டைகள் தயாராவதில்லை. ஆனால் சில சமயங்களில் மறு மாதமும் முட்டை தோன்றி, அதனுடன் ஆணின் உயிரணு சேரும்போது இரண்டாவது முறை கரு ஏற்படுகிறது. இப்படி ஒரு மாத இடைவெளியில் உருவான குழந்தைகள் ஒரே சமயத்தில் இரட்டைக் குழந்தைகளாகப் பிறக்கும்போது ஒன்று வளர்ச்சியுள்ளதாகவும், மற்றொன்று வளர்ச்சியில்லாததாகவும் பிறக்கிறது.

கருவில் இரட்டைக் குழந்தைகள் இருக்கும்போது சில சமயங்களில் ஒன்று மட்டும் அதிக உணவை எடுத்துக் கொண்டுவிடும். ஒன்று வளர்ச்சி குன்றி இருக்குமாம். அப்படிப்பட்ட குழந்தைகள் பிறக்கும் போது பாதிப்புக்களை ஏற்படுகின்றன.

மூன்று, நான்கு, ஐந்து குழந்தைகள் கூட ஒரே சமயத்தில் பிறப்





பதுண்டு. ஆனால் இவையெல்லாம் மிகக் குறைந்த எடையுடன் பிறக்கும். காரணம் கர்ப்பப் பையில் இடம் போதாமல் முழு வளர்ச்சி யடை வதற்கு முன்பே பிறந்து விடுவதால் இறந்து விடுகின்றன. சில குழந் தைகள் உயிரோடு இருப்பதும் உண்டு.

1934ல் அமெரிக்காவில் பிறந்த ஐந்து குழந்தைகள் இன்றைக்கும் நலமுடன் இருக் கிறார்களாம்,

### இவ்வாறு ஏன் உண்டாகிறது?

இதற்குப் பெரும்பாலும் பரம்பரைதான் காரணம். இவர்களுடைய பரம்பரையைக் கவனித்தால் பெண்ணுக்கு முந்தைய தலை முறையில் இப்படிப் பல பெண்களுக்கு இரட் டைக் குழந்தைகள் பிறந்திருக்கும். ஆணு டைய பரம்பரையில் இரட்டைக்குழந்தைகள் இருந்தாலும் இது போல நிகழ்வதற்கு வாய்ப்புக்கள் உண்டு.

### இரட்டைக் குழந்தை என எப்போது கண்டுபிடிக்கிறார்கள்?

ஒரு முட்டை கருவாகி, முழு வளர்ச்சி அடைந்து ஆரோக்கியமான குழந்தை பிறக்கவே இயற்கை கர்ப்பப் பையை ஏற் படுத்தியுள்ளது. ஆனால் இவ்வாறு இரட் டைக் குழந்தை ஏற்படுவதால் பல பிரச் னைகள் ஏற்படுகிறது.

முதல் சில வாரங்கள் ஏற்படும் மசக்கை அதிகமாக இப்பெண்களுக்கு இருக்கிறது. தலை சுற்றலும், வாந்தியும் அளவுக்கு அதிக மாக ஏற்படும். இவற்றின் மூலமாக மருத்து வர்கள் கண்டுபிடிப்பதில்லை.

மூன்றும் மாதத்துக்குப் பிறகுதான் மருத் துவப் பரிசோதனைகள் இரட்டைக் குழந்தை களை உறுதிப்படுத்துகின்றன. இருபதாவது வாரத்தில் இரண்டு தலைகளையும் இரண்டு இதயத் துடிப்புக்களையும் மருத்துவர்கள் உணருவதால் இதை உறுதிப்படுத்துகின் றனர்.

இப்படி இரட்டைக் குழந்தை உண்டான வுடன் மிகக் கவனத்துடன் இருக்க வேண் டியவர்கள் ஆகிறார்கள்.

இரண்டு குழந்தைகளுக்குச் சத்துணவு, இரும்புச் சத்து, வைட்டமின் ஆகியவற்றைக் கொடுக்க வேண்டி யிருக்கிறது. பொதுவாக ஒரு குழந்தையைக் கர்ப்பமாக இருக்கும் போதே சத்து இல்லாததால் சோகை ஏற்படுகிறது. இப்படி இரண்டு குழந்தைகளை உண்டாகி யிருக்கும்போது அது இரண்டு மடங்காகிறது.

எனவே இரட்டைக் குழந்தைகள் என்று உறுதியானவுடன், டாக்டரின் ஆழ்ந்த அறிவுரையை ஏற்றுக் கொண்டு நல்ல உணவுகளை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு குழந்தைகளைக் கர்ப்பப்பை தாங் குவதால் மிக அதிகமாகப் பெரிதாகிறது. இதனால் கருவைச் சுற்றியிருக்கும் நீரும் அதிகமாகிறது. கால் வீக்கம், மூச்சுத் திணறல் முதலியவை இப் பெண்களுக்கு அதிகமாகக் காணப்படும்.

பிரசவ காலத்தில்தான் பிரச்னையின் உச்சகட்டம் ஏற்படுகிறது. அதிகமான ரத்தப் போக்கு பிரசவ சமயத்திலும், பின்னரும் நீடிக்க வாய்ப்பிருக்கிறது.

பிரசவத்திலும் கூட குழந்தைகள் வெளி வருவது பெரும் பிரச்னைதான். ஏனெனில் இரண்டின் கருப்பப் பை பருவமும் முற்றுப் பெற்றுவிடுவதால் வெளியே வர ஒரே சமயத்தில் முயற்சி செய்கிறது. இதனால் இரண்டும் கர்ப்பப் பையின் வாயை ஒரே சமயத்தில் முட்டுகின்றன. இதனால்தான் பெரும்பாலான குழந்தைகள் பிரசவத்தி லேயே இறந்துவிட வாய்ப்பு ஏற்படுகிறது.

"இவ்வளவு கஷ்டங்கள் இருந்தாலும் பெரும்பாலான இரட்டைக் குழந்தைகள் நலமாகப் பிறந்து சந்தோஷமாக வாழ்வது மருத்துவ உலகுக்கு மிஞ்சிய விஷயமாகும்" என்கிறார்கள் மருத்துவர்கள்.



ஒரே சமயத்தில் பிரசவமானால்தான் பிரச்னைகள். இந்தக் காலம் வித்யாசப் படுவதுண்டு.

**ஒரு மாதம் கழித்து மீண்டும் பிரசவம்!**

ஒரு பிரசவமான பெண்ணை ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார்களாம். குழந்தைக்குப் பிறகு வரவேண்டிய 'பிளசண்டா' என்ற அகத்தங்கள் வரவில்லை என்று மருத்துவர்கள் ஆராய்ச்சி செய்து பார்த்ததில் இப்னொரு குழந்தை கர்ப்பப் பையில் இருப்பது தெரிய வந்தது!

**இரட்டைக் குழந்தை பெறும் தாய்மார்களுக்கு**

மருத்துவ உலகம் இன்று பெரிதும் முன்னேறி வருகிறது. எனவே எத்தகைய சிக்கலான பிரசவத்தையும் திறமையாகச் செய்கிறார்கள். எனவே இரட்டைக் குழந்தை என்றவுடன் அதிர்ச்சி யடைய வேண்டிய தில்லை.

தேவையான சத்துள்ள ஆகாரமே மிகவும் முக்கியம். மருத்துவர்களின் ஆலோசனைப்படி நடந்து வந்தால் நலமாகவே முடியும்.



இத்தகைய பெண்கள் மனதை இரட்டைக் குழந்தைகளுக்குத் தயார் செய்து கொள்ள வேண்டும். ஏனெனில் இதை எதிர் பார்க்காத தாய்மார்கள் அதிர்ச்சி யடைகிறார்கள்.

ஒரு குழந்தையை வளர்ப்பதே சிரமமாக இருக்கும் நேரத்தில் இரண்டு குழந்தைகளை வளர்க்கும் செலவு இரண்டு மடங்காகிறது. அதற்கும் முன்கூட்டித் திட்டமிட்டுக்கொள்வது எதிர்காலத்தில் பிரச்னையைத் தீர்க்கும்.

-நன்றி: 'கல்ஃப் வீக்லி'
தகவல்: பிரான்சி

---

# மைதா பூந்தி பாயசம்

**தேவையான பொருட்கள் :**

மைதாமாவு கால் கிலோ
வெல்லம் அரைக் கிலோ
தேங்காய் 1
ஏலம் 5.

**செய்முறை:**

முதலில் மைதா மாவைச் சலித்து தண்ணீர் விட்டு பூந்திக்குக் கரைக்கும் பக்குவத்தில் கரைத்துக் கொள்ளவும். தேங்காயைத் துருவி ஆட்டுக் கல்லில் அரைத்து முதல் பாலைப் பிழிந்து எடுத்துக்கொண்டு பிறகு ஒரு டம்ளர் தண்ணீர் விட்டு அரைத்து இரண்டாவது பாலையும் எடுத்து வைத்துக் கொள்ளவும்.

ஒரு பாத்திரத்தில் நாலு தம்ளர் தண்ணீர் விட்டுக் கொதித்ததும் கரைத்து வைத்திருக்கும் மாவைப் பூந்திக் கரண்டியில் ஊற்றி வெந்நீரில் விடவும். சிறிது நேரத்தில் வெந்து பூந்தி மேலே எழும்பி வரும். கரண்டியால் வாரி வைத்துக் கொண்டு திரும்ப மாவை விடவும். கரைத்து வைத்திருக்கும் மாவையெல்லாம் பூந்தி செய்தான பிறகு அந்தப் பாத்திரத்து நீரைக் கொட்டி விட்டு வேறு தண்ணீர் இரண்டு டம்ளர் விட்டு வெல்லத்தைப் போட்டுக் கொதிக்க விடவும்.

பூந்திகளைக் கொட்டி இரண்டாவது பாலையும் விட்டு நன்கு (வெல்ல வாசம் போகும் வரை) கொதிக்க விடவும். பிறகு முதல் பாலை விட்டு ஒரு கொதி வந்ததும் கீழே இறக்கி ஏலத்தைப் பொடித்துப் போடவும். விருப்பம் உள்ளவர்கள் கால் மூடி தேங்காயைத் துருவி நெய்யில் வறுத்துப் பாயசத்தில் போடலாம். வாசனையாக இருக்கும். இந்தப் பாயசம் செய்வது எளிது. அதே சமயம் ருசியானதும்கூட.

**-விஜயா ராமகிருஷ்ணன்**



## உண்மைச் சம்பவம்



# ஒரு தொடர்கதைதான்!

எப்பவோ வந்த கதையாம் அது! இப்பத்தான் 'டைம்' கிடைச்சது, படிச்சேன். யாரோ எழுதியிருக்கார். பேர் மட்டும் மறக்கலே. 'பாற்கடல்!' அதோட அர்த்தத்தால தான் அது மனசுல நிற்கறது. ஆயுசுக்கும் அந்தக் கதையை நான் மறப்பேனான்னு சந்தேகம்தான்.

கல்யாணமாய் புதுசாய் வரும் மருமகள் கூட்டுக் குடும்பத்திலே மாமியாரிடம் படுகிறாள். தீபாவளிக்கு அவள் அப்பாவோட அனுப்ப மறுக்கும் மாமியாரே தாயாராய் இன்னொரு சமயம் பரிவைப் பொழிகிறாள். பாற்கடலில் தான் நஞ்சும் வந்தது; அமுதமும் கிடைத்தது. குடும்பமும் அப்படித் தான். எல்லாமும் அங்கே இருக்கும் என்பதை அற்புதமாய்க் காட்டினார்.

இதைப் படிச்சவுடன், எழுத்தே பழக்கமில்லாத எனக்கு எழுதி எல்லாருக்கும்கத்திச் சொல்லணும்னு ஒருவெறி. அதை மாத்திக்கவே முடியலே. அதனால தான் என் அனுபவத்தை இங்கே எழுதறேன்.



பெரிய குடும்பத்திலே இரண்டாவது பிள்ளைக்கு மனைவியாக வாழ்க்கைப்பட்டேன். பெரியவருக்குக் கல்யாணம் ஆகி ஆறு வருஷம் ஆகியிருந்தது. அதுவரை குழந்தைகளில்லை. நான் கல்யாணம் ஆகி ஒரு தடவை தான் குளித்தேன். உடனே பிள்ளை உண்டாகி விட்டேன்.

என் பிறந்த வீடு ஏழையான குடும்பம். சீர் வரிசை சரியாய்ச் செய்யவில்லை. போடுகிறேன் என்று சொல்லிவிட்ட நாலு பவுன் சங்கிலியும் போடவில்லை. என் ஓரகத்திக்கு அது ஒரு சாக்காகக் கிடைத்தது.

அவளுக்கு உள்ளூரத் தனக்குக் குழந்தை இல்லையே என்ற மன ஏக்கம். நான் உடனே கர்ப்பமாகிவிட்ட பொறுமை. என் பிறந்த வீட்டு ஏழ்மையைச் சாக்காக்கிக் கொண்டு கண்டபடி பேசுவாள். கணவரையும் தூண்டி விடுவாள். மாமியார் அதிகம் பேச மாட்டார். வாயைத் திறந்தால் 'கருக்'கென்ற பாணம் தைக்கும்.

பிரசவ காலத்தில் நான் பட்ட பாடு! ஓரகத்தி முழுமையாக வேலை நிறுத்தம் செய்துவிட்டாள். நினைத்தபோது எழுந்திருப்பாள். எப்பொழுது வேண்டு மானாலும் சாப்பிடுவாள். அவளை யாரும் ஒன்றும் சொல்லவே பயமாக இருந்தது.

என் மாமியார்தான் பாவம். காலையில் எழுந்து குழந்தையைக் குளிப்பாட்டிவிட்டு எனக்குப் பத்தியம் சமைத்துப் போட்டுவிட்டு பத்து மணிக்கு மேல் மீண்டும் குளித்து எல்லோருக்கும் சமைத்துஎல்லாம் செய்வார்.

ஒன்பதாம் நாள்—

காலையில் என் தம்பி பார்க்க வந்தான். இரண்டு சாத்துக்குடிதான் அவனால் முடிந்தது. எனக்கு அதைச் சாப்பிடக் கூடப் பிடி பிடிக்கவில்லை. சாப்பிடவும் இல்லை. உடம்பு அவ்வளவு அசதியாக இருந்தது. பிரசவம் ஆன உடம்போடு குழந்தையை ஒண்டியாய்ச் சமாளிக்க வேண்டியிருந்தது.

அதனால் அவன் புறப்பட்டுப் போன பிறகு நன்றாகத் தூங்கி விட்டேன். எழுந்தவுடன் ஒரே தண்ணீர்த் தாகம். வெந்நீர்தான் குடிக்க வேண்டும். மாமியார் குழந்தை நாமகரண ஏற்பாட்டுக்கு வெளியே போயிருந்தார். கேட்கிறேன், கேட்கிறேன் ஓரகத்தி அசையவில்லை. ஆசாரமான குடும்பமானதால் உள்ளேயும் நுழைய முடியாது.

வேறு வழியில்லை. பெருகி வரும் கண்ணீருடன் கக்கூஸ் வாளியில் ஊற்றி வைத்

விக்கல் வந்துவிட்டால் மூக்கை ஒரு கையால் இறுகப் பிடித்துக்கொண்டு வாயையும் மூடிக் கொண்டு மூச்சுவிடாமல் 'தம்' பிடிக்கவேண்டும். விக்கல் நின்றுவிடும்.

- உமா



இருந்த தண்ணீரை இரண்டு விழுங்கு விழுங்கி விட்டேன். அவ்வளவுதான். மாலையிலேயே ஜுரம் வந்து விட்டது. இரவு ஆக ஆக எக்கச் சக்கமாக ஏறிவிட்டது.



நாமகரணத்துக்கு எப்படிக் குளிப்பது? கடைசியில் மஞ்சள் தண்ணீர் தெளித்து மணையில் உட்கார்த்தி வைத்தார்கள். ஏற்கெனவே 'வீக்'கான உடம்பு. ஜுரத்தில் மேலும் பலவீனமாகி மயக்கமாகவே விழுந்து விட்டேன்.

ஆளுக்கு ஆள் பேசினார்கள். என் தம்பி வாங்கிக் கொண்டு வந்த அழுகிய சாத்துக்குடியைச் சாப்பிட்டதால்தான் ஜுரம் வந்து விட்டது என்பது அவர்களுடைய முடிவு.

எப்படியோ அந்த வீட்டில் என்னுடைய காலமும் கழிந்தது. அளவுக்கு மீறிய பொறுமையும், தெய்வ நம்பிக்கையும்தான் எனக்குத் துணை.

இப்போது என் மகனும், மகளும் பெரியவர்களாகி விட்டார்கள். ஓரகத்தி அவர்களைத் தன் குழந்தைகளாக நினைத்து ஆசையோடு செய்வாள். மாமியார் காலமாகி விட்டார்.

இப்போது எல்லாவற்றுக்கும் நான்தான் வேண்டியிருக்கிறது.

''கல்யாணி வரட்டும். அவள்தான் தோசைக்குச் சரியா உளுந்து போடுவாள்.''

என்பதிலிருந்து.

''முத்துத் தோடு அவ்வளவு விலையா சொல்றான்? எதுக்கும் கல்யாணியைக் கேட்கிறேன்''

என்பது வரை எல்லாவற்றிற்கும் நான் தான். எனக்கு விவரம் தெரிந்தவள் என்ற பட்டம். எல்லாவற்றிலும் அடிபட்ட அனுபவம் கொடுத்த பரிசு.

இப்படி நான் திருமணம் முடித்துக் கழித்த முப்பது வருஷ வாழ்க்கையின் கசப்பும், இனிப்பும், அந்தக் கதையைப் படித்த போது முட்டி மோதி வந்து நிற்கிறது.

**-திருமதி கல்யாணி சடகோபன்**

**ஒவ்வொரு பெண்ணின் புகுந்த வீட்டுக் கதையும் இப்படித்தான் இருக்கிறது. இங்கு ஓர்ப்படி என்றால் சில இடங்களில் நாத்தனர்; வேறு இடங்களில் மாமியார்.**

**ஆனால் குடும்பம் என்று வரும் போது இவையெல்லாம் சகஜமாக இருக்கலாம். உங்களுடைய அனுபவத்தையும் எழுதுங்களேன்.**

**மற்றவர்களுக்கும் அது வழிகாட்டியாக இருக்கும்.**

**சிறந்த கட்டுரைக்குப் பரிசு ரூ. 50/- பிரசுரமாகும் கட்டுரைகளுக்குச் சன்மானம் உண்டு.**



# விழிப்பு

## — மதுமதி

ராகவனின் உள்ளம் இரும்பாய்க் கனத்தது.

மனச்சாட்சி உள்ளே முள்ளாய்க் குத்திக் கொண்டிருந்தது. தாம் கடமையிலிருந்து தவறிவிட்டோம் என்ற குற்ற உணர்வே அவனுடைய ஒவ்வொரு அணுவிலும் நெருப்பாய் எரிந்து கொண்டிருந்தது.

அம்மா!

இத்தனை நேரம் சென்னையின் எல்லையைத் தாண்டிக் கொண்டிருப்பாள்.

ஒண்டியாய்... தனிமரமாய்... அனாதையாய்...

துக்கம் நெஞ்சுவரை முட்டிக் கொண்டு வந்தது. வண்டியில் அம்மா உட்கார்ந்த பின்புகூட "அம்மா, நீ தனியாய்ப் போ வேண்டாம். வாம்மா, வீட்டுக்கு. இந்த வருடக் கடைசியில் உன்னை நானே காசிக்கு அழைத்துச் செல்கிறேன்" என்று எவ்வளவோ கெஞ்சியும் அவனுடைய தாய் பார்வதம் மறுத்து விட்டாளே!

"வேண்டாம் ராகவா... தெய்வ விஷயத்தில் முடிவெடுத்தால் நிறுத்தக் கூடாது. ரொம்ப நாளாய் எனக்கு ஒரு குறை... எவ்வளவோ செலவழித்து எத்தனையோ க்ஷேத்திரங்களுக்குப் போயிருந்தாலும் காசி விஸ்வநாதரை இன்னும் தரிசிக்கலையேன்னு வயசாக வயசாகத் தாபம் ஏற்படறது. அதான் காசிக்குப் போகணும்னு தோணித்து... புறப்பட்டு விட்டேன்..."

ராகவன் வருத்தத்துடன் தலை குனிந்து கொண்டான். உண்மையில் அதுதான் காரணமா?

அவனுக்குத் தெரியும் அது இல்லை என்று. பிரேமாவின் போக்கும், அவள் வீசின வார்த்தைகளும்தான் அம்மாவைப் புறப்படச் செய்திருக்கிறது என்று.

அவனுடைய கலக்க முகம் அந்தத் தாயுள்ளத்தைத் தகிக்கச் செய்தது. சின்ன வயசில் ஸ்கூல் புத்தகத்தைத் தொலைத்துவிட்டுத் தாயிடம் முறையிட்ட தனயனாய் அவள் முன்னிருந்த ராகவன் தோன்றினான்.

"இன்னிக்கு என்ன தேதி? மூணு... பன்னிரண்டாம் தேதி திரும்பி வருகிறேன். உன் உடம்பைப் பார்த்துக்கோப்பா. குழந்தைகளையும் கவனமாப் பார்த்துக்கோ. சீனுவுக்கு இன்னிக்கு லேசாய்ச் சுடற மாதிரி இருந்தது. டாக்டரிடம் காட்டி மருந்து வாங்கிக் கொடு. கோபு—பாவம் என்கிட்டேதான் படுத்துப்பான். காயத்ரி காலிலே உஷ்ணக் கொப்பளம் வந்திருக்கு. குழந்தை தவிக்கிறா. மஞ்சளை அரைச்சுச் சூடு பண்ணிப் போடச் சொல்லு. இரண்டு நாளில் பழுத்து உடைஞ்சிடும். பிரேமாக்கிட்ட சொல்லு எனக்குக் கோபம் இல்லேன்னு. மறக்காம எண்ணெய் தேய்ச்சுக் குளிக்கச் சொல்லு."

பாசத்தால் அரற்றும் தாயை ஏறிட்டுப் பார்த்தான். எத்தனை கோடிகள் கொடுத்தாலும்... எத்தனை சொந்தங்கள் வந்தாலும் இதோ பாசத்தில் துடிக்கும் தாய்க்கு இணையாகுமா...

பிரேமா அவனிடம் எதுவும் கேட்கவில்லை. அவனும் சொல்லவில்லை. தன் தாய் பயணம் புறப்பட அவன்தானே காரண கர்த்தா?

மௌனமாய் இரண்டு கவளங்களை விழுங்கி விட்டு எதுவுமே பேசாது குழந்தைகளுக்குப் படுக்கை போட்டுக் கொடுத்துவிட்டு, தானும் படுக்கையை விரித்துப் படுத்துக் கொண்டான்.

தன் தாய் படுக்கும் இடம் வெறிச் சென்று இருந்ததை உணர்ந்தான். முதன் முதலாய் தன்னை விட்டுப் பிரிந்திருக்கிறாள் அம்மா.

எல்லா வேலைகளையும் முடித்துவிட்டுத் தன் குழந்தைகளின் பக்கமாக வந்து படுத்துக்கொண்டாள் பிரேமா.

ஓ! தன் கோபத்தைக் காட்டுகிறாளோ....

இந்த முறை அவள் ஜம்பம் செல்லாது.

ஒவ்வொரு முறையும் அவனது தாயைப் பற்றி இராத்திரி படுக்கையில் படுக்கும்போது அவனிடம் முறையிடுவாள். பார்வதம் செய்த சின்னத் தவறையெல்லாம் அவனிடம் பெரிதுபடுத்துவாள்.

"போகட்டும், விடு பிரேமா. வயதானவள்" என்று தாயை அனுசரித்துப் பேசினால் அவளுக்குக் கோபம் வந்துவிடும்.

"உங்களுக்கு அம்மாதான் பெரிசு" என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்வாள்.

"நான் எப்படிப் போனால் என்ன?" என்று வெடிப்பாள். ரொம்பவும் மீறினால் சற்றுத் தள்ளிப் போய் வெறும் தலையணையைப் போட்டுக் கொண்டு தரையில் படுத்துவிடுவாள்.

அதுதான் அவளது கடைசி, வலிமையான அஸ்திவாரம்.

அதில் அகப்பட்டுப் போவான் ராகவன்.

அவளைச் சமாதானம் பண்ணி படுக்கைக்கு வரவழைத்து அவளிடம் சரணாகதியாகிவிடுவான்.

படுக்கையறைப் போராட்டத்தில் வெற்றி பெற்று தன் வீராப்பைத் தளர்த்திக்கொண்டு அவனிடம் வந்து படுப்பாள் அவள்.

இந்தப் பிரச்னையிலிருந்து தப்ப அவன் கூடியவரை மௌன விரதத்தை மேற்கொள்வான்.

சின்ன வயதில் கஷ்டப்பட்டு தன்னை வளர்த்து ஆளாக்கியவள்... தன் சந்தோஷத்தில் முகம் மலர்கிறவள்... பிள்ளை, பிள்ளை என் தன் பிள்ளைக்காக வாழ்ந்தவள். 'நீ நன்றாய் அமோகமாய் இருக்கணும். அது போதும்...'' என்று நொடிக்கு நாலு முறை வாழ்த்துபவள்.... அவன் இருமினாலோ, தும்மினாலோ தவித்துப் போகிறவள். அவன் காய்ச்சலாய் விழுந்து எதுவும் உண்ணாமல் இருந்தால் தானும் பட்டினியாய்க் கிடந்து அவனருகேயே சுற்றிச் சுற்றி வருபவள்... அவன் வருத்தத்தில் மூழ்கினால் முகம் வாடி, மகிழ்ச்சியில் திளைக்கும்போது முகம் மலர்பவள்.... அவளை ஒதுக்கவோ, மனைவிக்காக கோபிக்கவோ சாத்தியமா? இல்லவே இல்லை.

அவனைப் பொருத்தவரையிம் தெய்வம் எங்கும் இல்லை. இதோ தன் முன்னே தாயாய்க் கனிந்து நிற்பவள்தான் தெய்வம்.

ஒரு நாள் — அதாவது மூன்று நாட்களுக்கு முன்னால் — ஆபீஸிலிருந்து வந்தவன் தாயின் முகம் சிவந்து, கண்கள் கலங்கியிருப்பதையும் மனைவியின் முகம் பூசணியாய் மாறியிருப்பதையும் பார்த்தான்.

ஏதோ நடந்திருக்கிறது. என்னவோ தகராறு... மெல்ல சீனுவை அருகில் அழைத்து விசாரித்தான். அவனது ஊகம் சரிதான். பிரேமா அவனுடைய தாயை வாய்க்கு வந்தவாறு திட்டியிருக்கிறாள்.

ஏன் இவள் இப்படி இருக்கிறாள்?

என்ன காரணம் இன்றைய சண்டைக்கு?

நிச்சயம் அம்மா மேல் இருக்காது—அவள் வெகு சாது. அதிர்ந்து பேசக் கூடத் தெரியாதவள்.

இதை இப்படியே விடக் கூடாது. அம்மா மனம் புழுங்கியே செத்து விடுவாள். இள வயதில் ரொம்பக் கஷ்டப்பட்டவள். இப்போதுதான் நிம்மதியாய் இருக்கிறாள். இந்த நிம்மதியையும் கலைத்து விடுவாள் போலிருக்கிறதே.



அன்று இரவு சாப்பாட்டுக்குப் பின் பெட்ரூமில் மனைவியின் வரவுக்கு — அவள் ஆரம்பிக்கப்போகும் யுத்தத்துக்குத் தயாராகவே காத்திருந்தான்.

அவனுடைய உள்ளம் கொல்லனின் உலைக்களமாய்க் கனன்று கொண்டிருந்தது. மெட்டியின் சப்தத்தில் மனைவியின் வருகையை உணர்ந்தான். கண்களைத் திறக்கவில்லை, அவன்.

தாளவில்லை — அவனுடைய அலட்சியம் பிரேமாவுக்கு. வெடித்து விட்டாள்.

''உங்கம்மா இன்னிக்குப் பேசியது கேட்டீங்களா...''

''உஷ்... உன் வியாக்கியானம் எனக்குத் தேவையில்லை. எதையும் அனுசரிச்சுப் போறதுதான் குடும்பம். சின்னதை யெல்லாம் பெரிசு படுத்தறது அழகல்ல'' பட்டென்று சொன்னான் அவன்.

''ஆமாம்... என்னைத்தான் சொல்வீர்கள். உங்கம்மா சொல்றதெல்லாம் சாதாரணம் தான். நான் பேசறது துடுக்குத்தனம்...'' கண்களின் வழியே வருணாஸ்திரத்தை வரவழைத்துப் பிரயோகித்தாள்.

''பிரேமா... என் அம்மா என்ன சொல்லி விருப்பாள்? என் சௌகரியத்துக்கு, என் உடல் நலத்துக்குத்தானே சொல்லி யிருப்பாள். தாயோட இயல்பே அதுதான். உனக்கு அது புரியாது இப்போ. சீனுவும் கோபுவும் பெரியவனானப்புறம் அவர்களுக்குப் பார்த்து பார்த்துப் பண்ணுவியே அப்போதுதான் புரியும் தாயோட அன்புக்கு எல்லையே இல்லைன்னு...''

''உங்களுக்கு என்மீது அன்பு இருந்தால் தானே. நான் உங்களுக்கு இரண்டாம் பட்சம்தான். பண்ணிப் போட்ற சமையல் காரி... போகத்துக்கு வர்ற தாசி. பிள்ளை பெறுகிற மிஷின்... இருந்தாயா செத்தாயான்னு கேக்க நாதியில்லை எனக்கு... நான் தான் அநாதை இந்த வீட்டில். ''தலையணையை எடுத்துத் தரையில் பொத்தென்று போட்டுப் படுத்துக் கொண்டாள்.

''தரையில் போய் படுத்து விட்டால் உடனே வந்து 'ஈ'யின்னு இளிச்சு உன் காலைப் பிடிப்பேன்னு நினைக்காதே. நான் ஆண்பிள்ளை. வீம்பு பிடித்தால் உன்னைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் இருக்க முடியும். ஏன் — வெளியே போய்க்கூடச் சுகம் காண முடியும். அதற்கு மனைவின்னு பந்தம்தான் வேணும்னு இடையாது. அதனாலே உனக்கு துரோகம்னு எனக்கு உறுத்தறதை விட என் அம்மாவுக்குப் பிள்ளையாக மாட்டேன்னு தான் நினைக்கிறேன். மனைவியோட அன்பிலேயும் அனுசரிப்பிலேயும்தான் ஒருவன் நல்லவனாகிறதும், கெட்டவனாகிறதும். வீம்பு பிடித்தால் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டேன்...''

விண்ணென்று கோபம் தலைக்கு ஏறத் திரும்பிப் படுத்துக் கொண்டான். 'திக்'கென்று இருந்தது பிரேமாவுக்கு. கணவன் இந்த மாதிரி கோபத்தில் கத்துவது இது தான் முதல் தடவை. ஆனாலும் 'பார்ப்போம் அதையும்தான்' என்ற அடமும் அவளுள் எழுந்தது.

மகனும் மருமகளும் ஒருவருடன் ஒருவர் பேசாது இருப்பதை பார்வதமும் கவனித்தாள்.

எல்லாம் தன்னால்தான் — தான்தான் இருவரும் பரஸ்பர அன்புடன் இருக்க இடைஞ்சலாய் — பானகத்தில் விழுந்த எறும்பாய் இருக்கிறோம் என்று உறுத்தியது.

காசிப் பயணம் அவளுடைய இக்கட்டான நிலைக்கு உதவியது. எப்படியாவது கொஞ்சம் விலகிப் போவோமே. தன்னால் தன் மகனுக்கும் எதற்கு மனக் கஷ்டம்? அவன் நிம்மதியாய் மனைவியுடன் சந்தோஷமாய் வாழணும். வேறு என்ன வேண்டும் அவளுக்கு?

அவனிடம் தன் எண்ணத்தைச் சொன்னபோது அவன் தவித்துப் போய்விட்டான்.

எதற்கு அம்மா திடீரென்றுபுறப்படுகிறாள். தங்கள் மனத்தாங்கலை மாற்றவா?

எவ்வளவோ முயற்சித்தும் அவனால் அவளை நிறுத்தமுடியவில்லை. தாயின் பிடிவாதம் அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவ்வளவு தூரம் அவளது மனம் அலண்டு போயிருக்கிறது.

அதற்குக் காரணமான மனைவியை மனதுள் திட்டினான், சபித்தான்.

சரி — காசிப் பயணத்துக்கு அம்மா ஆசைப்பட்டுவிட்டாள். பயணத்துக்கு வேண்டிய பணம்?

பிரேமாவிடம் கொஞ்சம் பணம் இருக்கிறது. அவன் கொடுக்கின்ற பணத்தில் மிச்சம் பிடித்துச் சேர்த்து வைத்திருக்கிறாள். முத்துக் கம்மல் பண்ண வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தாள். கொடுக்கட்டுமே. தான் கொடுத்த பணம்தானே!

பிரேமாவிடம் கேட்டபோது பிடிவாதமாய்க் கொடுக்க முடியாது என்ற பதில்தான் வந்தது.

---

குழந்தைகளுக்கு முகத்தைச் சுளிக்கவோ, நெற்றியைச் சுருக்கவோ, புருவத்தை நெறிக்கவோ, கண்களை உருட்டி விழிக்கவோ, நாக்கை நீட்டிக் காட்டவோ சொல்லிக் கொடுக்கக்கூடாது. இதனால் குழந்தைகளின் முக அழகும் முக அமைப்பும் மாறி அழகு கெட்டுவிடும்.

- ஏ. வி. தேவன்



''இப்போது இவ்வளவு செலவு பண்ணிக் காசிக்குப் போகணுமா என்ன? அப்படி என்ன பண்ணிவிட்டேன் இருக்க முடியாமல் புறப்பட...'' என்று கணவனிடம் இரைந்தாள்.

'பத்து நாட்களில் திரும்பி வருகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போன அம்மா இன்னும் ஏன் திரும்பவில்லை?'

பகீர் என்றது. இருபது நாட்களுக்கு மேல் ஓடிவிட்டது.

டூரிஸ்ட் பஸ் திரும்பி வந்த அன்று அவன் அம்மாவை அழைத்து வரச் சென்றபோது ஏமாற்றம்தான் மிஞ்சியது. அம்மாவை அந்த பஸ்ஸில் காணோம்.

ஒரு பெரியவர் சொன்ன பதில் அவனுக்கு வியப்பைத் தந்தது. ''யாரோ தெரிந்த சொந்தக்காரர் காசியில் இருக்கிறார்களாம். இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்துவிட்டு வருகிறேன் என்றார்கள். உங்களிடம் சொல்லச் சொன்னார்கள்.''

அம்மாவுக்குச் சொந்தக்காரர்களா? அப்படி யாரும் இல்லையே? அதுவும் காசியில்—அப்பா வழி சொந்தமாய் இருக்குமோ? என்று குழம்பினாலும், 'நல்ல வேளை தெரிந்தவர்கள் துணையாவது கிடைத்ததே அம்மாவுக்கு' என்று நிம்மதி யடைந்தான்.

அம்மாவுக்குக் கடிதம் எழுத வராது. தெரிந்திருந்தால் கடிதத்திலாவது அது யார் என்று எழுதியிருப்பாள்.

என்றைக்கு வருகிறாள் என்று தெரியாதே. தனியாய் வீட்டுக்கு வர அவளுக்குத் தெரியாதே. அட்ரஸ் என்னவோ தெரியும். யாரையாவது விட்டுக் கடிதம் எழுதித் தெரிவிப்பாள்.

இன்னும் பத்து நாட்களில் அம்மாவிடமிருந்து ஏதும் தகவல் வரவில்லையென்றால் தான் புறப்பட்டுவிடுவதாய் இருந்தான் அவன். மேலும் ஒரு வாரம் ஓடியபோது தபால்காரன் ஒரு கார்டு கொடுத்தபோது அவன் மகிழ்ச்சி யடைந்தான்.

அப்பாடா. கடைசியில் அம்மா தகவல் கொடுத்துவிட்டாள். என்றைக்கு வரப்போகிறாள் என்று அறிய ஆவலாய் படிக்க ஆரம்பித்தவன் அப்படியே அதிர்ச்சியில் உறைய ஆரம்பித்தான். யாரோ ஓர் ஊர் பெயர் அறியாத ஒருவரால் எழுதப்பட்ட கடிதம்.

ஐயா,

காசிக்கு வந்த யாத்திரிகன் நான். இந்தக் கடிதம் எழுதிய காரணம் என்னவெனில், தங்களுடைய தாயார் ஸ்ரீமதி பார்வதம்மாள் சென்ற திங்கட் கிழமையன்று சிவலோக ப்ராப்தி அடைந்தாள். அவருடைய பூத உடல் புனித கங்கையில் விடப்பட்டது. அதுவரையிலும் அவர் அனாதை என்று நினைத்து இருந்த சிலர் அவருடைய பையிலிருந்த தங்களுடைய முகவரியைக் கண்டவுடன் ஒரு மகன் இருக்கிறான் என்று உணர்ந்து இந்தச் செய்தியை அனுப்பக் கடமைப்பட்டவராய் என்னை விட்டு எழுதச் சொன்னார்கள். இந்தத் துக்கச் செய்தியைத் தெரிவிக்கும் நிலை எனக்கு வந்ததே என்று வருந்துகிறேன். துக்கத்தை ஏற்றுக்கொள்ளும் மன வலிமை இறைவன் உங்களுக்கு கொடுக்கட்டும் என்று வேண்டும்

கஸ்தூரி ரங்கன்

''அம்மா.... அலறிவிட்டான் அவன்.

அவன் அலறலைக் கேட்டு உள்ளிருந்து பிரேமாவும் குழந்தைகளும் ஓடி வந்துவிட்டனர்.

''என்ன...என்னங்க விஷயம்?'' பதறினாள் பிரேமா..

பதில் பேசவில்லை அவன். முகத்தை மூடிக்கொண்டு விம்மி அழுதான்.

கடிதத்தைப் படித்துவிட்டு ''ஐயோ'' என்று அழத் துவங்கினாள் பிரேமா.

சட்டென்று நிமிர்ந்து மனைவியை வெறுப்புடன் வெறித்துப் பார்த்தான்.

'நீதான் — நீயேதான் அவள் சாவுக்கு—அனாதையாய் இறந்ததற்குக் காரணம்'

உள்ளுக்குள் நடுநடுங்கினாள். உண்மையில் தான்தானே காரணம். இல்லாவிட்டால் இங்கே நன்றாய் இருந்திருப்பாளே. அப்படியே இறந்தாலும் மகனின் மடியில்தான் இறந்திருப்பாள். முதன் முதலில் அவளுடைய அகங்காரத்தில், வீறாப்பில் நன்றாய் அடி விழுந்தது.

அப்போதுதான் உணர்ந்தாள், தான் எத்தகைய தவற்றைச் செய்திருக்கிறோம் என்று. தவறு—இல்லை, பாவம்.... ஏழேழு ஜென்மங்கள் எடுத்தாலும் தீராத பாவம்.

தாயையும் பிள்ளையையும் பிரித்த பாவம்.

தாயை அனாதையாய் இறக்கவிட்ட பாவம் மகனை அன்னை இழந்து, அவளுக்கு — அவளுடைய உடலுக்குச் செய்யவேண்டியகிரியை கூடச் செய்ய விடாமல் பண்ணின பாவம்.



''உங்களுக்கு எதிர்பாராத விதமாக, கை, கால்களில் சிறு வெட்டுக் காயங்கள் ஏற்பட்டால் உடனே மருதாணியை அரைத்து, இரண்டு நாட்களுக்கு அதன் மீது தடவி வந்தால் காயம் மறைந்து விடும்! - ராஜிராதா

தாய் எப்படித் துடித்தாளோ — மகனைக் கடைசி நேரத்தில் காண முடியாமல்.

இங்கே மகன் உள்ளுக்குள் எப்படித் தவிக்கிறாரோ — கடைசி நேரத்திம் தாயை முக தரிசனம் பண்ணவில்லையே என்று.

தான் எத்தனை கொடூரமானவள் என்று அந்த நிமிடத்தில் உணர்ந்தாள்.

இதோ — இந்தச் சீனுவும் கோபுவும் என்னுடைய சாகும் காலத்தில் அருகில் இல்லா விட்டால் நான் என்னமாய்த் துடி துடித்துப் போவேன். அப்போது தன் மாமியார் பேசும் வார்த்தைகளைச் சாதாரண வார்த்தை



ஆஸ்துமாவை முறியடிக்கும் சக்தி வில்வ இலைகளுக்கு உண்டு. தினசரி காலையில் ஆறு வில்வ இலையில் மூன்று மிளகுகளை வைத்து வாயில் போட்டுக்கொண்டு நன்றாக மென்று சாப்பிட வேண்டும். உடனே ஒரு டம்ளர் சுத்தமான பசும்பாலை சாப்பிட வேண்டும். இம்முறையை ஒருநாள் விடாமல் ஒரு மண்டலம் பின்பற்றினால் ஆஸ்துமா நோய் சிட்டாய்ப் பறந்துவிடும்.

- மகேஸ்வரி

களாய் எடுத்துக் கொள்ளாமல் அல்பத் தனமாய்ச் சண்டை போட்டோமே... ஏதாவது அறிவுரை சொன்னால் கொடூர வார்த்தைகளாய், நினைத்து கணவனிடம் குறை கூறினேமே இனிமேல் தன்னைக் கணவர் மன்னிப்பாரா? — வாழ்நாள் பூரா நீதான் காரணம் என்று கொட்டுவாரே...

அம்மா இறந்து மூன்று நாட்கள் ஆகி விட்டன. அவனுக்குத் தெரியவில்லை. அம்மாவுடைய காரியத்தை இங்கேயே பண்ணலாமா? காசிக்கே போய்ப் பண்ணணுமா? எந்த சாஸ்திரிகளை அழைப்பது?

சட்டென்று சுவாமிநாத சாஸ்திரிகளின் ஞாபகம் வந்தது. தன் தந்தையின் திவசத்துக்கு ஒரு முறை வந்தவர். பக்கத்துத் தெருவிலேதான் இருக்கிறார்.

சட்டென்று சட்டையை மாட்டிக் கொண்டான்.

''வெளியே போகிறீர்களா?'' எங்கே போகிறீர்கள் என்று கேட்கக் கூடாது என்று இப்படிக் கேட்டாள் பிரேமா.

ஆமாம் என்று தலையாட்டினான்.

ஓடிப்போய் தன்னிடமிருந்த பணத்தைக் கொண்டு வந்து அவனிடம் நீட்டினாள்.

'என்ன?' என்று அவளைப் பார்த்தான்.

''இப்பப் பணம் தேவைப்படுமோன்னு'' தயங்கினாள் அவள்.

''நீயே வைத்துக்கொள்... முத்துத் தோடு வாங்க உனக்கு வேணும். என் அம்மா காரியத்துக்கு என் நண்பனிடம் இருந்து வாங்கிக்கொள்கிறேன்.''

ஊசியாய் வார்த்தைகளை வீசிவிட்டு விருட்டென்று வெளியேறினான்.

''ஸ்வாமி....!''

திரும்பினார் சாஸ்திரிகள். ''யாரது... அடேடே நீயா. வாப்பா. உள்ளே வா. நானே உன்னைப் பார்க்க வரணும்னு இருந்தேன். இப்போதுதான் நான் காசியிலிருந்து திரும்பினேன். ஏம்பா, நீயெல்லாம் ஒரு பிள்ளையா? தாயை வைத்துக் காப்பாத்தாதவங்க என்ன குடும்பம் நடத்தி என்ன பிரயோசனம்? பெண்டாட்டி வந்துட்டா தாய் பாரமாயிடுவாளா? அனாதையாய் அவளை அனுப்பிட்டு இங்கு அப்படிச் சந்தோஷமாய், சல்லாபமாய் வாழாட்டி என்ன?

அங்கு போய்ப் பார்க்க வேணும்... என்னால் தாளவே முடியவில்லே. முந்தாநேற்று எனக்குத் தெரிந்தவா வீட்டுக்குப் போயிருந்த போது எதிர் வீட்டில் இட்டிலிக்கு அரைத்துக் கொண்டிருக்கிறாள் உன் அம்மா. யாரோ பார்த்த மாதிரி இருக்கிறதே என்று கவனிக்கிறேன். உன் தாயார்தான். என் சந்தேகத்தை நிவர்த்தி செய்ய என் நண்பரைக் கேட்டேன். 'யாரோ பாவம் அநாதை. தமிழ் நாட்டில் இருந்து வந்திருக்கிறாள். எல்லோர் வீட்டிலும் மங்கு மங்கு என்று உழைத்து, நாலணா, எட்டணா சம்பாதித்துச் சாப்பிடுகிறாள்.' என்றாரே பார்க்கலாம்.

எனக்கு ஒரே ஆத்திரம் உன்மேல். உன் அம்மாவிடம் போய்ப் பேசி அழைத்து வரலாமா என்று நினைத்தேன். நான் பார்த்துட்டேன் என்று தெரிந்தால் கூனிக் குறுகி விடுவாளோன்னு ஒதுங்கிட்டேன்.

லோகத்திலே எதுவுமே கிடைச்சுடும்பா — ராகவா. ஆனா தாய் மட்டும் கிடைக்கவே மாட்டா. அவளை மட்டும் இடைஞ்சலாய்— பாரமாய் எண்ணிக்குமே நினைக்கவே கூடாது. அவளை முதுகிலே நாள் பூரா சுமந்துட்டு வருஷம் பூரா ஏன் வாழ்நாள் பூரா சுமந்துட்டு இருந்தாலும் நீ இருந்ததையே அவள் வயத்திலே, அந்தப் பத்து மாசக் கணக்கை நீ சுலபமாய் தீர்க்க முடியாது... இனிமேலாவது....''

மலங்க மலங்க விழித்தான் ராகவன்.

''ஸார்... ஸார்... கொஞ்சம் இருங்க... என்ன சொன்னீர்கள்... என் அம்மாவை

உயிரோடு பார்த்தீர்களா... நிஜமாகவா... இறந்துவிடவில்லையா?...'' புல்லரித்துப் போனது உடம்பு. மனம் பறவையாய்ப் பறந்து காசிக்குப் போகத் துடித்தது.

''அடப் பாவி... அனாதையா விட்டது போதாதுன்னு அவள் சாகணும்னு பார்க்கிறயா? ... துன்மார்க்கா... பாவி....படு பாவி....'' சாபம் கொடுத்த சாஸ்திரிகளின் காலில் விழுந்தான் ராகவன்.

''ஐயோ சபிக்காதீர்கள். பெரியவாளோட சாபம் எனக்கு விழக் கூடாது. முழுவது மாகப் புரிந்து பேசணும் நீங்கள்.'' என்று சொன்னவன் எல்லாவற்றையும் விவரித்தான். கடிதத்தை எடுத்தும் காட்டினான்.

வியப்படைந்த சாஸ்திரிகள் ''இதில் ஏதோ தவறு நடந்திருக்கிறது. உன்னை என்னென்னமோ சொல்லிவிட்டேன். நீயும் எவ்வளவோ முயன்றிருக்கிறாய். உன் அம்மா தான் உறுதியாய்ப் புறப்பட்டிருக்கிறாள். உடனே புறப்பட்டுப் போய் உன் அம்மாவை அழைத்து வா. எல்லாம் நல்லது தான் நடக்கும். எல்லாம் தெய்வ சித்தம் தான், என்னைத் தேடிண்டு வந்திருக்கிறே. வேறேயார்கிட்டேபோயிருந்தாலும் உண்மை புரியாது காரியங்கள் பண்ண ஆரம்பிச்சிருப்பே. அப்புறம் பிராயச்சித்தம் வேறு பண்ண வேண்டி வந்திருக்கும். அம்மாவை அழைத்து வர சாக்கில் காசி விசுவநாதரைத் தரிசனம் பண்ணிண்டு வா'' என்றார்.

கங்கா ஜலத்துடன் மகிழ்ச்சியுடன், தாய் உயிருடன் இருக்கிறாள் என்ற ஆனந்தத்தில் வீட்டுக்குள் நுழைந்தான்.

''பிரேமா....'' மனைவியை அழைத்தான்.

ஓடிவந்தாள் அவள்.

''என்னங்க....''

''அம்மா காசியில் உயிருடன் இருக்கிறார். சுவாமிநாத சாஸ்திரிகள் பார்த்தார்களாம். நான் உடனே காசிக்குப் புறப்படுகிறேன். போய் லீவு லெட்டர் கொடுத்துட்டு வருகிறேன்.''

மாமியார் உயிருடன் இருக்கிறாள் என்ற செய்தி அவளைப் பரவசமூட்டியது. மகிழ்ச்சியில் திகைத்துப் போனாள்.

அப்பப்பா... இனிமேல் மாமியாரை எதுவும் சொல்லக் கூடாது. தாயாரைப் போல் கவனிக்கணும். அப்போதுதான் கணவனின் உண்மையான அன்பும், மாமியாரின் ஆசியும் கிடைக்கும். தான் நடந்து கொண்ட விதத்துக்குப் பிராயச்சித்தம்.

கணவனின் துணிகளைப் பெட்டியில் அடுக்கி வைத்துவிட்டு, மாமியாருடைய கம்பளியையும், 'ஷாலை'யும் பத்திரமாய் — ஞாபகமாய் உள்ளுக்குள் மடித்து வைத்தாள்.

கணவன் புறப்படும்போது மறுபடியும்— இரண்டாவது முறையாய் பணத்தை அவனிடம் நீட்டினாள். அவன் பேசும் முன்னே,

''வேண்டாம்என்றுசொல்லாதீர்கள்..அது நூறாயிரம் ஊசிகளாய் என்னைத் தைக்கிறது. தயவு செய்து வாங்கிக் கொள்ளுங்கள். நான் செய்த தவறெல்லாம் நீங்களும் அம்மாவும் மன்னிக்கணும். இந்த ரூபாயிலே அம்மாவுக்கு என்ன வேண்டுமோ — என்னவெல்லாம் வாங்கித் தரணும்னு உங்களுக்குத் தோணறதோ எல்லாம் வாங்கிக் கொடுங்கள். அவரை வசதியாய் முதல் வகுப்பில் கூட்டிக் கொண்டு வாருங்கள். அப்புறம் இதில் நூறு ரூபாயை ஸ்வாமி உண்டியலில் போட்டு- விடுங்கள். நான் திருந்தியதற்கு அடையாளமாய் — அம்மா திரும்பிப் பத்திரமாய் வருவதற்குக் காணிக்கையாய்...'' தழுதழுத்த குரலில் கேட்டுக் கொண்டாள்.

கெஞ்சும் அவளது விழிகளும் — அவற்றில் தேங்கி நின்ற கண்ணீரும்...ராகவன் அவளை மன்னித்ததன் அடையாளமாய் அதை வாங்கிக் கொண்டபோது அவள் முகத்தில் எவ்வளவு குதூகலம்!

ஆமாம்! அவள் மாறிவிட்டாள் — முற்றிலும் மாறிவிட்டாள். இடையில் நடந்த சம்பவம் அவளுக்கு ஒரு அதிர்ச்சி வைத்தியமாய் — அவளது மன நோயைத் தீர்க்க வந்த கசப்பு மருந்தாய் வேலை செய்து அவளைத் திருத்தி விட்டதே!

அம்மா உயிருடன் இருக்கிறாள் என்ற செய்தி பாலாய் — பிரேமா முற்றிலும் மாறி ஆவலுடன் தன் தாயை எதிர்பார்க்கிறாள் என்ற உண்மை தேனாய் — அந்தப் பாலும் தேனுமாய் சேர்ந்து அவனது நெஞ்சைக் குளிர்வித்தது.



## மழலைப் பேச்சு!

புதிதாய் என் தம்பிப்பயல் கான்வெண்ட் சென்று வந்தான். 'டீச்சர் என்ன பாட்டு சொல்லித் தந்தார்கள்?' என்று கேட்டேன். அவன் பாடினான்,

''திங்க திங்க லட்டு சார்!
கல்விக் கொண்டார் வாத்தியார்!''

எனக்கு ஆச்சரியம்! இது என்ன பாட்டு? அதுவும் ஆங்கிலப் பள்ளியில்... பின் விசாரித்துப் பார்க்க, அப்பாட்டு ஆங்கிலப் பாட்டுதான் என்பது தெரிந்தது. என்ன பாட்டு என்கிறீர்களா?

''Twinkle Twinkle Little Star,
How I wonder what you are''?

என்ற பாடலைத்தான் அவன் தன் மழலையில் மாற்றி விட்டான். -ஏ. பாரதிசங்கர்

# நிருத்திய ரங்கா

ஒரு தாய் ஆவலுடன் தன் மகளுக்கு நாட்டியம் சொல்லிக் கொடுக்கிறாள். எந்தச் செலவையும் பொருட்படுத்தாமல், அதுவே மகளின் பிற்காலத் தொழில் என்றில்லாமல், அவளுக்கு அது ஒரு ஆரோக்கியமான பொழுது போக்கு என்ற நினைப்பில் நாட்டியம் சொல்லிக் கொடுக்கிறாள்.

பரதநாட்டியம் தினசரி செய்யப்படவேண்டிய ஒரு உடற்பயிற்சிதான் என்றாலும் கற்றுக் கொள்ளும் பெண்ணுக்கு உற்சாகமும் ஊக்கமும் தேவை இல்லையா?

அதற்கு என்ன வழி?

அந்த நாட்டியப் பெண்ணுக்கு மேடைக் கச்சேரி செய்ய வாய்ப்புக் கொடுப்பதுதான்.

எல்லா சபாக்காரர்களும் அந்த வாய்ப்பை எல்லா நாட்டியப் பெண்மணிகளுக்கும் கொடுத்து விடுகிறார்களா?

இல்லை. ஒவ்வொரு சபாக்காரரிடமாகப் போய்க் கேட்டு தன் மகளுக்கு வாய்ப்புத் தரச் சொல்லிக் கேட்பது, அந்த மகளுக்கு எந்த வகையில் பயனளிக்கக் கூடியதாக அமையும்?

அதற்குப் பதிலாக நாட்டியம் சொல்லிக் கொடுக்கும் தாய்மார்கள் அனைவரும் ஒன்றாய் இணைந்து தாமே ஒரு அமைப்பை உருவாக்கிக்கொண்டு மாதம் ஒரு நிகழ்ச்சி வீதம் தம் மகள்களுக்கு மேடைக் கச்சேரி செய்ய வாய்ப்பளித்து அவர்களுடைய திறமையை வெளிப்படுத்தலாமே!

அப்படித்தான் செய்கிறார்கள் 'நிருத்திய ரங்கா' குழுவினர்.

மாதா மாதம் இது போன்று நாட்டியம் பயிலும் மாணவிகளை ஊக்குவிப்பதோடு வருடந்தோறும் ஒரு சீனியர் நாட்டியக் கலைஞரை வரவழைத்து நாட்டிய நிகழ்ச்சி நடத்தித் தரச் சொல்லி, இளம் கலைஞர்களை ஆசிர்வதிக்கச் சொல்கிறார்கள்.

வெறும் நாட்டிய நிகழ்ச்சிகளுக்காக மட்டுமே உருவாக்கியுள்ள இந்தக் கலைக் குழு, மேலும் பல புதிய அம்சங்களை நாட்டியக் கலைஞர்களின் மேன்மைக்காக, அவர்கள் உயர்வுக்காகப் புகுத்தப் போகிறார்கள்.

1. நாட்டியத்தில் பாடங்கள் நடத்துதல் (தியரி).

2. நாட்டியம் சம்பந்தமான புத்தகங்கள் அடங்கிய நூல்நிலையம் அமைத்தல்.

3. டேப் செய்யப்பட்ட நாட்டிய இசை காஸெட்டுகள் சேகரித்தல்.

4. தகுதி வாய்ந்த மாணவிகளுக்கு உதவித் தொகை அளித்தல்.

6. ஆராய்ச்சி மாணவிகளுக்கு உதவித் தொகை வழங்குதல்.

7. வயதான ஏழை நாட்டியக் கலைஞர்களுக்கு உதவுதல்.

'நிருத்திய ரங்கா' குழுவின் காரியதரிசி திருமதி சுபத்ரா நடராசன் சுருங்கச் சொல்லி பல விஷயங்களை விளங்க வைத்தார்.

"வருடத்துக்கு ஒரு அங்கத்தினருக்குப் பத்து ரூபாய் சந்தா வசூலித்து, மேற்சொன்ன திட்டங்களை நிறைவேற்றுவது எவ்வளவு கடினம் என்பது அனைவருக்கும் தெரியும். நாட்டியக் கலையில் ஆர்வம் உள்ளவர்கள் இக்குழுவுக்கு நன்கொடை அளிப்பதன் மூலமாகவும், உறுப்பினராகச் சேருவதன் மூலமாகவும் ஓரளவு சிறப்பாக நிறைவேற்ற முடியும் இல்லையா?" என்று கேட்டார்.

நியாயம்தானே?

– பிரபு சங்கரி



# வால் ஹாங்கர் (Wall Hanger) – சியாமளா சுவாமிநாதன்

இது மிகவும் எளிய முறையில், குறைந்த செலவில் பார்க்க மிகவும் அழகானதாக இருக்கக் கூடியது.



**தேவையான பொருட்கள்:**

| | |
|---|---|
| கெட்டியான கம்பி (துணி உலர்த்த உபயோகிப்பது) | — 2 கால் மீட்டர் |
| குரோஷா காட்டன் நூல் டார்க்கலர் (30 - 35 பைசா விலையுடையது) | — 7 கண்டு |
| லைட் கலர் | — 3 கண்டு |
| கண்ணாடித் துண்டுகள் (டைமன் வடிவமுடையவை) | — 30 கிராம் |
| தங்கநிற மணிகள் (பெரியது) (முத்துக்கள்) | — சுமார் 200 |
| தங்க நிற பெல்கள் | — 14 |

முதலில் கம்பியை 14 சென்டி மீட்டர் நீளமுள்ள 20 துண்டுகளாக்கிக் கொள்ளவும். இரண்டு கம்பித் துண்டுகளை ஒன்றின்மீது ஒன்றாக (பிளஸ் வடிவில்) வைத்து நடுவில் டார்க் கலர் குரோஷா நூலினால் மிக இறுக்கமாகக் கட்டிக்கொள்ளவும். இரண்டு கம்பிகளும் மிகச் சரியாக நடுவில் பிணைக்கப்பட்டு 90 டிகிரியில் பிளஸ் வடிவில் இருக்க வேண்டும். நடுவில் இறுக்கப்பட்டதன் தொடர்ச்சியாகவே படம் 1ல் காட்டியுள்ளபடி 15லிருந்து 20 சுற்றுவரை இடைவெளி இல்லாமல் சுற்றி ஆரம்பித்த இடத்திலேயே வந்து பூகட்டுவது போல் கம்பியின் வழியாக முடிச்சிட்டு நிறுத்தவும். (ஒவ்வொரு கம்பியின் வழியாகவரும் போது பூகட்டுவது போன்று முடிச்சிட்டுச் சுற்றவும்).





15, 20 சுற்று ஆனபின் லைட் கலர் நூல் எடுத்து, கம்பியின் அடிபாகத்தில் டார்க் கலர் நூலின் அடியில் லைட் கலர் நூலை முடிச்சிட்டு ஆரம்பித்து, மீண்டும் முன்போலவே சரியாக 6 சுற்றுக்கள் வரும்வரை சுற்றி ஆரம்ப இடத்திலேயே முடிக்கவும். (நூல்களை அறுக்கவேண்டிய தேவையில்லை) இது போன்றே டார்க், லைட் கலர்களை மாற்றி மாற்றிச் சுற்றி இறுதியில் கம்பியின் கடைசியில் டார்க் கலர் வருமாறு சுற்றி முடிச்சிட்டு முடிக்கவும். கம்பியின் இறுதியில் படம் 2ல் காட்டியுள்ளபடி ஒரு சென்டி மீட்டருக்குக் குறையாமல் இடமிருக்கவேண்டும். இது போன்றே மீதமுள்ள எல்லாக் கம்பிகளையும் செய்து கொள்ள வேண்டும். பத்து சதுரங்கள் கிடைக்கும். ஒரு வால் ஹாங்கருக்கு 5 தேவையாகும். இரண்டு சதுரங்களை எடுத்துக்கொண்டு படம் 3ல் காட்டியுள்ளபடி டார்க் கலர் நூலால் இணைப்புத் தெரியாத வண்ணம் கம்பியை ஒன்றின் மீது ஒன்றாக வைத்து மிக இறுக்கமாகக் கட்டிவிட வேண்டும். கொஞ்சம்

அதிகமாக விட்டிருக்கும் கம்பியில் இணைத்தால் போதுமானது. பின் அலங்காரமாகக் கண்ணாடித் துண்டுகளைப் படத்தில் காட்டியுள்ளபடியோ, அவரவர் கற்பனைக்கேற்றபடியோ ஃபெவிகால் வைத்து (கண்ணாடியின் பின்புறத்தில் தடவ வேண்டும்) ஒட்டிவிட வேண்டும். கடைசியாக ஊசியுடன் கூடிய நூலின் இறுதியில் தங்கநிற மணியைக் கோர்த்து அதன் மீது 10 தங்க நிற மணிகள் கோர்த்து சதுரங்களின் பக்கவாட்டில் தொங்குவது போன்று ஊஞ்சலாகக் கட்டிவிட வேண்டும். முதல் இரண்டு சதுரங்களை (ஒன்றின் கீழ் ஒன்றாக இருப்பவை) கீழேயுள்ள 3 சதுரங்களுடன் இணைக்கும்போது சற்று கவனத்துடன் அவை ஒரே நேர்க் கோட்டில் அமையுமாறு தங்க நிற மணிகளைக் கோர்த்து இணைக்க வேண்டும். பின் ஆணியில் மாட்டுவதற்காக மேலேயுள்ள சதுரத்தின் மேல் கம்பியில் 5, 6 மணிகள் கோர்த்து ஒரு வளையம் உண்டாக்கவும்.

இது வரவேற்பறையின் வாசலில் இரண்டு பக்கங்களிலும் வைக்க மிக அழகாக இருக்கும்.

இதன் செலவு இரண்டுக்குமாக 18 முதல் 20 ரூபாய் ஆகிறது.

எங்கள் வீட்டுக்கு வரும் நண்பர்கள் இது எங்கே கிடைக்கிறது? எங்கே வாங்கினாய்? என்று மிகவும் ஆச்சரியத்துடன் கேட்கிறார்கள்.

# அக்காவை விஞ்சிய தங்கை!

சென்னையில் நடைபெறும் டேபிள் டென்னிஸ் பெண்களுக்கான இறுதிப் பந்தயங்களில் வருமான வரி இலாகா ஆட்டக்காரி வித்யாவும் எத்திராஜ் கல்லூரி மாணவி விஜயலக்ஷ்மியும் வெற்றிக் கோட்டையைப் பிடிக்க உக்ரமாக ஆடுவதை ரசிகர்கள் பார்த்து அதிசயித்தனர்.

சென்னை பிராட்வேயில் நடைபெற்ற டான் பாஸ்கோ பந்தயத்தில் விஜயலக்ஷ்மி வெற்றிக் கொடியை உயர்த்தி அக்காவை விஞ்சிய தங்கையானாள். 3–1 ஸ்கோரில் விஜயலக்ஷ்மிக்குக் கிடைத்த வெற்றி தனிச் சிறப்பு! தமிழகத்தில் பெண் ஆட்டக்காரிகளில் முதல் இடம் வகிக்கும் வித்யாவை அல்லவா ஜயித்திருக்கிறாள்! இந்த வருஷம் இருதடவை விஜயலக்ஷ்மி இந்த வெற்றியை ஊர்ஜிதப்படுத்தி இருக்கிறாள்.



வித்யா — விஜயலக்ஷ்மி

விஜயலக்ஷ்மி நெடிதுயர்ந்த உருவம்; எத்திராஜ் கல்லூரி பி. காம் இரண்டாவது வருட மாணவி. விளையாட்டு மைதானப் பண்பாட்டுக்காகத் தங்கப் பதக்கம் சூடியவள். லேடி சிவஸ்வாமி உயர்நிலை பள்ளி மாணவியாக மூன்று வருஷங்கள் பள்ளி மாணவிகள் டேபிள் டென்னிஸ் குழுவுக்குக் காப்டன். 'திறமைசாலி மாணவி' ஷீல்டு பெற்றவள். பரத நாட்டியத்திலும் விஜயலக்ஷ்மிக்குத் தேர்ச்சி உண்டு. இவளது தகப்பனார் பாலு கால் பந்தாட்ட வீரர்.

தமிழக டேபிள் டென்னிஸ் வெற்றி வீராங்கனை விஜயலட்சுமிக்கு அகில இந்திய ரீதியில் வெற்றி வாய்ப்புக்கள் எய்த எதிர்காலத்தில் சிறப்புடன் மிளிர வாழ்த்துகிறோம்.

அட்டையில்: வித்யா—விஜயலக்ஷ்மி

வண்ணப் படம்: பி. இ. ரமணன்

Regd. No. TN MS (S) 231